உ

# அம்பலவாணவேந்தல் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி கோயில் ஸ்தல புராணம்





பொன்முடி பதிப்பகம்

அ. குமாரசாமி உடையார்

உ

சிவமயம்

# அம்பலவாணனேந்தல் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி கோவில் ஸ்தல புராணம்






ஆசிரியர் :

அ. குமாரசாமி உடையார்

(1984-ல் கண்டனூர் அரசு மருத்துவமனையில்
இருந்தபொழுது எழுதியது)

வெளியீடு :

**பொன்முடி பதிப்பகம்**

123, முத்துப்பட்டணம் மூன்றாம் தெரு
காரைக்குடி, ப.மு. மாவட்டம்
630001 போன் : 22124

31-2

"பொற்கிழிக் கவிஞர்" "காசிஸ்ரீ"

அரு. சோமசுந்தரன் M.A.B.T, வழங்கிய

# அணிந்துரை

புகழ்மிக்க ஆவுடையார் கோவில் (திருப்பெருந்துறை) அருகில் உள்ள அம்பலவாணன் ஏந்தல் இன்று ஒரு புராணத்தைப் பெறுகிறது. ஆவுடையார் கோவில் மாணிக்கவாசகரால் சிவபுராணம் பெற்றது. இன்று அம்பலவாணனேந்தல் அ. குமாரசாமி உடையார் என்னும் பக்தரால் ஸ்தல புராணம் பெறுகிறது.

அம்பலவாணன் ஏந்தலில் உள்ள ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி கோவில் 19-ஆம் நூற்றாண்டில் அருணாசல உடையார் என்ற பக்தரால் உருவாகியது. பழநிமலை முருகன் அவரது பக்திக்கு இரங்கி, மலையிறங்கி அம்பலவாணன் ஏந்தல் என்ற குக்கிராமத்திற்கு வந்து சிறு குடிலில் கோயில் கொண்டான். தண்ணீரில் விளக்கெரிய வைத்துப் பெரிய புராண காலத்தை நினைவு படுத்தினான். ஏராளமான திருவிளையாடல்களைச் செய்து எல்லோரின் மனத்திலும் இடம் பெற்றான்.

உழவுத் தொழில் செய்யும் ஏழை உடையார் மக்கள் பக்தி சிரத்தையோடு செய்த தொண்டுகளை நினைத்தால் மனம் நிறைகிறது. அவர்கள் தம் ஒப்பற்ற உழைப்பால் 1936-ஆம் ஆண்டில் கல் திருப்பணி செய்து கோயில் கட்டிக் கும்பாபிஷேகம் செய்தனர். அடியேன் பிறந்தது 1936-ஆம் ஆண்டு.

இக்கோயில் உருவான ஸ்தல வரலாற்றை மெய்யன்பர் திரு. அ. குமாரசாமி உடையார் உள்ளம் உருக்கும் வகையில் எழுதி உள்ளார். இக்கோயிலுக்கு அடிமைப்பட்ட குடும்பத்தில் தோன்றிய இவர் இந்த ஸ்தல புராணத்தின் மூலம் அடியேனையும் இக்கோயிலுக்கு அடிமையாக்கி விட்டார். இந்நூலைப் படித்த பொழுது நான் வியந்தேன்; அழுதேன். மகிழ்ந்தேன். எல்லாமும் ஆனேன்.

இக்கோயில் உருவான பொழுது அங்கு கந்த புராண உபன்யாசம் செய்துள்ளார்கள். அடியேன் புதுவயல் ஸ்ரீ கைலாச விநாயகர் கோவிலில் 'கந்த புராணம் தொடர் சொற்பொழிவு'' நிகழ்த்திய பொழுது அதனை ஒலிப்பதிவு செய்து அம்பலவாணன் ஏந்தல் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி கோவில் திருவிழாக்களில் ஒலிபரப்பச் செய்தவர் திரு. குமாரசாமி உடையார். அவர் என்னை அடிக்கடி சந்தித்து இக்கோயில் பற்றிப் பேசுவார். மேலும் கல் திருப்பணியை விரிவு செய்து இன்றும் திருத்தொண்டு செய்து வருகிறார். அவரும் அவரது மைந்தர்களும் உள்ளூர் அன்பர்களும் கோயில் அறங்காவலர்களும் சிரமம் கருதாது இக்கோவிலுக்கு வாரி வழங்கித் திருத்தொண்டு செய்து வருகின்றனர். இங்கு நடைபெறும் திருப்பணி விரைவில் பூர்த்தி பெற இறையருளை இறைஞ்சுகிறேன்,

ஒப்பற்ற இக்கோயிலின் ஸ்தல புராணத்தை முற்றிலும் படித்துத் திருத்தம் செய்து வெளியிடும் பொறுப்பை அடியேனிடம் அ. குமாரசாமி உடையார் ஒப்படைத்தார். இதனைப் படித்து முடித்த பொழுது இக்கோவிலை இது

வரை வணங்கும் பாக்கியம் கிடைக்காதிருந்ததே என்று மனமார வருந்தினேன். இப்பொழுதாவது கிடைத்ததே என்று மனநிறைவு கொண்டேன். இந்நூலை வெளியிடுவதன் மூலம் எங்கள் பொன்முடி பதிப்பகம் ஒரு பெரும் கைங்கரியத்தைச் செய்வதாக உணர்கிறேன். இவர்களது திருத்தொண்டில் என்னையும் இணைத்துக் கொள்வதில் பெருமைப்படுகிறேன்.

இந்நூலைப் படிப்போரும் இக்கோவிலை வணங்குவோரும் பழநி முருகனின் அருளுக்குப் பாத்திரம் ஆகின்றனர். பழநிமலைக்கு முதலில் பாத யாத்திரை சென்றேன். பிறகு திருச்செந்தூருக்குப் பாதயாத்திரை சென்றேன். அதன்பின் மற்ற நான்கு படை வீடுகட்கும் பாதயாத்திரை சென்று வந்தேன். நிறைவாக இராமேஸ்வரத்தில் இருந்து காசிக்குப் பாதயாத்திரை சென்று வந்தேன். எல்லாம் அந்தப் பழநிமலை முருகனின் திருவருள். அவன் அருளால் அம்பலவாணனேந்தல் கோவில் ராஜகோபுரத் திருப்பணி இனிதே பூர்த்தி பெற அவன் திருவடி வணங்கி அனைவர்க்கும் அவன் அருள் கிட்டப் பிரார்த்திக்கிறேன்.

—**அரு. சோமசுந்தரன்**

# பொருளடக்கம்

உ

சிவமயம்

# இறைவணக்கம்

## விநாயகர்

மங்கள வம்பல வாணன் திருப்பதி வாழுவலச்
செங்கையி நேந்துதண் டாயுதமூர்த்தி திருவடியிற்
றுங்கவி யிற்றமிழ்ப் பாமாலைசூட்டத் துணைபுரியும்
ஐங்கர வாரண மாமுக ஞானவருளிறையே.

---

நினைத்த வடிவெடுக்கும் நீலவண்ணன் மால்மருகா
சுனைத்தண்ணீ ரோரஞ்சென்ற சுந்தர—உனைத்துதித்தேன்
அம்பலவா ணனேந்தல் அறுமுகன்மேல் கதை எழுத
நம்பனவன் றான்யெனையே காடு.

---

அல்லல்போம் வல்வினைபோம் அன்னை வயிற்றிற் பிறந்த
தொல்லைபோம் போகாத் துயரம்போம் நல்ல
குணமதிக மாமருணைக் கோபுரத்துள் வீற்றிருக்குஞ்
செல்வக் கணபதியைக் கைதொழுதக் கால்,

சுடரிலகு மணிமவுலி மதிமுகந் தன்கருணை
 சொரிவிழிக ளிருசெவி யினிற்
னோற்றுகுண் டலம்நுதற் றிலதம்ஒங் காரவுரை
 சொற்றசெங் குமுதமலர்வாய்

வடகிரிநி கர்த்தபுய நான்குவச் சிரமபயம்
 வரதந்திரி சூலக்கரம்
மார்பிலுப வீதமின் துலமலரிப் படலைபொன்
 வஸ்திர பூஷணம் வயங்க

அடல்பெருகு குறவர்குல வள்ளிகுஞ் சரியம்மை
 யருகினிரு பாலுமருவ
அணிகலப மயில்வாகனா ரூடராய்ச் சக்தி
 யயிலேந்தி யனவரதமுந்

திடவீர வாகுமுத லோர்சூழ வற்புதத்
 திருவுலாக் காட்சிநல்கிச்
சேவைபுரி வேல்இஷ்ட சித்திகள் வழங்கியே
 திருவேட்ட ராமன்வயலாய்க்

கடலுலக மேத்துமம் பலவாண னேந்தலின்
 கண்மகிழ்ந் துறையுமிறையே
கந்தனே கவுரியுமை மைந்தனே யருள் செய்சிங்
 காரவடிவேற் கடவுளே

மாமேவு தண்கருணை மதிவதன முஞ்சிகையும்
 வாரிச மலர்க்கண்களும்
வண்ணவெண் ணீற்றையுத் தூளனஞ் செய்நுதலும்
 மனனுப வீதமார்பும்

நாமேவு சூட்சபஞ் சாட்சரத் துண்மையை
நவிற்றுசெம் பவளவாயும்
நறியலங் கோடு கௌபீனமுந் துடைமீதி
னண்ணலுரு மிடதுகரமும்

காமேவு தண்டாயு தம்பிடித் தொளிர்வலக்
கரதலமு மிலகநடனக்
கலபமயி லிவர்மலர்க் கழலிணையை யடிமையான்
கண்டுதெரி சிப்பதென்றோ

தேமேவு குடிலைமெய்ப் பொருளினை விளங்கவுப
தேசித்த பரமகுருவே
திகழுமம் பலவாண நகர் மகிழ்ந் தருண்ஞான
தெண்டாயு தக்கடவுளே

மன்னுமதி யாரல்தேட் டிங்கிளிற் பூரணையும்
வருதிருக் கார்த்திகைபுகர்
வாரம்வளர் சஷ்டியுத் திருவிழாத் தைபூசம்
மருவுதிரு நாட்சி னகரந்

தன்னில்நெய்த் தீபமபி ஷேகமற் சனையன்ன
தானமிவை செய்விரதியர்
தனதனென வனவரத திருவுடைய ராய்மவுலி
தாங்குநர பதிகளாவார்

என்னமறை யாகமமி யம்பும்நினை யலதுகதி
யில்லைவே றெனநம்பினேன்
இருதய மொருப்படுமெ யுன்பும்அறி வுந்திருவும்
யீந்தடிமை கொண்டருளுவாய்

சென்னியா றுடையசிவ பாலனே வேலனே
தேசிகோத் தமசீலனே
திகழுமம் பலவா ண நகர்மகிழ் தருஞான
தெண்டாயுதக் கடவுளே

குருபரன் கோவில்மேல் பார்சர வணத்திருக்
குளமதி லிறங்கிநீரிற்
குடிலையை வரைந்திருகை கூப்பிக் குளித்தபின்
கோதில்திரு நீறெடுத்துச்

சரவணபவா குமரகுரவ நமவோமெனச்
சாற்றிநுத லினிலணிந்து
தளிவலஞ் செய்துதைப் பூசநாட்டிரு முன்பு
தரிசித்து வேண்டுமன்பர்

பொருவரிய தனதானி யாதிசௌ பாக்கியம்
புத்திரப் பேறுவிஜயம்
புகழோங்க நோயற்ற தீர்க்காயு ளுடையராய்ப்
புருகூத னென்னவாழத்

திருவருள்செய் சிவகிரித் தெய்வமே நின்மகிமை
செப்பவென் னாலாகுமோ
திகழும்அம் பலவாண நகர்மகிழ்ந் தருள்ஞான
தெண்டாயு தக்கடவுளே

வானவர் கணங்களொடு மாலயன் புருகூதன்
வந்தனை புரிந்து வாழ்த்த
வாத்தியமு ழங்கவீரு மறையோத நவவீரர்
வழிபாடு செய்துநிற்பப்

பானுவை மறைத்தொளி செய்குடை கொடி சுருட்டியிரு
பாலுமடி யவரெடுப்பப்
பராக்கிகச் சரிக்கையென வல்லிடும் பன்கதா
பாணியா யேவல் கேட்ப

மீனமதி யுத்திரத் திருநாளின் மயிலூர்ந்து
மின்னார்க ளிருவர்களுடன்
வேலேந்தி யணிவிழாக் கொண்டுசர வணவாவி
மேவியே தீர்த்த நல்குந்

தேனொழுகு நீபனே சிங்கார ரூபனே
சித்தம்வைத் தெனையாளுவாய்
திகழுமம் பலவாண நகர்மகிழ்ந் தருள்ஞான
தெண்டாயுதக் கடவுளே

மெய்யினை விளக்கிவெவ் விடயவா தனைநீக்கி
மேன்மைதரு நித்தியதிருப்தி
விளைவித்து நிர்விஷய சுத்தராக் கிப்பாவ
வினைகடிந் துயிரினியல்பாம்

ஐயவிப ரீதவிருளகலப்ர போதவொளி
யருளுஞ் சடாட்சரத்தை
யனவரத முந்த்யான வானந்த நிஷ்டைபுரி
யன்பையடி யேற்குதவுவாய்

கையினி லிலங்குசிங் காரவடி வேலனே
காமாரி தருபாலனே
கருதலரை வென்றிபெறு சமரனே குமரனே
கடவுளர்க ளின்றமரனே

செய்யதிரு மால்பரவு மருகனே முருகனே
    சிவசண் முகத்தெய்வமே
திகழும்அம் பலவாண நகர்மகிழ்ந் தருண்ஞான
    தெண்டாயு தக்கடவுளே

தந்தைகைக் கனிதமய னங்கையுற வெகுளர்போற்
    றனதுபணி யாடையொருவித்
தண்டாயு தங்கொண்டு லங்கோடு கௌபீன்
    தாரியா யேனகிரியில்

வந்துதிரு வாவினன் புரிதவம கிழ்ந்துவிழை
    வரமளித் தாங்குறையுநாள்
மழவிடை யிவர்ந்துபர னுமையுட னடைந்துதிரு
    வாய்மலர்ந் திருகண்மணியே

கந்தனே பழநீய லாதுலகி லுயர்வான
    கனியும்வே றுண்டோவெனக்
கழறவப் பெயர்தாங்கு நகரினிற் புகழோங்கு
    கர்த்தனே பிரசித்தனே

செந்தமிழ் முனிக்கருள்செய் சத்திசிவ கிரிமருவு
    தெய்வமே கருணைபுரிவாய்
திகழுமம் பலவாண நகர்மகிழ்ந் தருண்ஞான
    தெண்டாயு தக்கடவுளே

தண்டாயு தங்கொண்டு லங்கோடு கௌபீன
    தாரியா யேனகிரியில்
வந்துதிரு வாவினன் புரிதவம கிழ்ந்துவிழை
    வரமளித்தன தாங்குறையுநாள்

மழவிடை யிவர்ந்துபர றுமையுட னடைந்துதிரு
வாய்மலர்ந் திருகண்மணியே
கந்தனே பழநீய லாதுலகி லுயர்வான
கனியும்வே றுண்டோவெனக்

கழரவப் பெயர்தாங்கு நகரினிர் புகழோங்கு
கர்த்தனே பிரசித்தனே
செந்தமிழ் முனிக்கருள்செய் சத்திசிவ கிரிமருவு
தெய்வமே கருணைபுரிவாய்

திகழுமம் பலவாண நகர்ம கிழ்ந்தருண்ஞான
தெண்டாயு தக்கடவுளே
மலயமுனி யேவிடச் சத்திசிவ கிரியின்கண்
மருவியென் டிஸைசயினரவை

வாய்க்குமுரி யாய்ப்பிரம தண்டிந் பிணித்ததனை
வன்புயத் தேற்றிமலயஞ்
செலவழி மயக்கித் திகைத்தாவி னன்குடித்
திருநகரி னருகினுய்ப்பச்

செய்தவ னிடும்பனை யடர்த்தடிமை கொண்டுபர
சிவகிரி யமர்ந்தகுகனே
கலிகால வரதனே காருண்ய விரதனே
கழறுசுரு திச்சரதனே

கந்தனே யுமையீன்ற மைந்தனே சந்தனே
காழிவரு சம்பந்தனே
சிலையெயினர் மகள்குலிசன் மகடழுவு ஷண்முகத்
தெய்வமே யெனையாள்வாய்

திகழுமம் பலவாண நகர்மகிழ்ந் தருண்ஞான
    தெண்டாயு தக்கடவுளே
விண்ணவர் தொழப்பரமன் விழியழ லுதித்துமணம்
    விரிசரவணப் பொய்கையில்

மேயாரல் மடவார்கள் தாயாய் வளர்க்கவுமை
    விடையிலர னோடுவந்தவ்
வண்ணமக வாருமோ ருருவம் ஷடானனம்
    வயங்கிட வமைத்துமகனே

வருகசர வணபவா வென்றுநள் தனமதின்
    வழிந்தொழுகு திருவமுதினைக்
கிண்ணமேற் றுணவூட்டி மனமகிழ வெள்ளியங்
    கிரியின்விளை யாடுகுகனே

கெதியென்று நின்பாத பதுமங்க ணம்பினேன்
    கிருபைவைத் தாளவருவாய்
திண்ணியபு யத்தவுண ரைச்செயித் தமரர்சிறை
    தீர்க்கவரு சிவசண்முகனே

திகழுமம் பலவாண நகர்மகிழ்ந் தருண்ஞான
    தெண்டாயு தக்கடவுளே
அமரர்சிறை விடுகென்ன வுடல்வாகு வைத்தூ
    தனிப்பியனி கங்களுடனே

பலைகட லி னடுவணுறு வீரமா கேந்திரம்
    அடைந்து வெம் போர் விளைத்துப்
பமரமிடு தானையொடு வருசிங்க முகவனைப்
    பானுகோ பாதியவுணப்

படைகளை யழித்துமிகு சினமுள மாயை யாற்
    பலவுரு வெடுத்துடற்றுஞ்
சமரின்மா வுருவான சூரபத் மன்றனைச்
    சத்தியயி லார்கிழித்துத்

தன்முன்வரு மயிலூர்ந்து குக்கிடந் துவஜமாத்
தாங்குநின் பெருமை மறவேன்
சிமயப் பரங்கிரி யடைந்துகஜ வல்லியைத்
திருமணஞ் செய்குழகனே

திகழுமம் பலவாண நகர்மகிழ்ந் தருண்ஞான
தெண்டாயு தக்கடவுளே
சத்திய மெனும்புனல் படிந்துசத் துவகுணச்
சாந்தவெண் ணீறணிந்து

சகஜீவ காருண்ய வக்கமணி மாலிகை
தரித்துநெஞ் சுருயன்பால்
நித்தியமு மறவாதுன் வித்தகத் திருவுருவை
நேசித்து பாசித்திடும்

நெறியுதவி மறலிபய மும்பிரவி வல்வினையும்
நீக்கியெனை யாளவருவாய்
பத்தரெட் சகஞான பானுவே காமாரி
பாலலோ சனசூனுவே

பைந்தருமன் முதலமார் வந்தனை செய்சேனாதி
பதியாக வருகந்தனே
சித்திபற் பலசெய்கண் கண்டகலி யுகவரத
தெய்வமுனை யன்றியுண்டோ

திகழுமம் பலவாண நகர்மகிழ்ந் தருண் ஞான
தெண்டாயு தக்கடவுளே
மடனருத வத்துநா ரதமுனி மகத்தழலின்
வந்தவனி பார்க்கிடர்செயும்

வன்றகரை யடல்வாகு கொண்டுவரு கென்றூர்ந்து
மகிழாறுவ தனமணியே
குடிலையின் பொருளையறி யாதுமருள் பிரமனைக்
குட்டிவெஞ் சிறையினிட்டுக்

குறைவறு சிருஷ்டியை வகித்த ஜெகரட்சகக்
குமரனே பரமகுருவே
கடகரிமுகத்தவுண னைக்குருகு கிரியினொடு
கதிர்வேலி னாலடத்துக்

கடளர்கள் வாழ்த்தக் கணங்கள் புடைசூழக்
கடற்செந் திலுறுகந்தனே
திடமான மாயையைத் தாளிதஞ் செய்துவினை
தீர்த்துரட் சிக்கவருவாய்

திகழும் பலவாண நகர்மகழ்ந் தருண்ஞான
தெண்டாயு தக்கடவுளே
வையகமெலாம் மங்குல மதியினுக் கொருமூன்று
மழைபெய்ய வரப்புயர்ந்து

மன்னுநீர் வளமுறத் தனதான்யம் விர்த்திக்க
வண்மையொடு குடிகளோங்கச்
செய்யதோன் மன்னவன் தெய்வமறை யவர்கண்மணி
திருநீறு பஞ்சாட்சரம்

தெரிசனைசெய் யடியவர்கள் சினகர மமைத்துநித்
தியவிதி வாழா தியற்றுந்
தெய்வீகன் வழுதிமக ளைதிரு மணஞ்செய் தருள்
செம்மல்மெய்ப் பொருள்நாயனார்

திருமரபில் வருகநத்த மன்மணிகள் வாழவருள்
செய்சிவ கிரித்தெய்வமே
மெய்யுணர் வள்ளிக்குமம் பலவாண னேந்தல்திரு
வேட்டரா மன்வயலெனும்

வித்தக திருநகரி டத்தமர லங்கார
வேலாயு தக்கடவுளே
அம்பலவாணன்பதித் தெண்டாயுத வேளின் பதத்தைக்
கும்பிடுவோர் வாழியென்றைக்கும்.
வாழியவே!

(பரிமனங்குடி சஸ்டி சுவாமிகள்)

உ
சிவமயம்

# அம்பலவாணனேந்தல் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி கோவில் ஸ்தல புராணம்

## 1. ஆவுடையார் கோவில்— அம்பலவாணனேந்தல்

திருவாதவூரில் பிறந்து வளர்ந்த வாதவூரர் ஆகிய மாணிக்கவாசகர், மதுரையை அரசாண்ட அரிமர்த்தன பாண்டியனுக்கு முதன் மந்திரியாகப் பணி புரியும் வேளையில்,

பாண்டியன் ஓர் நாள் அரசவையைக் கூட்டினான். சிம்மாசனத்தில் இருந்து, ''மந்திரி பிரதானிகளே! நமது குதிரை லாயத்தில் உள்ள குதிரைகள்—எல்லாம்—வயது முதிர்ந்தும்—மெலிந்தும், வேலைக்குப் பயன்படாத முறையில் இருக்கின்றன. இது உங்கள் எல்லோருக்கும் தெரியும். இதற்கு நாம் என்ன செய்ய வேண்டும்? தகுந்த ஆலோசனை செய்து எனக்குப் பதில் சொல்லுங்கள்'' என்று கூறி, மௌனமாக இருந்தான்.

மந்திரி பிரதானியர், படைத் தளபதி, அனைவரும் கலந்து ஆலோசித்து''மன்னர் சொல்லுவது உண்மை—நமது மன்னரின்—குதிரை லாயத்திற்கு ஏற்ற குதிரைகள் ஒன்று கூட இல்லாததால் நம் அரண்மனை குதிரை லாயத்திற்கு—

எப்படி குதிரைகள்—எவ்வளவு தேவை? உயர்ந்த குதிரைகள் எங்கே விற்பனை ஆகிறது? அங்கு போய் நமக்கு வேண்டிய பூரா குதிரைகளையும் வாங்கி வந்து லாயத்தைப் புதுப்பிக்க வேண்டியது அவசியம்தான். இதைத்தான் மன்னர் நம்மிடம் கேட்கிறார். இந்த விபரத்தை மன்னரிடம் தெரிவிப்போம்" என்று சபையில் இருந்த அனைவரும் முடிவு செய்து,

''மன்னர் பெருமானே! தாங்கள் சொன்னதை நாங்கள் எல்லோரும் ஆலோசித்ததில் நமது அரண்மனைக் குதிரைலாயத்திற்குப் பொருத்தமான குதிரைகள் ஒன்று கூட இல்லை.

ஆகையால் எங்கே நல்ல குதிரைகள் இறக்குமதி ஆகிறதோ அங்கு போய் நமக்குத் தேவையான குதிரைகளை எல்லாம் வாங்கி வரவேண்டியது அவசியம்'' என்று சொன்னார்கள்.

மன்னர்—''சபையோர்களே— 'மிக உயர்ந்த ரக நல்ல குதிரைகள் எந்தத் துறைமுகத்தில் இறக்குமதி ஆகின்றன என்பதை நன்கு விசாரித்து அடுத்த சபைக் கூட்டத்தில் எனக்குத் தெரிவியுங்கள்'' என்று கூறி மன்னர் அரண்மனைக்குப் போய் விட்டார்.

சபையோர்கள், ''நாம் ஒவ்வொருவரும் எந்தத் துறைமுகத்தில் அரபுநாட்டுக் குதிரைகள் இறக்குமதி ஆகின்றன என்பதை — அவரவர்களும் விசாரித்துத் தெரிந்து அடுத்த சபைக் கூட்டத்தில் மன்னருக்குத் தெரிவிப்போம்'' என்று முடிவு செய்து சபை கலைந்து அவரவர் இல்லங்களுக்குச் சென்றார்கள்.

மறுசபைக் கூட்டத்தில்—மன்னர், ''மந்திரி பிரதானி சபையோர்களே—அரபு நாட்டு உயர்ரகக் குதிரைகள் எங்கே இறக்குமதியாகின்றன என்பதை விசாரித்து விட்டீர்களா'' என்று கேட்டார்.

சபையில் கூடி இருந்த அனைவரும் நாங்கள் விசாரித்ததில் எங்கள் எல்லோருக்கும் கிடைத்த தகவல். ''திருப்

பெருந்துறை துறைமுகத்தில்தான் நம் அரண்மனைக்கேற்ற குதிரைகள் அரபு நாட்டிலிருந்து இறக்குமதி ஆகின்றன என்று தெரிகிறது'' என்று மன்னரிடம் தெரிவித்தார்கள்.

அதைக் கேட்ட மன்னர் இதில் எவ்விதத் தாமதமும் வேண்டாம் என்று முதன் மந்திரி வாதவூரரை அழைத்து நமது பொக்கிஷத்தில் உள்ள திரவியத்தில் தேவையான திரவியத்தை எடுத்துக் கொண்டு போய் நல்ல குதிரைகளை வாங்கிவரும் படி உத்தரவிட்டார்.

உத்தரவை சிரமேற் கொண்டு முதன் மந்திரி வாதஊரர்—பொக்கிஷத்தைத் திறந்து வேண்டிய திரவியங்களை எடுத்துக் கொண்டு, அதற்குரிய ஆட்களையும் கூட அழைத்துக் கொண்டு தற்போது புதுக்கோட்டை மாவட்டத்தில் ஆவுடையார் கோவில் என்று அழைக்கப் படும் திருப்பெருந்துறைக்கு வந்து சேர்ந்தார்.

அங்கே உலக ரட்சகராகிய சிவபெருமான் மனித வடிவத்தில் ஓர் ஆசிரியராகக் குருந்தமர நிழலில் பிள்ளை களுக்குப் பாடம் கற்றுக் கொடுத்துக் கொண்டிருப்பதைப் பார்த்த முதன் மந்திரி வாதவூரர், ''இவர் உபாத்தி யாயர் அல்ல; சாட்சாத் சிவபெருமான் மனித வடிவில் வந்திருக்கிறார்'' என்று உண்மையை உணர்ந்து, தான் வந்த வேலையை மறந்து.

அந்த சிவபெருமானாகிய உபாத்தியாயர் பாதத்தில் வீழ்ந்து வணங்கி—தனக்கும் உபதேசம் செய்ய — அந்த முக்கண்ணனை வேண்டினார்.

சிவபெருமான் அவரை ஆட்கொண்டு அந்தக் குருந்த மர நிழலிலேயே அடிகளுக்கு ஞானோபதேசம் செய்தார். சிவபெருமானிடம் நேரில் ஞானோபதேசம் கேட்டவுடன் தான் குதிரை வாங்க வந்தவர் என்பதை மறந்து.

வாதவூரடிகள் அந்த முக்கண்ணனுக்கு, அதே இடத்தில் ஓர் ஆலயம் அமைக்க முற்பட்டார்.

அதுதான் இன்று ஆவுடையார் கோவில் என்று அழைக்கப்படும் ஊர். வாதவூரராக வந்த முதன் மந்திரியைச் சிவபெருமான் தடுத்தாட் கொண்டு "இன்று முதல் நீ மாணிக்கம் ஆவாய்'' என்று பெயர் சூட்டினார்; திருவாசகத்தைப் பாடச் சொன்ன புனித சேத்திரம் ஆவுடையார்கோவில். திருவாதவூரர் மாணிக்கவாசகர் ஆன ஸ்தலம் அது.

இந்தப் புனித ஸ்தலத்திற்கு சற்று தென்கிழக்கே, முக்கால் காததூரத்தில் அதாவது ஏழுகல்தொலைவில்—ஓர் குக்கிராமம். **அம்பலவாணனேந்தல்** என்ற அந்த ஊரில் பார்க்கவகுலத்தில் பிறந்தஓர் ஏழை **அண்ணாமலைஉடையா ருக்கும்** புனிதவதி **வள்ளியம்மையாருக்கும்** திருமணம் ஆகிப் பன்னிரெண்டு ஆண்டுகள் மகப்பேறு இல்லை. இரு உத்தமர் களும் தமக்குக் குழந்தை இல்லையே என்று ஏங்கி—மிகப் பழைமையான அந்தக்கால முறைப்படி விரதம் நோன்பு தெய்வ வழிபாடு அனைத்தும் செய்தும்—புத்திரசோகம் தீரவில்லையே என்று கவலையுற்றிருக்கையில் — வள்ளி யம்மையார் ஓர் நாள் தன் கணவரிடம் ''எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது'' என்றார். அதற்கு அண்ணா மலைஉடையார் "உன் மனதில் தோன்றியதைச் சொல்; தாராளமாக அதன்படி செய்வோம்'' என்றார்.

வள்ளியம்மையார் ''மகப்பேறுக்காக நமக்குத் தெரிந்த எல்லாக் காரியங்களையும் செய்து விட்டோம். அந்த ஆண்டவன் நம்மீது கருணை காட்டவில்லை. ஆகையால் அந்த ஆண்டவனையே கேட்டுவிடுவோம்" என்று சொன்னார் வள்ளியம்மையார்.

இதைக் கேட்ட அண்ணாமலை உடையார் சற்று யோசித்து விட்டு, ''என்னம்மா வள்ளி! ஆண்டவனை நாம் எங்கே காண்பது? அவரிடம் நாம் எப்படிப் பிள்ளை வரம் கேட்பது? எனக்கு ஒன்றும் புரியவில்லையே" என்றார்.

வள்ளியம்மையார் "அந்த ஆண்டவனை—நம்மால் நேரில் காண முடியாது.

''நமது ஊருக்கு வருஷம் ஒருமுறை பனையூர் மாரியம்மன் வந்து ஓர் இரவு தங்கிக் காலையில் கரகம் எடுத்து ஆடி—அந்தந்த வருஷத்திற்கு—சுபமழை, அம்மை, காலரா, ஆடுமாடுகளுக்கு வரும் நோய் பற்றிக் குறி சொல்லுகிறது.

அம்பாள் சொல்லுவதை அனுசரித்து இந்த வருஷம்—மழை தாராளமாகப் பெய்யும் என்கிறோம்—சில வருஷங்களில் இவ்வருஷம் மழை குறைவு என்று அதற்கேற்றபடி வேளாண்மை செய்கிறோம்—மழை இல்லை என்பதற்கும் அடையாளம் சொல்லி விடுகிறது. சென்ற மூன்றாவது வருஷம்—இவ்வருஷம்—குளிக்கவே இல்லையப்பா என்று சொன்னது. சுத்தமாக மழையே பெய்யாமல் கடும்பஞ்சம் ஏற்பட்டது சென்ற வருஷம்—மேயப்போன ஆடு மாடு வீடு வரவில்லையப்பா என்றது.

செம்மறி ஆடுகளுக்கு அம்மை நோய் ஏற்பட்டு அவை அழிந்து விட்டன. இவை எல்லாம் நாம் வருஷா வருஷம் கண்கூடாகப் பார்க்கிறோம். அது சொல்லும் குறி அப்படியே நடக்கிறது. ஒரு அணுக்கூட இதுவரையிலும் பிசகவில்லை.

ஆகையால் இவ்வருஷம் பனையூர் மாரியம்மன் வந்து தங்கி, காலையில் கரகம் தூக்கி சாமி ஆடி ஊருக்குக் குறி சொல்லி முடிந்தவுடன்—நாம் இருவரும் சாமியைப் பிரார்த்தனை செய்து ஒரே மனதுடன் அம்பாள் காலில் விழுந்து வணங்கி ''எங்களுக்குப் பிள்ளை வரம் கொடுக்க வேண்டும் தாயே'' என்று கேட்டால் அவள் நிச்சயம் கொடுப்பாளென்று நான் நினைக்கிறேன் என்றாள் வெள்ளியம்மை.

அதற்கு அண்ணா மலையுடையார் 'வள்ளி! நீ சொன்ன யோசனை மிக நல்ல யோசனை. இன்னும் இரண்டு மாதம் தான் இருக்கிறது, ஆடிக்குள் நமது ஊருக்கு அம்பிகை வந்து விடுவாள். நீ சொன்னபடி அம்பிகையிடம் கேட்போம்' என்று அண்ணாமலை உடையார் கூறினார்,

## 2. பனையூர் மாரியம்மன் வருகை

மறுவருஷம் பிறந்தது.

உலக மக்களைக் காத்து ரட்சிக்கும் அன்னை பராசக்தி. உலகத்தையே கட்டிக்காக்கும் பரமேஸ்வரனின் உடலில் பாதியைப் பங்காகப் பெற்ற உமையவள். தங்களால் உண்டாக்கப்பட்ட ஜீவராசிகளைத்தான் நேரில் பார்வை யிட்டு, தன்னை நம்பியவர்கள் குறைகளைப் போக்கி, அவதிப்படுவோரைக் காப்பாற்றி, தன்னை நம்பியவர் களுக்கு வரும் இன்னலை முன்னாலே எச்சரித்தது.

அகம்பாவம் பிடித்தவர்களை அடக்கி, தன்னால் படைக்கப்பட்ட உலகம் உய்யும் பொருட்டு—பவனி வரப் புறப்பட்டாள் அன்னை பரமேஸ்வரி. மாரியம்மன் என்று பெயர் தாங்கிப் பனையூர் மாநகரில் இருந்து புறப் பட்டாள்.

தன்னையே முழுமையாக நம்பி எப்போது வருவாள். தங்களுக்கு மகப்பேறு தருவாள் என்று இரவு பகலாக ஏங்கி இருக்கும் அண்ணாமலை உடையார்—வள்ளியம்மை யின் கோரிக்கையை இவ்வாண்டு முதன் முதலாக நிறை வேற்ற வேண்டும் என்று எண்ணம் கொண்ட பரமேஸ்வரி— பனையூர் மாரியம்மாள் வருஷம் பிறந்த ஆறாவது நாளே அம்பலவாணனேந்தல் வந்தாள்.

அம்பாளின் பூசாரியும் மற்றவர்களும் ஆறாம் நாள் மாலை அம்பலவாணனேந்தல் குளத்தங்கரை பெரியமருத மரத்தடியில் வந்து அமர்ந்தார்கள்.

குளத்திற்குத் தண்ணீர் எடுக்கச் சென்ற வள்ளியம்மை யார், மாரியம்மாள் வந்திருப்பதைக் கண்டவுடன் மகிழ்ந்து தன் கணவருக்குத் தெரிவிக்க ஓடினாள்.

தன் மனைவி வள்ளி தன்னை நோக்கி ஓடி வருவதைக் கண்ட அண்ணாமலை உடையார் தான் உழுத ஏரை நிறுத்திவிட்டு, ஓடிவரும் மனைவியை நோக்கி எதிரே

இவரும் ஓடினார். நெருங்கியவுடன் என்ன வள்ளி—என்ன வள்ளி என்று கேட்டார்—

ஒருவரையொருவர் நெருங்கியவுடன் வள்ளியம்மை மயக்கமுற்று வீழ்ந்தாள். உடன் அண்ணாமலை உடையார் உட்கார்ந்து, வள்ளி என்றார். வள்ளி பேசவில்லை. வள்ளி யம்மை 37 வயதை எட்டிப் பிடித்திருந்தாள். மேலும்— பிள்ளைக் கனியைச் சுவைக்க முடியாத ஏக்கம் இரவு பகலாக அவள் உடம்பை வாட்டியது. இளைத்த தேகத் துடன் இருந்த வள்ளியம்மை நீண்ட தூரம் ஓடியதால் மூச்சுச் திணறி வாய்ப்பேச முடியாமல் மயக்கம் அடைந்து கிடந்தாள்.

அண்ணாமலை உடையார் பதறிப்போய் வள்ளியின் தலையைத் தன் மடியில் தூக்கிவைத்து ''வள்ளி ஏன் இப்படி ஓடி வந்தாள்? வீட்டில் என்ன நடந்தது? அதை நம்மிடம் சொல்ல இப்படி ஓடி வந்து மயக்கமுற்றுக் கிடக்கிறாளே— எந்த ஆபத்தும் வரக் காரணம் இல்லையே,

நமக்கென்ன குழந்தையா குட்டியா? வீட்டில் வேறு என்ன இருக்கிறது; நாம் இருவர்—நமக்கென்று இருப்பது இந்த ஏர் தாங்கும் காளைகள் இரண்டு. இதைத் தவிர வேறு எதுவும் இல்லையே. கோழி கூட நாம் வைத்துக் கொள்வதில்லை. அப்படி ஏதேனும் இருந்தால் அதன் பராமரிப்பிலோ வேறுவகையிலோ பாவம் நம்மைச் சேரும்.

யாருக்கும் எவ்விதத் தீங்கும் நாம் செய்தது இல்லையே. மனதால் கூட யாருக்கும் தீங்கு நினைக்கவில்லையே. வீட்டில் என்ன நடந்திருக்கும்? அதை நம்மிடம் சொல்ல இப்படி ஓடிவந்து மயங்கிக் கிடக்கிறாளே' என்று பலவாறாய் யோசித்தார். பிறகு அவள் முகத்தில் தண்ணீர் தெளித்தார்.

சிறிது நேரத்தில் வள்ளியம்மை கண்ணை விழித்துப் பார்த்தார்—அண்ணாமலை உடையார் 'வள்ளி என்ன நடந்தது? ஏன் இப்படி ஓடி வந்தாய்' என்றார்.

'சுவாமி நம்மை ஆண்டவன் ஏறெடுத்துப் பார்த்து விட்டான்' என்றாள் வள்ளியம்மை.

திகைத்துப் போய் இருந்த அண்ணாமலையார் 'வள்ளி எனக்கு ஒன்றும் புரியவில்லை. புரியும்படி சொல்' என்றார்.

'சுவாமி! பிள்ளையில்லாமல் ஏங்கித் தவித்துக் கிடக்கும் நமக்குப் பிள்ளைப் பாக்கியம் கொடுக்க — பனையூர் மாரியம்மன் வந்து இறங்கி விட்டாள். நாளைக் காலையில் அந்த பாக்கியத்தை நமக்குக் கொடுத்து விடுவாள். நம் குறை தீர்ந்துவிடும். இதைத் தங்களிடம் சொல்லத்தான் ஓடி வந்தேன்'' என்று வள்ளியம்மை சொன்னாள்.

'எழுந்திரு, வீட்டுக்குப் போவோம். நான் ஏரை அவிழ்த்து வருகிறேன். இந்தத் தண்ணீர் கலயத்தைக் கையில் வைத்துக்கொள் என்று சொல்லி ஏரை ஓட்டிக் கொண்டு இருவரும் புறப்பட்டார்கள். வீடு சேர்ந்து இரவு உணவுகூட உண்ணாமல் தாங்கள் காலையில் அன்னையிடம் பெறப் போகும்—மழலைச் செல்வத்திற்கான வரத்தை நினைத்து தூக்கமும் வராமல் எப்போது விடியுமென்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர்.

அம்பாளுக்கு — குடை பிடிப்போர், வெண்சாமரை வீசுவோர் —பக்கவாத்தியக்காரர்கள் எல்லோரும் இரவுச் சாப்பாட்டிற்கு வீடுகளுக்குச் சென்றார்கள். அவர்களைக் கண்டதும், பெண்கள் எல்லாம் பயந்து போய், ''என்னையா! எவ்வருஷமும் ஆனி, ஆடி மாதத்தில் வருவீர்கள். இவ்வருஷம் பிறந்து ஆறு நாள்தானே ஆகிறது. அதற்குள் வந்திருக்கிறீர்களே' என்று எல்லோரும் கேட்டார்கள்.

அம்மா, ஊரில் பள்ளயம் போட்டு சாமி கும்பிட்டு அருள் வந்து கரகம் தூக்கிய உடன், 'இந்த வருஷம் இன்ன திசையில் இன்ன ஊருக்குப் போ என்று பூசாரியிடம் அம்பாள் உத்தரவிடுவாள். இந்த வருஷம் முதன் முதலில் உங்கள் ஊருக்கு வரும்படி உத்தரவிட்டாள். இதை எங்கள்




பூசாரி சொன்னார்' என்று அம்பாளின் சேவகர்கள் சொன்னார்கள்.

இதைக் கேட்ட ஊர்மக்கள் திகைத்துப்போய்—இது வரையிலும் இப்படிச் சித்திரையில் நமது ஊருக்குப் பனையூர் அம்பாள் வந்து பழக்கம் இல்லையே. இப்படி வந்திருப்பது ஒன்றும் புரியவில்லையே என்று பயந்து ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டார்கள்.

இதையறிந்த ஊர்ப் பெரியவர்கள் ஓர் இடத்தில் கூடினார்கள். குழந்தைசாமி உடையார்; 'பனையூரம்மான் வந்திருக்கிறது பெரிய ஆச்சரியமாக இருக்கிறதே' என்றார். ஆச்சரியமா-என்ன ஆபத்து வரப்போகிறதோ என்று ஊரே கலங்கிப் போய் இருக்கிறது என்றார் கருப்பையா. இப்படி ஒவ்வொருவரும் சொல்லிப் பேசிக் கொண்டார்கள்,

செல்லமுத்து உடையார் 'என்னப்பா எல்லோரும் அதையே சொல்கிறீர்களே; ஏதாவது நல்ல காரியம் நடக்க வேண்டி இருந்தால் அதைச் சொல்ல அம்பாள் முன்கூட்டி வரக்கூடாதா? கெடுதல் வருவதைத்தான் மாரியம்மாள் சொல்வாளா? நல்லதைச் சொல்ல மாட்டாளா? என்றார், என்றாலும் பலருக்குப் பயம்.

"எப்படி இருந்தாலும் சரி. நாமெல்லாம் அதிகாலையில் எழுந்து குளித்துவிட்டு ஆண்-பெண் சகலமும், ஈரத் துணியுடன் கரக மேடைக்குப் போய் நிற்போம். அம்பாள் பூசை முடிந்து கரகம் தூக்கி ஆடிக் குறி சொல்லும்போது ஏதாவது கெடுதலாகச் சொன்னால்,

ஆண்-பெண் சகலமும்-விழுந்து கும்பிட்டு-நீதான் அதைத் தீர்த்து, எங்களைக் காப்பாற்ற வேண்டும் என்று மன்றாடுவோம். அவள் நம்மைக் காப்பாற்றுவாள்'' என்றார் செல்லமுத்து உடையார்.

ஊரில் உள்ள ஆண்களும் பெண்களும் இரவு சரியான தூக்கமில்லாமல் - முன்னேரத்திலே எழுந்து குளத்தில் குளித்து ஈர ஆடையுடன் கரக மேடைக்கு வந்தார்கள்.

பூசாரி ஊரில் உள்ள ஆண்-பெண் அனைவரும் ஈர ஆடையுடன் கரக மேடையில் கூடுவதை கண்டவுடன் சற்று யோசிக்கலானார். 'நாம் நம்முடைய வம்சாவளி பரம்பரையாக வந்து கொண்டிருக்கிறோம்.

நாம் கரகம் தூக்கி வருஷம் முப்பதுக்குமேல் ஆகிறது. இதுவரையிலும் இல்லாத பழக்கமாய் இன்று விடிந்தும் விடியாததுமாய், சிறு பிள்ளை முதல் சகலரும் குளித்து ஈர ஆடையுடன் வந்து கூடுவதன் காரணம் புரியவில்லையே.

ஊரில் பூஜை முடித்துக் கரகம் தூக்கியவுடன் இந்த அம்பலவாணனேந்தலுக்கு வர உத்தரவிட்டாள். இங்கே நடப்பது புதிதாக இருக்கிறதே என்று சற்று திகைத்து பின்பு அம்பாளின் ஆணைப்படி நாம் இங்கு வந்தோம்.

அவள் காரணமில்லாமல் எதையும் செய்ய மாட்டாள். எல்லாம் அவள் செயல்படி நடக்கட்டும் என்று மனதைத் திடப்படுத்திக் கொண்டு தன்னுடைய வேலைகளை ஆரம்பித்தார்.

கரக மேடையில் சகலரும் வந்து கூடினார்கள்.

அண்ணாமலை உடையாரும்-மனைவிவள்ளியம்மையும் இரவு உணவும் உண்ணாமல் கண் விழித்திருந்து விடி காலையில் இருவரும்-குளித்து தங்கள் வீட்டில் விளக்கேற்றி வைத்துக் குல தெய்வத்தை வீழ்ந்து வணங்கி, "இன்று நாங்கள் போகும் கரகமேடையில்-அன்னைபனையூர் மாரியம்மன் கரகம் தூக்கியவுடன். எங்களுக்கு நல்வரம் தந்தருள-நீயும் துணை புரியவேண்டும்" என்று பிரார்த்தனை செய்து கொண்டு கரகமேடைக்குப் போய்க் கரகத்தின் முன்னால் அமர்ந்தார்கள்.

பூசாரி கரகத்தைச் சோடித்து ஆராதனை பூஜையை முடித்துக் கரகத்தைத் தூக்கித் தலையில் வைத்து அருள் வந்ததும் ஆடினார்.

கூட்டத்தில் நின்ற மக்கள் அனைவரும்-கரக ஆட்டத்தைப் பார்க்கவில்லை. பூசாரி என்ன சொல்லப் போகிறாரோ'' என்று பூசாரியின் முகத்தையே கூர்ந்து பார்த்தபடி நின்றார்கள். கரக ஆட்டம் முடிந்ததும் மக்களைப் பார்த்து, ஓர் அலர்போட்டார். எல்லோரும் பீதி அடைந்து, கண்கலங்கி நின்றார்கள்.

பூசாரி சொன்னார் ''மக்களே நேற்று என்னைக் கண்டதில் இருந்து ஏன் இப்படிக் கலங்கி நிற்கிறீர்கள்-உங்களைக் காப்பதற்குத்தான், நான்பவனிவருகிறேன். உங்களுக்கு என்ன குறை வந்தாலும் என்னைப் பிரார்த்தியுங்கள். நான் காப்பாற்றுகிறேன்,

நாடு செழிக்க இவ்வருஷம் நல்ல மழை பெய்யுதப்பா. மக்களே உங்களை எந்த நோயும் அணுகாமல்-பார்த்துக் கொள்கிறேனப்பா, என்றாள்.

''மக்கள் எல்லாம்;'' தாயே நாங்கள் தெரியாமல் சொல்லி விட்டோம்: மன்னிக்க வேண்டும் தாயே, மன்னிக்கவேண்டும்'' என்று வீழ்ந்து கும்பிட்டார்கள்.

அண்ணாமலை உடையாரும்-வள்ளியம்மையும் அம்பாளின் பாதத்தில் வீழ்ந்து வணங்கினார்கள். ''பக்தா எழுந்திரு'' என்றது. இருவரும் எழுந்து ''எங்களுக்கு குழந்தை பாக்கியம் தரவேண்டும் தாயே'' என்று கும்பிட்டார்கள்.

''தருகிறேனப்பா. அண்ணாமலை! உங்கள், தவத்திற்கும் விரதத்திற்கும் இரங்கி உனக்காகத்தானப்பா முதன் முதலில் இங்கு வந்தேன். என்னைக் கண்டு ஊர் மக்கள்-பீதி அடைந்து இங்கு வந்து கூடி இருக்கிறார்கள்-அவர்களையும் காப்பாற்றுகிறேன்.

உன் குறையையும் தீர்க்கிறேன்-நான் சொல்கிறபடி செய்: அடுத்த ஆண்டு நான் இங்குவருமுன்-ஆறுமுகனின் அருளைப் பெற்ற ஆண் குழந்தை பிறப்பான்;

நீ செய்த தவ விரதத்தில் இன்னும் பாக்கி இருக்கிறது. இன்று முதல் வாரந்தோறும் செவ்வாய்க் கிழமையன்று- வாசலில் பொங்கல் வைத்து சூரியனுக்குப் படைத்துத் தரிசனம் செய்து, அந்தப் பொங்கலை, வீட்டுத் தரையில் வைத்துக் கைபடாமல் வாயால் அதை உண்டு விரத மிருங்கள்: உங்களுக்கு உலகம் வியக்க ஓர் ஆண்மகன் பிறப்பான்'' என்று பனையூர் மாரியம்மன் வரம் கொடுத் தாள்.

அந்த வரத்தைச் சிரமேற்கொண்டு. அண்ணாமலை உடையாரும் வள்ளியம்மையும்-வாரந்தோரும்-செவ்வாய்க் கிழமையன்று வாசலில் பொங்கல் வைத்து. வாசலை மெழுகிக்கோலமிட்டு பிள்ளையார் வைத்து, இலையில் பொங்கலைப் படைத்து,

ஆராதனை செய்து, சூரியனைத் தரிசனம் செய்து, தங்களுடைய குறையை போக்கி குழந்தைச் செல்வத்தை அருளவேண்டுமென்று பிரார்த்தனை செய்து, பிறகு வீட்டில் ஓர் இடத்தில் தரையில் பசுஞ்சாணத்தால் மெழுகி, அதன் மேல் பொங்கலை வைத்து;

கணவன் மனைவி இருவரும் தம்முடைய இருகை களையும் பின்னால் வஸ்திரத்தால் கட்டச் செய்து, மண்டியிட்டு அந்தப் பொங்கலைச் சாப்பிட்டு வந்தார்கள். விரதம் பிடித்த மறுமாதமே வள்ளியம்மையார் கருவுற்றார்.

கர்ப்ப வதியாகியும் இருவரும் விரதத்தை. விடாது செய்து வந்தார்கள். நிறைமாதம் சென்று, 1739 ஆம் ஆண்டு பங்குனி மாதம்-பங்குனி உத்திரத் திருநாளன்று ஓர் ஆண் பிள்ளையைப் பெற்றெடுத்தார் வள்ளியம் மையார்.

## 3. பழநிக்காவடி

1739 ஆம் ஆண்டு பங்குனி உத்தரத்தன்று பிறந்த அந்த ஆண்பிள்ளை கருத்த மேனியுடன்-நாளொரு மேனி யும் பொழுதொருவண்ணமாக வளர்ந்து வந்தது. அந்தப்

பிள்ளைதான் தனது பொக்கிஷம் என்று இருவரும் வளர்த்து வந்தார்கள்.

அண்ணாமலை உடையார் மனைவி வள்ளியம்மையிடம்-நம் குழந்தை பிறந்து ஓராண்டுக்குமேலாகி விட்டது: வழக்கம் போல் இவ்வருஷம் பூசாரி வந்து நம் குலதெய்வம் கும்பிடும் போது. குழந்தைக்குப் பேர்வைக்க வேண்டுமென்று சொன்னார்.

வள்ளியம்மையார். சாமி! வருஷம் ஒரு முறை பூசாரி வந்து-நம்பங்காளிகள் சேர்ந்து குல தெய்வம் கும்பிடும் போது தான் பூசாரி பெயர் வைப்பது வழக்கம்; ஆனால் பிள்ளை எழுந்து நடந்த பிறகு தானே பெயர் வைப்பது வழக்கம். நம்பிள்ளை இன்னும் நடக்க வில்லையேஎன்றாள்.

இதைக் கேட்ட அண்ணாமலை உடையார் சற்று கோபமாக-பூசாரி வருமுன் நம்பிள்ளை நடந்து. விடுவான். நடந்து விட்டால்-பெயர் வைக்கலாமா என்றார்.

''என்ன சாமி இப்படி என்னைக் கேட்கிறீர்கள்? பிள்ளைக்குப் பெயர் வைப்பதில் எனக்கு ஆசை இல்லையா? உங்கள் விருப்பம் போல் செய்யுங்கள்'' என்றார் வள்ளியம்மையார்.

இருவரும் இப்படிப் பேசிக் கொண்ட ஒன்பதாவது நாளே பிள்ளை நடக்க ஆரம்பித்து விட்டான்-வருஷம் பிறந்து ஆனிமாதத்தில்-பூசாரி வந்தார். அண்ணாமலை உடையார், பங்காளிகள் எல்லோரையும் அழைத்து; குல தெய்வம் சாமி கும்பிடுவதற்கான ஏற்பாட்டைச் செய்து. அதற்கு வேண்டிய சாமான்கள் வாங்கி இருபத்து மூன்றாம் தேதி வெள்ளிக்கிழமை-பாப்பள்ளயம் போட்டு சாமி கும்பிட்டார்கள்.

ஆராதனை முடிந்து பூசாரி சாமி வரவழைத்துக் குறி சொல்லி முடிந்தவுடன் குழந்தைக்குப் பெயர்வைக்க வேண்டியவர்கள், ஒரு பணம் தெட்சணை வைத்துக் குழந்

தையைப் பூசாரியின் முன்னால் விட்டு குழந்தைக்கு பேர்வைக்க வேண்டும், என்று கும்பிடுவது வழக்கம்.

வழக்கப்படி அண்ணாமலை உடையார் செய்தார். பூசாரி",-நீ தவமிருந்து பெற்ற பிள்ளை. அருணாசலம் என்று பெயர்வைத்திருக்கிறேன் என்று சொல்லிப் பிள்ளை யின் நெற்றியில் விபூதி இட்டு அருணாசலம் என்று அழைத் தார்.பிள்ளையின் பெயர் அருணாசலம் என்று எல்லோரும் சொன்னார்கள். பூசாரி எல்லோருக்கும் விபூதி குங்குமம் வழங்கினார்.

அண்ணாமலை உடையாரும், வள்ளியம்மையாரும்; பிள்ளையைக் கண்ணும் கருத்துமாக வளர்த்து வந்தார்கள்

பிள்ளைக்கு வயது மூன்று ஆகியும் பிள்ளை வாய். பேசவில்லை. எந்த வார்த்தையும் பேசாதபிள்ளையைப் பார்த்து தாய் தந்தையார்,'' நம்முடையபிள்ளை பிறந்து வருஷம் மூன்று ஆகிறது' இன்னும் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லையே. ஊமையாக இருக்கும்மோ'' என்று பெரும் கவலையிற்று இருந்தார்கள். பிறகு ஒரு நாள் அண்ணாமலை உடையார், ம்னைவியை அழைத்து.

''வள்ளி நாம் இவ்வளவுதவம் செய்து பெற்றபிள்ளை- இன்னும் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லையே.நமக்குப் பிள்ளை பிறந்தும் பயனில்லாமல் போய் விடுமோ" என்றார்,

வள்ளியம்மையார், ''சாமி! நீங்கள் ஆண்பிள்ளை. நீங்களே இப்படி ஏங்கித் தவிக்கிறீர்கள். நான் பெயர். எப்போது பிள்ளை பிறக்கும் நம்மை அப்பா-அம்மா என்று சொல்லும் காது குளிரக் கேட்போம். என்று ஏங்கிக் கிடந்த எனக்கு,

பிள்ளையைக் கொடுத்த ஆண்டவன் வாய் பேசவைக்க வில்லையே என்று வேளைக்கு உணவு உன்னைக்கூட

ஞாபகம் வராமல் ஏங்குகிறேன்" என்றார் வள்ளி யம்மையார்.

அப்போது அவர்கள் சாமி கும்பிடுமிடத்தில், ஓர் கௌளி சொல்லியது. அதைக் கேட்ட வள்ளியம்மையார், "சாமி சொல்லிவிட்டது. நம் பிள்ளை ஊமையில்லை, வாய் பேசும்."

அதை இவ்வருஷம் பனையூர் மாரியம்மன் வரும்போது நமக்குப் பிள்ளை வரம் கொடுத்த அம்பிகையிடமே கேட் போம்-நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?" என்றார் வள்ளியம்மையார்.

அதைக் கேட்ட அண்ணாமலை உடையார், "நீ சொல்லுவது அருமையான யோசனை. எத்தனையோ ஆண்டுகள் பிள்ளையில்லாமல் ஏங்கித் தவித்த நமக்கு அந்த அம்பிகை வரம் கொடுத்தபடி பிள்ளை பிறந்தது. அவளிடமே நீ கொடுத்த பிள்ளைக்கு வாய் பேச வரம் கொடுக்க வேண்டும் தாயே என்று அவள் காலில் விழுந்து மன்றாடினால் பிள்ளை வாய் பேச அருள் புரிவாள். இதில் எவ்வித சந்தேகமும் வேண்டாம்" என்றார்.

அதன்படி அவ்வருஷம் ஆனி மாதம் பனையூர் மாரியம்மன் வந்து இரவு தங்கி, காலையில் கரகம் சோடித்துப் பூசை செய்து கரகம் தூக்கி ஊருக்குக் குறி சொன்னவுடன், அண்ணாமலை உடையாரும் வள்ளியம்மை யாரும்-குழந்தையை அம்பாளின் காலடியில் நிறுத்தி, இருவரும் அம்பாளின் பாதத்தில் வீழ்ந்து வணங்கி, "தாயே! நீ எங்களுக்குக் கொடுத்த பிள்ளை, ஆண்டு மூன்று ஆகியும் இன்னும் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. நீதான் பேச அருள் புரிய வேண்டும்" என்று வணங்கிக் கேட்டார்கள்.

மாரியம்மன், "அண்ணாமலை! நான் கொடுத்த பிள்ளை ஊமையல்ல; அவன் ஓர் பக்தன். அவன் நன்றாகப் பேசுவான். அவனை நீங்கள் வளர்த்ததில் ஓர் குறை இருக்கிறது. அந்தக் குறை தீர்ந்த உடன், மளமளவென்று

பெரிய மனிதரைப்போல் பேசுவான். நீங்கள் பயப்பட வேண்டாம்'' என்று மாரியம்மன் உத்தரவு சொன்னாள்.

இருவரும் ''தாயே, நாங்கள் குழந்தைக்கு ஒரு குறையும் வைக்கவில்லையே. என்ன குறை தாயே'' என்று வணங்கிக் கேட்டார்கள். அந்த நாள் வரும்போது தானே தீர்ந்து விடும், என்று அம்பாள் கூறி, குழந்தை நெற்றியில் தன் கையால் விபூதி இட்டு, இருவருக்கும் விபூதி கொடுத்து, ஊருக்குள் புறப்பட்டாள் மாரியம்மன்.

அண்ணாமலை உடையாரும், வள்ளியம்மையாரும் குழந்தையைத் தூக்கிக் கொண்டு இல்லம் சேர்ந்து, அம்பாள் இப்படிச் சொல்லி இருக்கிறதே. குழந்தைக்கு நாம் என்ன குறை வைத்திருக்கிறோமோ தெரியவில்லையே என்று பேசிக்கொண்டு, பிறகு எல்லாம் அவன் செயல்! அவளருளால் கிடைத்த பாக்கியம்! இதை அம்பாளே தீர்க்கட்டும் என்று சொல்லி இருவரும் பிள்ளையைக் கண்ணும் கருத்துமாக வளர்த்து வந்தார்கள்.

சில மாதங்களுக்குப் பிறகு ஒருநாள் அண்ணாமலை உடையார், தனது புஞ்சைக்கு ஏர் உழப் போயிருந்தார். அவருக்குக் காலை உணவை எடுத்துத் தன் தலையில் சுமந்து வள்ளியம்மை தன் பிள்ளையை இடுப்பில் தூக்கிக் கொண்டு, ஏர் உழும் புஞ்சைக்குப் போய், கணவரை உணவருந்த அழைத்து, அருகில் உள்ள கோரைப்பள்ள ஊருணிக் கரையில் வேப்பமர நிழலில், கணவருக்கு உணவு படைத்துக் கொண்டு இருந்தாள்.

அப்போது ஓடி விளையாடிக் கொண்டிருந்த பிள்ளை அருணாசலம், அங்கே பக்கத்தில் உலர்ந்து கிடந்த நரகலை எடுத்துக் கொண்டு தந்தை உணவருந்தும் இடத்திற்கு வர, அதைக் கண்ட வள்ளியம்மைக்கு என்றும் இல்லாத கோபம் வந்தது.

''ஏனடா இது நரகல் இல்லையா? இதைக் கையில் எடுத்துக் கொண்டு சாப்பிடுமிடத்திற்கு வருகிறாயே'' என்று பிள்ளையின் முதுகில் ஓர் அடி அடித்துவிட்டாள்

குழந்தை பிறந்ததில் இருந்து அன்றுதான் முதலில் அவள் பிள்ளையை அடித்தது.

அடிப்பட்ட குழந்தை வீறிட்டு அழாமல் முருகா என்றது. இந்தச் சொல்லைக் கேட்டதும் உணவருந்திய ஓலைப் பாத்திரத்தைத் தூக்கி எறிந்துவிட்டுக் கையைக் கூடக் கழுவாமல் அண்ணாமலை உடையார் குழந்தையைத் தூக்கி அணைத்து, 'அப்பா, உன் தாய் அடித்து விட்டாளா' என்றார்.

பிள்ளை மளமள வென்று பேச ஆரம்பித்தான். இந்த ஒரு குறையால்தானப்பா நான் இது வரையிலும் பேசாமல் இருந்தேன். என் தாய் கையால் அடிப்படாதது ஒரு குறை அல்லவா? அடிபட்ட பிறகு தான் நீ பேச வேண்டும் என்று, என்னை ஆண்டவன் உருவாக்கி இருக்கிறான். எனவே இனி மேல் நான் நன்றாகப் பேசுவேன்'' என்று சொல்லி: ''அம்மா, என்னை அடித்து விட்டோமோ என்று கவலைப் படாதே. நீ என்னை அடிக்காமல் இருந்தால், நான் பேசாமல்தான் இருப்பேன். நீ அடித்ததால்தான் நான் பேசினேன். நீ கவலைப்பட வேண்டாமென்று ஆறுதல் கூறியது பிள்ளை.

அண்ணாமலை உடையாரும் வள்ளியம்மையாரும், ஆனந்தபரவசமடைந்து, பேசாமல் இருந்த நம் பிள்ளை. பெரிய மனிதரைப் போல் பேசுகிறானே என்று மகிழ்ந்து ஏர் உழுவதையும் மறந்து, வேப்பமர நிழலிலேயே இருந்து விட்டார்கள்.

அதைப் பார்த்த பிள்ளை தந்தையிடம், ஏனப்பா! மாடு இரண்டும். வெயிலிலே நிற்கிறதே என்றது.

தந்தை ''நான் ஏரை அவிழ்த்துக் கொண்டு வருகிறேன், நீ பிள்ளையைத் தூக்கிக் கொண்டு வீட்டுக்குப் போ'' என்று வள்ளியம்மையிடம் சொல்லி உழவு மாட்டை அவிழ்த்துக் கொண்டு அண்ணாமலை உடையார் வீடு வந்து சேர்ந்தார்,

பேசாமல் இருந்த பிள்ளை மளமள வென்று பேசுவதை கேட்ட ஊர்மக்கள் ஆனந்தக் கடலில் மூழ்கியவர்களாய், 'இது சாதாரணப் பிள்ளையல்ல; அந்த ஆண்டவனே பிள்ளையாகப் பிறந்திருக்கிறான். இந்தப் பிள்ளையை அனைவரும் தெய்வமாகக் கருதவேண்டும் என்று பேசிக் கொண்டார்கள்.

அண்ணாமலை உடையாரும் வள்ளியம்மையும் பிள்ளையைக் கண்ணும் கருத்துமாக வளர்த்து வந்தார்கள். பிள்ளைக்கு ஏழுவயதான உடன் அங்குள்ள திண்ணைப் பள்ளியில் படிக்க வைத்தார்கள். அந்தக் காலப் படிப்பு முறைப்படி அரிச்சுவடி, முந்திரிலக்கம் கீழ்வாயிலக்கம் பிரவாசச் சுவடி, எண்சுவடி, நல்வழி, நன்னெறி மூதுரை, குமரேசசதகம், கிருஷ்ணன் தூது வரையில் படித்தார். அப்போது அருணாசலத்திற்கு வயது பதினான்கு. பதினான் காவது வயதில் தாயார் வள்ளியம்மை சிவலோக பதவி அடைந்து விட்டார்.

அது முதல் அருணாசலம், தன் தந்தைக்குச் சமையல் செய்து கொடுக்கும் பணியில் ஈடுபட்டதால், அத்துடன் அவருடைய படிப்பு நின்று விட்டது. இருப்பினும் தந்தைக்கு உதவி செய்யும் நேரம் போகப் பாக்கி நேரங் களில் முருகக்கடவுள்பேரில் உள்ள பாடல்களையே படிப்பது, அதை மனப்பாடம் செய்து எப்பொழுதும் பாடுவது, பழக்கமாகி விட்டது. முருகக் கடவுளின் மேல் அதிகமான பக்தியும் ஈடுபாடும் இயற்கையாக ஏற்பட்டது.

அக்காலத்தில் தனியே இப்பகுதியில் முருகன் ஆலயம் இல்லை; பிரசித்தி பெற்ற முருகன் ஆலயம் பழனியில்தான் இருந்தது.

அருணாசலம் தனது 17ஆவது வயதிலே காவடி தூக்கிக் கால் நடையாகப் பழனிக்குப் போக வேண்டுமென்ற ஆசை ஏற்பட்டு, தன் தந்தையாரைக் கேட்க, தந்தை அண்ணா

மலை "அப்பா அருணாசலம்! பழநி வெகு தொலைவில் இருக்கிறது. நீயோ சிறுபிள்ளை; நெடுகிலும் காட்டுப்பாதை; இவ்வளவு தொலைவிற்குக் காவடியுடன் நடந்து செல்ல முடியுமா? உன் தாயும் இல்லை. எனக்கு இருக்கும் துணை நீ ஒருவன்தான். அதனால்தான் என் மனம் கவலைப் படுகிறது," என்றார்.

அது கேட்ட பிள்ளை அருணாசலம் "நான் எங்கு போகிறேன்? அந்தக் கலியுக வரதன் பால தெண்டாயுத பாணியின் சன்னிதியைப் பார்க்கப் போகிறேன். அவன் நாமத்தைச் சொல்லி, அவனுடைய சின்னமாகிய காவடியைத் தூக்கியவுடன் அந்தக் காவடியில் அவன் வந்து அமர்ந்து கொள்வான்.

அந்த கருணா மூர்த்தி என் மனதில் குடி கொண்டு விட்டான் ஆகையால் அவனுடைய சன்னதியாகியபழனியம் பதிக்கு வருடந்தோறும். பங்குனி உத்திரத்திற்கு இங்கிருந்து காவடி தூக்கிக் கால் நடையாகச் சென்று, என்னுடைய கடைமூச்சு இருக்கும்வரை செலுத்த வேண்டும் என்று எண்ணம் எனக்குத் தோன்றி விட்டதப்பா! எனக்கு எவ்வித ஆபத்தும் நேராமல் இங்கிருந்து என்னை அழைத்துக் கொண்டு போய் அங்கு சேர்த்துத் திரும்ப ஊருக்குக் கொண்டு வந்துவிடுவான் என்று உறுதியாக என் மனம் சொல்லுகிறதப்பா" என்றார் அருணாசலம்.

தந்தை அண்ணாமலை உடையார் ஆனந்தக் கடலில் மூழ்கினவராய், "நாம் செய்த தவம் வீணாகவில்லை. மிக உயர்ந்த பிள்ளையை ஆண்டவன் நமக்குத் தந்திருக்கிறான். இந்த வயதில் இவ்வளவு தெய்வ பக்தியும், தெய்வ நம்பிக்கையும் வருவது சிறிய காரியமல்ல; இதில் ஏதோ பெரிய மர்மம் இருக்கிறது. நம் பகுதியில் சமீபத்தில் பிரசித்தி பெற்ற சிவாலயங்கள் இருக்கின்றன. பாண்டியயனின் மந்திரி வாதவூரடிகளைத் தடுத்தாட் கொண்டு, மாணிக்கம் என்று பெயர் சூட்டி இங்கு எல்லாம்

உனக்கே என்று கொடுத்தருளிய, திருப்பெருந்துறை ஆத்மானந்த சுவாமி ஆலயம் 7 கல் தொலைவில்இருக்கிறது. இதை எல்லாம் விட்டு விட்டு வெகு தொலைவில் இருக்கும் பழனியம்பதியில் அமர்ந்திருக்கும் முருகக் கடவுளின்மேல், இவனுடைய மனம் லயிக்கக் காரணம் என்னவோ?

அன்று மூன்று ஆண்டுகள் வாய் பேசாமல் இருந்தவன் முதலில் எவ்வார்த்தையும் சொல்லாமல், முருகா என்று சொன்னான். அதை அறிந்த அனைவரும் திகைத்தார்கள். பிள்ளை முதலில், அப்பா, அம்மா, என்றுதான் பேச ஆரம்பிக்கும். இவன் மூன்றரை ஆண்டு பேசாமல் இருந்து முதலில் முருகா என்று சொல்லுகிறானே, இவன் ஒரு பெரிய முருக பக்தனாகத் தான் வருவான் என்று எல்லோரும்பேசிக் கொண்டது உண்மையாகத்தான் தெரிகிறது. இதை எல்லாம் அறிய நம்மிடம் சக்தி ஏது?

எல்லாம் அந்த ஆறுமுகனின் திருவிளையாடல்—இனி நம் குழந்தையை எவ்விதத் தாமதமும் செய்யக் கூடாது என்று முடிவு செய்து,

அண்ணாமலை உடையார், ''அப்பா அருணாசலம்—நாங்கள்—பெரும் தவம் செய்து ஆண்டவனிடம் வரம் வாங்கி உன்னைப் பெற்றோம்.

ஆகையால் எவ்வித சலனமும் இன்றி உன் மனதில் தோன்றியபடி இந்த உத்திரத்திற்கே பழனியம்பதிக்குப் போய் வா—அந்த ஆண்டவன் உன்னைக் காப்பாற்றுவான்'' என்று தந்தை அண்ணாமலை உடையார் சொன்னார்.

தந்தையின் உபதேசத்தையும் அனுமதியையும் பெற்ற அருணாசலம் முப்பது வயதுள்ள கணபதி உடையாரையும் சுப்பிரமணிய உடையாரையும் பார்த்து, பழனிக்குக் காவடியுடன் துணைக்கு வரும்படி கேட்டுக் கொண்டார்.

அருணாசலம் சொன்ன விபரத்தை அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்த இருவரும் யோசித்து,

"தம்பி! பழநி போகும் வழியில் நிறையக் காடுகள் இருக்கின்றன. காடுகளில் உள்ள ஒத்தையடிப் பாதையில் நீண்டதூரம் போக வேண்டும்—நீயோ சிறுபிள்ளை; ஆகையால் நீ சொன்னபடி நாங்கள் இருவரும் வழித் துணைக்கு உன்கூட வருகிறோம்.

பகலில் காவடியுடன் அவனுடைய நாமத்தை நீ பாட, நாங்கள் அரோகரா போட்டுக்கொண்டு போவோம். இரவு தங்குமிடத்தில் சமையல் செய்து உணவருந்தி மீதி உணவைக் கையிலெடுத்துக் கொண்டு பகலில் பயணம் செய்ய ஏதுவாக இருக்கும். ஆகையால் நிச்சயமாக உனக்குத் துணை வருகிறோம், பயணத்திற்கு ஏற்பாடு செய்" என்று சொன்னார்கள்.

உடனே அருணாசலம் கட்டுக்கரையிலிருக்கும் பஞ்சாங்க ஐயரிடம் போய், "சாமி, பங்குனி உத்திரம் எப்போது வருகிறது இன்னும் எத்தனை நாட்கள் இருக்கின்றன? என்பதைப் பார்த்துச் சொல்லுங்கள்" என்று கேட்டார்.

ஐயர், "அருணாசலம் பங்குனி உத்திரத்தைப் பற்றி ஏன் இப்போது கேட்கிறாய்?" என்று கேட்டார்.

"சாமி! பங்குனி உத்திரத்திற்கு இங்கிருந்து காவடி எடுத்துக்கொண்டு, பழநிக்குப் போக நினைத்திருக்கிறேன், அதற்காகத்தான் கேட்கிறேன்" என்றார் அருணாசலம் அதைக் கேட்ட ஐயர் திடுக்கிட்டவராய், "இங்கிருந்து காவடி தூக்கிப் பழனிக்குக் கால்நடையாகப் போகிறாயா? இது என்ன நடக்கிற காரியமா? பழநியோ இங்கிருந்து பதினைந்து காத தூரத்திற்மேல் இருக்கும் (காதம் என்பது 10 மைல்) வழி நெடுகிலும் பெருங்காடுகள்! இதில் நீ எப்படிப் போக முடியும்? உனக்கு ஏன் இந்த வீண் யோசனை? சாமி கும்பிட வேண்டுமானால் இங்கு எத்தனையோ சிவ ஸ்தலங்கள் இருக்கின்றன. இவைகளை யெல்லாம் விட்டுப் பழனிக்குப் போகிறேன் என்பது எனக்கு பிடித்தமாக இல்லையப்பா" என்றார் ஐயர்.

"ஐயா! தாங்கள் சொல்லுவது இங்கு சிவாலயங்கள் இருப்பதாக—நான் போவது முருகன் ஆலயத்திற்கு! என் மனதில் அந்த முருகக் கடவுள் குடி கொண்டு விட்டார். இனிமேல் யார் சொன்னாலும் என் செவிகளில் ஏறாது. தாங்கள் சொல்லும் பெருங்காடுகளெல்லாம் முருகப் பெருமானுக்குச் சாற்றும் பூப்பரிக்கும் நந்தவனமாக என் மனதிற்குத் தோன்றுகின்றன. தயவு செய்து உத்திரத் தேதியை எனக்குச் சொல்லுங்கள்" என்று, ஐயரிடம் பணிவோடு கேட்டார் அருணாசலம்.

இவைகளைக் கேட்ட சாமினாத ஐயர் திகைத்துப் போய் நாம் சொல்லியதை எல்லாம் கேட்டுக் கொஞ்சம் கூடத் தாமதிக்காமல் சிறுவயதில் உள்ள அருணாசலம் இப்படிச் சொல்லுகிறானே; இவனை நாம் சிறுவனென்று நினைப்பது தவறு; இவன் அந்த முருகப் பெருமானின் அருள் பெற்றவன் போல் தெரிகிறது. இவன் கேட்பதற்கு உள்ள மார்க்கத்தைச் சொல்லுவதுதான் உசிதம் என்று முடிவு செய்து,

ஐயர், "அருணாசலம் நீ சிறு பிள்ளையாச்சே; பதினைந்து காத தூரமும் நடந்து போவதாகச் சொல்கிறாயே என்றுதான் அப்படிச் சொன்னேன். நீ சொல்லுவதைப் பார்த்தால் அந்த முருகப் பெருமானே உனக்குத் துணை வந்து காப்பான்; நீ கேட்டபடி உத்திரம் வரும் தேதி கிழமை இவைகளை ஓலை நறுக்கில் எழுதித் தருகிறேன். ஆனால் நான் வயது முதிர்ந்தவன்; எனக்குத் தெரிந்ததைச் சொல்லுகிறேன். விரதமிருக்க வேண்டுமென்று சொன்னாய் மனஉறுதிதான் விரதம். உன் தந்தை உயர்ந்த பக்தன்; கடவுள் நம்பிக்கை உள்ளவன். அவன் சிறுவயதிலிருந்தே புலால் உண்ணுவதை ஒதுக்கிச் சைவமாக உங்கள் குடும்பம் இருந்து வருகிறது. நீயும் புலாலை ஒதுக்கிப் புலால் உண்பவர்களையும் திருத்தி வருவதாக உன் தந்தை என்னிடம் சொல்லுவான்.

உன் தந்தை அருணாசல புராணத்தை மிகப் பிரியமாக படிக்கச் சொல்லிக் கேட்பான். அதனால்தான் அருணா சலமே உனக்குப் பிள்ளையாக வந்து பிறந்திருக்கிறான் என்று நான் அடிக்கடி உன் தந்தையிடம் சொல்லுவதுண்டு.

நீ முருகக் கடவுளின் பக்தனாகப் பிறந்திருக்கிறாய்—பரவாயில்லை. இறைவன் ஒருவனே! அவனைப் பல பெயரிட்டு வணங்குகிறோம்.

நீ கோரியபடி பழனிக்குப் போய் வா. ஆனால் நீ எந்த விரதமும் இருக்க வேண்டாம். பழனியில் காப்புக்கட்டும் தேதியைக் குறித்துத் தருகிறேன். அன்று முதல் காவி உடை அணிந்துகொள். அதுவே போதும். நீ பழனி வரையில் நடந்து செல்வதால் விரதமிருப்பது சாத்தியப் படாது. காப்பதுதான் விரதம்! என்று சொல்லி, சாமிநாத ஐய்யர், பழனியில் காப்புக்கட்டும் தேதியையும், உத்திரம் வரும் தேதி கிழமையையும் எழுதிக் கொடுத்தார்.

அருணாசலமே ஐய்யரை வணங்கி ஓலை நறுக்கைப் பெற்றுக்கொண்டு வீடு வந்தார். தனக்குத் துணைக்கு வர இருக்கும் கணபதி உடையாரையும் சுப்பிரமணிய உடையாரையும் அழைத்து தான் பஞ்சாங்க அய்யரிடம் போனதையும், அவர் சொன்ன விவரங்களையும் சொன் னார். மூவரும் கலந்து பேசி-ஐய்யர் சொன்னது சரிதான். நாம் பழனி வரையிலும் நடந்து போவதால், விரதமிருப்பது முடியாத காரியம். ஆகையால் ஐய்யர் சொன்னபடியே செய்வோம் என்று முடிவு செய்தார்கள்.

1756-ம் ஆண்டு பங்குனி உத்திரத்திற்கு—மூவரும் காப்புக் கட்டும் நாளன்று குளித்து வீட்டில் சாமி கும்பிட்டு அருணாசலத்திற்கு காவி உடை அணிவித்தார் கள். அதிலிருந்து மூன்றாவது நாள் ஓர் காவடியைத் துணியால் அலங்கரித்து இரண்டு சிறிய பையில் சர்க் கரையை நிரப்பி இரு பக்கங்களிலும் கட்டி, பெரிய குளத்தின் கீழ்க்கரையில் இருக்கும் மருத மரத்தடியில் சாமி கும்பிட்டு,

ஊர் ஜனங்கள் எல்லோரும் காவடியைக் தரிசனம் செய்து அருணாசலம் முருகன் மேல் பல பாடல்களை பாட எல்லோரும் அரோகரா, அரோகரா என்று பின்பாட்டாக சொல்லி, பகல் பத்து நாழிகைக்கு அருணாசலம் தோளில் வயது முதிர்ந்தவரும் அம்பலமுமாகிய தாவடம் சுப்பையா உடையார் காவடியைத் தூக்கிவைத்து புறப்பட்டார்கள். காவடியின் பின்னால் ஊர்ப் பெரியவர் அருணாசலம் பாட அரோகரா சொல்லிக் கொண்டு ஏழுகல் தொலைவில் இருக்கும் திருப்பெருந்துறை ஆவுடையார் கோவில்

ஆத்மநாதர் சன்னதியை அடைந்து அந்த ஆத்ம நாதரையும், யோகாம்பிகையையும் மாணிக்கவாசகப் பெருமானையும் தரிசனம் செய்து இரவு அங்கே தங்கி விடிகாலை கோழி கூவி கோவில் திறந்த உடன் சாமி தரிசனம் செய்து காவடியை அருணாசலம் தோளில் வைத்து கணபதி உடையார் சுப்பிரமணிய உடையார் இருவரையும் துணைக்குச் செல்ல வழி அனுப்பிவிட்டு எல்லோரும் ஊர் வந்தார்கள்.

காவடியுடன் சென்ற மூவரும் இரவு நேரங்களில், அங்காங்கே தங்கி, ஏழாவது நாள் உத்திரத்தின் முதல் நாள் மாலை பழனி போய்ச் சேர்ந்து காலையில் சரவணப் பொய்கையில் குளித்துக் காவடியுடன் மலையைச் சுற்றி வந்து சன்னதியில் காவடியைச் செலுத்தி காவடியிலிருந்த சர்க்கரையை முருகப் பெருமானுக்கு அபிஷேகம் செய்து பகவானைத் தரிசனம் செய்தார்கள்.

மதியம் சமைத்து உணவருந்தி அங்கேயே இரவு தங்கிக் காலையிலும் சாமி தரிசனம் செய்து மூவரும் புறப்பட்டுக் கால்நடையாக ஊர் வந்து சேர்ந்தார்கள்.

அருணாசலம் ஊர் வந்தவுடன் ஊர் மக்களெல்லாம் வந்து அருணாசலத்தைத் தெய்வமென போற்றி வணங்கி விபூதி குங்குமம் பெற்று அருணாசலம் நோய்தொ

இல்லாமல் நீண்டகாலம் வாழ வேண்டுமென வாழ்த்திச் சென்றார்கள்.

இம்மாதிரியே வருஷம்தோறும் பங்குனி உத்திரத்திற்கு அம்பலவாணனேந்தலில் காவடிக்கட்டி பழனியம்பதியில் முருகப் பெருமானுக்குச் செலுத்துவது வழக்கமாகி விட்டது.

## 4. அருணாசலம்—பூவாயி திருமணம்

அருணாசலத்திற்கு வயது 24 நடந்து கொண்டிருந்தது. அண்ணாமலை உடையார் தன் மகனுக்குக் கல்யாணம் செய்து கொள்ளும் நோக்கமே இருப்பதாகத் தெரிய வில்லையே என்று யோசித்து, ஊர்ப் பஞ்சாங்க ஐய்யரும் தமது நண்பருமான சாமிநாத ஐய்யரை கேட்போம், என்று முடிவு செய்து,

ஐய்யர் வீட்டுக்குச் சென்று தன் மனசில் இருப்பதை எல்லாம் ஐய்யரிடம் சொன்னார். அவர் அண்ணாமலை, அருணாசலத்திற்கு எப்போது கல்யாணம் நடக்கும், அல்லது கல்யாணமே நடக்காதா என்பதை அவனுடைய பேர் நாமத்திற்கு சாஸ்திரம் பார்த்தார்.

"அண்ணாமலை, உன் மகன் அருணாசலத்திற்கு நிச்சயம் கல்யாணம் நடக்கும். நீ கவலைப்பட வேண்டாம். இப்போது அவனுக்கு வயது இருபத்துநாலு நடக்கிறது. இருபத்தைந்து பூர்த்தியாகித்தான் அவன் திருமணம் நடக்கவேண்டி இருக்கிறது. அப்போது நிச்சயமாக அவன் திருமணத்திற்கு சம்மதிப்பான். சென்று அதைப் பற்றி முடிவெடுப்போம்" என்று சாமிநாத அய்யர் சொன்னார். அதை எல்லாம் கேட்ட அண்ணாமலை உடையார் சாமி தெய்வ சம்மதம் எதுவோ அதன்படி நடக்கட்டும் என்று சொல்லி சற்று அமைதியாக இருந்தார்.

ஐய்யர் ''அண்ணாலை, நானுனக்கு, சொல்ல வேண்டி யதை எல்லாம் நீயே உணர்ந்து சொல்லிவிட்டாய். அவனன்றி ஓர் அனுவும் அசையாது என்பது பழமொழி. இதை நாம் இருவரும் பல தடவை பேசி இருக்கிறோம்.

மனிதராகப் பிறந்து நாமெல்லாம் அனேக சுகங்களை நினைத்து ஆசைப்படுவது இயல்பு. ஆனால் எல்லாம் நடப்பது இல்லை.

ஆண்டவனால் அருளப்பெற்றதுதான் கிடைக்கும். தனக்குக் கஷ்டம் வரவேண்டும். நாம் அதை அனுபவிக்க வேண்டுமென்று எந்த மனிதனும் நினைப்பது கிடையாது. அவன் நினைக்கவில்லை என்பதற்காகக் கஷ்டம் நஷ்டம் வராமலிருக்கிறதா? எதிர்பாராமல் கஷ்டங்கள் வந்து மனிதனை ஆட்டிப் படைக்கிது. அதனால் அவரவர்களும், முன் ஜென்மத்தில் செய்த பாவ-புண்ணியங்களுக்கேற்றபடி இப்பிறவியில் இந்த பூமண்டலத்தில் நன்மை தீமைகளை அனுபவித்தே தீரவேண்டும். அதுதான் ஆண்டவனுடைய கட்டளை. அதிலும் திருமணம் என்பது சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுவது என்று சான்றோர்கள் கூறி இருக்கிறார் கள். ஆகையால் விதிப்படி நடக்கட்டும்; இன்னும் ஓராண்டு போகட்டும்; இதைப் பற்றி யோசிப்போம் என்றார் அய்யர். அண்ணாமலை விடை பெற்றுச்; சென்றார்.

அண்ணாமலையும் அவர் மகனும் தங்களுடைய கடமைகளைத் தவறாது செய்து கொண்டிருந்தார்கள். சில மாதங்களுக்குப் பிறகு பஞ்சாங்கம் சாமிநாத அய்யர் அம்பலவாணனேந்தலுக்கு வந்திருந்தார்.

அப்போது அருணாசலத்தை தனிமையில் அழைத்து உன்னிடம் சில முக்கியமான விஷயங்கள் பேச வேண்டி இருக்கிறது என்றார்.

சாமி, தாங்கள் என்னிடம் எதைக் கேட்டாலும் பதில் சொல்லுகிறேன் என்றார் அருணாசலம்,

' அருணாசலம் உனக்கு இல்லறம் நடத்தும் பருவ காலம் வந்துவிட்டது. அதனால் உன் தந்தை உனக்குத் திருமணம் செய்து பார்க்க வேண்டுமென்று ஆசைப்படுகிறார். உன் மனநிலை என்ன என்பதை ஒளிவு மறைவு இல்லாமல் என்னிடம் சொல்'' என்று ஐய்யர் கேட்டார்.

'சாமி! தாங்கள் முன்கூட்டியே ஒளிவு மறைவு இல்லாமல் சொல் என்று சொல்லி விட்டீர்கள். இந்த உலகில் எனக்கு நீங்களும் என் தந்தையும் ஒன்றுதான். தந்தை பிள்ளையிடம் நேரில் கேட்க முடியாத இந்தக் காரியத்தை நீங்கள் கேட்கிறீர்கள். நான் என் மனதில் உள்ளதை அப்படியே தங்களிடம் சொல்லுகிறேன்.

என்னுடைய மனதில் கல்யாணம் செய்து குழந்தைகள் பெற்று, பொன் பொருளோடு வாழ வேண்டுமென்ற ஆசை இல்லை. ஆனால் என் தந்தையார் எனக்குத் திருமணம் செய்ய ஆசைப்படுவது முன்னாலே எனக்குத் தெரியும்.

அதனால் இதைப் பற்றி நான் யோசித்தேன். என் தாயார் வெகு காலத்திற்கு முன்பே இறைவனடி சேர்ந்து விட்டார் இப்போது எனக்குத் துணையாக இருப்பது என் தந்தைமட்டும். ஆகையால் தந்தையின் விருப்பத்திற்கு மகனா—மகனின் விருப்பத்திற்கு தந்தையா என்று யோசித்தேன். மகன் விருப்பத்திற்கு தந்தையல்ல. தந்தை முந்தி. மகன் குழந்தையாகப் பிறந்ததிலிருந்து அவனை பள்ளிக்கு அனுப்பி கல்வி பயில செய்து ஆளாக்கும்வரை வளர்த்து தந்தை அனேகக் கஷ்டங்களை அனுபவிக்க வேண்டும் தந்தை சொல் மிக்க மந்திரமில்லை என்று சான்றோர்கள் சொல்லி இருக்கிறார்கள். தந்தையின் விருப்பத்தை நிறைவேற்றுவதுதான் சாலச்சிறந்தது என்ற முடிவுக்கு வந்து விட்டேன்.

ஆகையால் அவர்கள் விருப்பம் எதுவோ அதை நான் நிறைவேற்றுகிறேன். ஆனால் அவர்கள் விருப்பத்திற்காக

மட்டும் நான் திருமணம் செய்து கொண்டு பிறகு இல்லறத்தில் பிசகி நடக்கமாட்டேன். என் தாயும் அவர்களும் எப்படி வாழ்ந்தார்களோ அப்படி என்னுடைய கடைசி மூச்சு இருக்கும் வரை நடப்பேன் என்பதை முருகன் மீது ஆணையாக உங்களிடம் சொல்லுகிறேன்' என்று அருணாசலம் சொன்னார்.

ஐய்யர் அப்படியே பிரமித்துப் போனார். நீ யார் என்பதை பழனிக்குப் போக நாள் கேட்க வந்த அன்றே புரிந்துகொண்டேன். உனக்கு வயது இருபத்துநான்கு முடியப்போகிறது. உன் தந்தை அண்ணாமலை முன்னாலே வந்து என்னிடம் கேட்டார். வயது இருபத்தைந்து பூர்த்தியாகட்டும் செய்வோமென்று சொல்லியனுப்பினேன்.

அதைத்தான் இப்போது உன்னைக் கேட்டேன்; உன் மனதில் உள்ளதை அப்படியே சொல்லி விட்டாய். உன் தந்தை உன்னை நன்கு அறிந்தவர்.

அவர் விருப்பத்தை நிறைவேற்றுவது உன் கடமை, அவைகளையெல்லாம் நீயே சொல்லி விட்டாய். இனி நானுனக்குச் சொல்ல வேண்டியதில்லை. நாம் பேசிக் கொண்டபடி திருமணத்திற்கு அருணாசலம் அனுமதி கொடுத்து விட்டான். அந்த வயது வந்தவுடன் திருமணத்தைச் செய்வோம் என்று அண்ணாமலையிடம் சொல்லுகிறேன்; எல்லாம் அந்த ஆண்டவனுடைய அருள் படி நடக்கட்டும் என்று சொல்லி ஊருக்குப் புறப்பட்டார்.

அண்ணாலை உடையார் தன்னுடைய பிள்ளைக்கு எப்போது வயது 25 பூர்த்தியாகிறது என்று நாளை எண்ணிக் கொண்டிருந்தார்; அந்த வயது வந்தது.

சாமிநாதஅய்யர் வீட்டிற்குப்போய் ஐய்யரைக் கண்டு, சாமி நாம் பேசிக்கொண்ட வயது பூர்த்தியாகி விட்டது. பிள்ளைக்குத் திருமணம் செய்யலாமா பாருங்கள் என்றார்

அண்ணாமலை! உன் காரியத்தில் நான் கண்ணும் கருத்துமாக இருக்கிறேன். ஒருமுறை நான் அங்கு வந்த போது உன் பிள்ளை அருணாசலத்தை அழைத்து திருமண விவரத்தைக் கேட்டேன். நீ சொல்லியது போலத்தான் திருமணத்தில் விருப்பம் இல்லாமல் இருக்கிறான். இருந் தாலும் தந்தைக்கு தான் செய்யும் கடமைகளிலிருந்து அவர்கள் விருப்பத்திற்கு மாறாகவும் நடக்கமாட்டேன். அவர்கள் விருப்பப்படி திருமணம் செய்து கொள்கிறேன் என்று சொல்லுகிறான் என்றார் அய்யர்.

அதைக் கேட்ட அண்ணாமலை உடையார் சற்று யோசித்தார். உடனே ஐய்யர், கவலைப்படாதே. என்னுடைய ஆயுள் வரை அப்பாவும் தாயாரும் எப்படி இருந்தார்களோ அப்படியே நானும் இல்லறம் நடத்து வேன் என்று உறுதி செய்து கொடுத்துள்ளான்.

ஆகையால் இதில் எவ்வித சலனமும் இல்லாமல் திருமணத்திற்கு வேண்டிய ஏற்பாட்டை செய். பெண் பார்ப்பதற்கு இப்போதே முயற்சி செய். முடிவாக கொடுக்க சம்மதிக்கும் பெண்ணின் பெயரைக் கேட்டுக் கொண்டு வா. அதன் பிறகு பொருத்தம் பார்த்து முடிவு செய்வோம் என்றார் சாமிநாத அய்யர்.

அண்ணாமலை உடையார் மனம் தெளிவடைந்து, நான் ஓர் பெண்ணைப் பார்த்திருந்தேன். நிச்சயம் அந்தப் பெண்ணைத் தருவார்கள் என்று நம்புகிறேன்.

அந்தப் பெண் நம் குடும்பத்திற்கும் பிள்ளை குணத் திற்கும் தகுந்த அமைதியான குணமுள்ள பெண். ஆகையால் அந்தப் பெண் கேட்க ஓர் நாள் பார்த்துச் சொல்லுங்கள் என்றார்.

ஐய்யர் நாள் பார்த்து இந்த வைகாசி மாதம் இருபத்து ஏழாம் தேதி திங்கட்கிழமை இரவு அந்தப் பெண்ணைக் கேள் முடியும் என்றார். அதைக் கேட்டுக்கொண்டு வீடு திரும்பினார் அண்ணாமலை உடையார்.

வைகாசி மாதம் 27-ம் தேதி இரவு அம்பலவாண னேந்தல் சின்னத்தம்பி உடையார் வீட்டுக்குச் சென்று சிறிது நேரம் பேசிவிட்டு சின்னத்தம்பி உடையாரிடத்தில் தங்களின் மூன்றாவது குழந்தைபூவாயியை என் மகனுக்குத் திருமணம் செய்ய பெண் கேட்க வந்திருக்கிறேன் என்றார் அண்ணாமலை உடையார்.

சின்னத்தம்பி உடையார் 'சரி மச்சான்! முன்னால் வேறு ஆள் மூலம் தகவல் சொல்லி வருவது வழக்கம். நீங்கள் நேரில் வந்திருக்கிறீர்கள், சரி நமக்குள் என்ன. உங்கள் மகன் அருணாசலத்திற்குப் பெண் கொடுக்க நான் மறுப்பேனா? அய்யரிடம் போய்ப் பொருத்தம் பார்ப்போம். பொருத்தம் சரியாக இருந்தால் நான் பெண் தர சம்மதிக் கிறேன்' என்றார்.

வியாழக்கிழமை சம்பந்தியார் இருவரும் அய்யர் வீட்டுக்குப் போய் விவரத்தை சொல்லி வெற்றிலைப்பாக்கு தெட்சணை வைத்து இருவர் பெயருக்கும் பொருத்தம் பார்க்கும்படி சொன்னார்கள்.

ஐய்யர் இருவர் பெயரையும் ஒப்பிட்டுப் பொருத்தம் பார்த்து, ''பொருத்தம் மிக நன்றாக இருக்கிறது. வள்ளு வரும் வாசுகியும் போல் குடும்பம் நடத்துவார்கள். தாராளமாக இருவருக்கும் மணம் முடிக்கலாம்'' என்றார்.

அதைக் கேட்ட இருவரும் ''சாமி நாங்கள் இருவரும் மனம் சம்மதித்து பொருத்தம் பார்க்க வந்தோம். பொருத்தம் நன்றாக இருப்பதாகச் சொல்கிறீர்கள். ஆகை யால் இனி தாமதம் வேண்டாம். திருமணம் செய்ய முகூர்த்த தேதியையும் பார்த்துச் சொல்லி விடுங்கள்'' என்றார்கள்.

ஐய்யர் நல்ல முகூர்த்த தேதியை பார்த்து அடுத்த ஆனி மாதம் 29-ம் தேதி வியாழக்கிழமை இரவு 11.15 நாழி கைக்குமேல் 15 நாழிகைக்குள் திருப்பூட்ட நல்ல நேரம் இருக்கிறது. அந்த முகூர்த்தத்தில் திருமணத்தை நடத்தி

விடுங்கள். இதிலிருந்து திருமணத்திற்கு வேண்டியவேலை களைத் துரிதமாக ஏற்பாடு செய்யுங்கள் என்று ஐய்யர் சொன்னார்.

சம்பந்திகள் அண்ணாமலை உடையார், சுப்பையா உடையார் இருவரும் ஐய்யரிடம் சாமி நீங்கள் சொன்னபடி வேலைகளைத் துரிதமாகப் பார்த்து மேற்படி தேதியில் திருமணத்தை முடித்து விடுவோம் என்று சொல்லி அய்யரிடம் விடை பெற்றுக் கொண்டு வந்தார்கள்.

இருவரும் கல்யாண வேலைகளைத் துரிதமாகப் பார்த்து, ஆனி மாதம் 15-ம் தேதி ஐய்யரை வரவமைத்து பங்காளிகள் எல்லோரையும் அழைத்து வந்து, வீட்டில் மஞ்சள் பிள்ளையார் பிடித்து சாமிக்கும்பிட்டு, ஐய்யர் முகூர்த்த ஓலையை எழுதி அதற்குரிய சடங்குகளை செய்ய எல்லோரும் சாமிக்கும்பிட்டு முகூர்த்தஓலையை சம்பந்திகள் கையில் கொடுத்தார் ஐய்யர்.

ஆனி மாதம் 29-ம் தேதி வியாழக்கிழமை இரவு ஐந்து நாழிகைக்கு மஞ்சள் பிள்ளையார் வைத்து குத்துவிளக் கேற்றி ஊர் உறவு முறையார்கள், பங்காளிகள் எல்லோரும் சாமி கும்பிட்டு, அரசாணி அடுக்கி பெண் பிள்ளைகளுக்கு செய்ய வேண்டிய சடங்குகளை ஐய்யர் முறைபடி செய்து இரவு 11.15 நாழிகைக்கு மேல் மாப்பிள்ளை அருணா சலத்தையும் பெண் பூவாயி அம்மாளையும் மணவறையில் உட்கார வைத்து ஐய்யர் ஓமம் வளர்த்து அதற்குரிய மந்திரங்கள் ஜெபித்து உறவுமுறையார்கள் வாழ்த்துச் சொல்ல,

ஐய்யர் திருமாங்கல்யத்தை அருணாசலம் கையில் கொடுத்து, அவன் பெண் பூவாயி அம்மாளுக்கு அணி வித்துத் திருமணம் இனிது நிறைவேறியது. பெண்ணுக்கும் மாப்பிள்ளைக்கும் பெரிய மனிதர்கள் மனமிட்டு வாழ்த்தி னார்கள்.

மறுநாள் குல வழக்குப்படி மஞ்சள் நீர் போன்ற சடங்குகள் முடிந்து பிள்ளை அருணாசலமும் பெண் பூவாயி அம்மாளும் இல்லறம் என்னும் நல்லறத்தை இனிதே நடத்தினார்கள்.

இருவரும் மன ஒற்றுமையோடு ஈருடல் ஒருயிராகத் தங்கள் தங்கள் கடமைகளைத் தவறாது செய்து தனக்கு கிடைக்கும் குறுகிய விவசாய வருமானத்தைக் கொண்டு பூவாயி அம்மாள் தன் மாமனார் அண்ணாமலை உடையாரையும் கணவர் அருணாசலத்தையும் தெய்வமாக கருதி அவரவர்களுக்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளைத் தவறாது செய்து வந்தாள்.

பிள்ளை அருணாசலம் தன்னுடைய விவசாய வேலை நேரம் போக மீதி நேரங்களில் முருகப் பெருமான் மேல் பாடல்களைப் பாடுவதும் காலைமாலை முருகப் பெருமானின்படத் திற்கு மாலை அணிவித்து வழிபடுவதும் பழக்கமாகிவிட்டது.

வருஷந்தோறும் பங்குனி மாதத்தில் உத்திரத்திற்கு காப்புக்கட்டியதும், காவி உடை உடுத்தி உத்திரம் ஏழு தினங்கள் முந்தி, குளக்கரை மருத மரத்தடியில் ஊர் மக்கள் எல்லோரும் கூடி சாமி கும்பிட்டு அருணாசலத்தின் தோளில் காவடியை தூக்கி வைத்து அவருக்கு துணையாக சிலர் பழனிக்குப் போய் வருவது வழக்கமாகிவிட்டது.

அருணாசலத்தின் வயது 36-ல் அதாவது 1775-ம் ஆண்டு ஆனி மாதம் 11-ம் தேதி தந்தை அண்ணாமலை உடையார் இறைவனடி சேர்ந்தார். தந்தைக்குதான் செய்யவேண்டிய ஈமக்கிரியைகளை முறைப்படி அருணாசலம் செய்தார். பின் தானும் மனைவியும் அமைதியாகக் குடும்பம் நடத்தினார்கள்.

அருணாசல உடையாருக்குப் பிள்ளைப் பேறு இல்லை; பிள்ளை இல்லை என்று கணவன் மனைவி இருவரும் கொஞ்சமும் கவலைப்படாமல் இறைவன் அருள் கிடைத்

தால் போதும் என்று ஒருமனதுடன் தெய்வ வழிபாடும் தெய்வத் தொண்டும் செய்து எல்லா உயிர்களையும் தம்முயிர் போல பாவித்து தங்களால் இயன்ற தர்ம காரியங்களை உடலுழைப்பால் செய்து வாழ்க்கை நடத்தினார்கள்.

## 5. தண்ணீர் விளக்கும் வேலும் முருகன் ஆலயமும்

பல வருஷங்கள் ஓடின. அருணாசல உடையாருக்கும் வயது 64 நடந்தது. வயது முதிர்ந்து விட்டதால் நீண்ட தூரம் நடக்க முடியாத நிலைமை ஏற்படவே,

அருணாசல உடையாருக்குப் பெருங் கவலை மனதை வாட்டியது. நம்முடைய கடைசி மூச்சு இருக்கும் வரை பழனி முருகனுக்கு-கால் நடையாக காவடி எடுப்பது என்று உறுதி பூண்டிருந்தோமே-இவ்வருஷமே நாம் நடந்து செல்ல முடியுமா என்ற நிலை வந்து விட்டதே, என்று இரவு பகலாக-அந்தப் பழனி முருகனையே நினைத்து—நினைத்து ஏங்கினார், கலங்கினார், பின் ஒரு முடிவுக்ட வந்தார்.

நாம் இரண்டு தடவை கடுமையான நோய்-இருபத்து இரண்டு நாள் ஜன்னியில் அகப்பட்டதால் நம்முடைய உடம்பு மிக கெட்டுவிட்டது. அதனால்தான் இப்போதே இவ்வளவு தள்ளாத நிலை வந்து விட்டது. உத்திரத்திற்கு பழனிக்குப் போகாமல் இருக்க நம் மனம் தாங்காது, அதனால்—

இவ்வருஷம் பங்குனி பிறந்து உத்திரத்திற்குக் காப்புக் கட்டும் நாளன்றே, காவி உடையணிந்து காவடி தூக்கிச் சென்று எப்படியாவது பழனி சேர்ந்து காவடியை செலுத்தி அந்த எம்பெருமான் முருகக் கடவுளிடமே வரம் கேட்போம் என்று முடிவு செய்தார்.

பங்குனியில் பழனியில் காப்பு கட்டும் அன்றே நான் காவி உடை அணிந்து வழக்கம் போல் குளக்கரையில் உள்ள

மருத மரத்தடியில் ஊர்மக்கள் எல்லோரையும் அழைத்து சாமி கும்பிட்டு அருணாசலம் முருகக் கடவுள்பேரில் அனேக பாடல்களைப் பாட எல்லோரும் அரோகரா—அரோகரா என்று பின்னால் சொல்ல மனமுருகப்பாடி முடித்து எல்லோரும் சாமி கும்பிட்டு வயது பிறந்த பெரியவர் சின்னச்சாமி உடையார் காவடியைத் தூக்கி அருணாசல உடையார் தோளில் வைத்து அப்பா இவ்வருஷம் அந்த ஆண்டவனுடைய கிருபையால்தான் நீ போய்வரவேண்டும். கருணைக் கடலாகிய அவன் உன்னை அழைத்துச் செல்வான்; பயப்படாமல் தைரியமாக போய் வா என்று வழி அனுப்பி வைத்தார்.

மூன்று தினங்கள் முன்னதாகப் புறப்பட்ட அருணாசல உடையார் வழக்கம்போல் உத்திரத்தின் முதல் நாள் மாலை பழனியை அடைந்து மலையின் அடிவாரத்தில் தங்கி அதி காலையில் மலைமேல் ஏறத் தொடங்கி அதிக சிரமப்பட்டு மாலையில் சன்னதியை அடைந்து—காவடியை அவன் சன்னிதியில் செலுத்தி காவடியிலுள்ள சர்க்கரையை அவிழ்த்து அந்த ஆண்டவனுக்கு அபிஷேகம் செய்து,

கர்ப்பூர ஆராதனையைப் பார்த்து மனமகிழ்ந்து தரிசித்து மெய் மறந்து,

அப்பா! முருகா! நான் அறிந்தோ அறியாமலோ என்னுடைய கடைசி மூச்சு இருக்கும் வரை. உத்திரத்திற்கு காவடியுடன் கால்நடையாக உன் வாசலுக்கு வருவதாக உறுதிக் கொண்டிருந்தேன்; எனக்கு வயதாகித் தள்ளாமை வந்து விட்டது.

இவ்வருஷமே உன்னுடைய கிருபையால்தான் வந்து சேர்ந்தேன். அடுத்த ஆண்டு வர முடியாத நிலை வந்து விடுமோ என்று அஞ்சுகிறேன். நான் உன் சன்னதிக்கு வர ஆரம்பித்த நாள் முதல் இன்றுவரை உத்திரத்திற்குத் தவறாது வந்த நான் உயிரோடு இருந்து உத்திரத்திற்கு உன் சன்னிதிக்கு வராமல் இருக்க என் மனம் பொறுக்காதுப்பா;

முருகா—கந்தா—கலிகாலவரதனே—கருணைக் கடலே! ஞானபண்டிதா—இந்த ஏழைமீது கொஞ்சம் கருணை காட்டப்பா என்று பலவாறு தோத்திரம் செய்து—கண்ணீர்மல்கி அப்பா நான் உன்னிடம் வேறு எதையும் கேட்கவில்லையப்பா—அடுத்து வரும் உத்திரத்திற்குள் இந்தப் பூலோகத்தில் இருந்து என்னை அழைத்துக் கொள் முருகா—என்று கண்ணீர் தாரைதாரையாக ஓட அழுது புலம்பித் தவித்து, அந்த முருகனின் பாதம் நோக்கி வீழ்ந்து வணங்கி முருகனை நெடுநேரம் உற்று நோக்கி பார்த்து என்னை அழைத்துக் கொள்வாய் என்று நம்புகிறேன் முருகா என்று சொல்லி—வெளியில் வந்து உணவருந்தி இளைப்பாறினார்.

வயதானதாலும், நெடுந்தூரம் நடந்து வந்ததும், அதிக உயரம் கால் நோக மலைமேல் ஏறியதாலும் அதிகக் களைப்படைந்து மலையில் ஓர் பகுதியில் படுத்து அயர்ந்து உறங்கி விட்டார்.

இரவு மூன்றாவது ஜாம கடைசியில் எம்பெருமான் முருகக்கடவுள் அருணாசல உடையார் கனவில் தோன்றி, வள்ளி தெய்வயானையோடு காட்சி கொடுத்து — பக்தா உன்னை நான் ஏற்றுக் கொண்டேன்; என்னிடம் மன்றாடிக் கேட்ட வரம், உண்மையானது; உனக்கு வயதாகிவிட்டது. நடந்து உன்னால் இங்கு வர முடியாது என்பது எனக்குத் தெரியும். இங்கு வராமல் என்னால் உயிர்வாழ முடியாது என்று இப்போது அழைத்துக் கொள்ளுபடி கேட்கிறாய்; நீ கேட்பது என்மேல் உள்ள பாசத்தால்.

ஆனால் இன்னும் 22 ஆண்டுகள் நீ பூலோகத்தில் வாழ வேண்டியது பாக்கி இருக்கிறது! அது முடிந்தவுடன் நானுன்னை அழைத்துக் கொள்கிறேன்.

அது வரையிலும் நீ இருக்குமிடத்திற்கு நான் வந்துவிடுகிறேன். அங்கே, என்னை வைத்து பூஜை செய். இங்கு வர வேண்டாம் என்றார். இதைக் கேட்ட அருணாசல உடையார் "அப்பா முருகா! இது என்ன விளையாட்டா?

நாள் ஒன்றுக்கு லெச்சோப - லெச்சம் பேர் — உன் சன்னதியில் வந்து-மண்டி இட்டுக்கிடக்கிறார்கள். நாள்பூரா வும் பாலாலும் பன்னீராலும் பஞ்சாமிர்தத்தாலும் இடை விடாது உன்னை அபிஷேகிக்கிறார்கள். இதையெல்லாம் விட்டு இந்த ஏழையாகிய என் பின்னால் வருகிறேன் என் கிறாயே! உனக்குத் தெரியாததா, நானோ ஏழை; அன்றாடம் ஓர் தீபம் ஏற்றி உன்னைத் தரிசிக்கக்கூட முடியாதவன் என்று அருணாசல உடையார் அந்த பகவானிடம் சொல்ல.

முருகப்பெருமான் புன்சிரிப்புடன் "பக்தா நீ ஏழைதான் பரவாயில்லை. எண்ணெய் வேண்டாம்; பச்சைத்தண்ணீரை ஊற்றித் தீபம் ஏற்றி அது எரியும்-காலையில் என் அடை யாளத்தை தரச் சொல்லுகிறேன், அதை வைத்து வணங்கு போதும்" என்று சொல்லி மறைந்தார்.

அந்தக் கனவைக் கண்ட அருணாசலஉடையார் விழித்து எழுந்தார். வியர்த்து உடம்பெல்லாம் வெடவெடவென்று ஆடியது. உடம்பைத் துடைத்து நிதானப்படுத்திக் கொண்டு கனவில் முருகன் தனக்குக் கொடுத்த காட்சியையும் நீண்ட நேரம் தன்னோடு பேசியதையும் அந்தப் பெருமானின் அழகையும் அம்பிகை இருவருடைய அழகையும் நினைத்து நினைத்து பரவசம் அடைந்தார். தூக்கம் வரவில்லை.

விழித்திருந்து காலையில் எழுந்து காலைக் கடன்களை முடித்து, குளித்துவிட்டுக் கோவிலின் சன்னிதி வாசலில் நுழைந்தார். அங்கே நின்றிருந்த கோவில் அர்ச்சகர் அருணாசல உடையாரைப் பார்த்து,

"ஐயா நீங்கள் அம்பலவானனேந்தல்தானே" என்றார் ஆமாம், அய்யா என்றார். உங்கள் பெயர் அருணாசல உடையார்தானே என்றார். ஆமாம் என்றார்.

வாருங்கள் என்று சொல்லி அர்ச்சகர் முன்னால் செல்ல அருணாசல உடையார் பின்னால் சென்றார். அர்ச்சகர் நேரே மூலஸ்தானத்திற்குள் போய் முருகப் பெருமானின்

பக்கத்தில் சாற்றி இருந்த பெரிய வேலை எடுத்து வந்து பக்தர் அருணாசலம் கையில் கொடுத்தார்.

வேலைக் கையில் வாங்கிய அருணாசலஉடையார், அர்ச்சகரைப் பார்த்து ஐயா கொஞ்சம் இப்படி வருகிறீர்களா என்றார்.

அர்ச்சகர் பக்தரிடம் வந்து என்னய்யா என்றார்— "அய்யா என் பெயர் எங்கள் ஊர் பெயர் எல்லாம் சொன்னீர்களே என்னை இதற்கு முன்பே உங்களுக்குத்தெரியுமா" என்றார்.

"ஐயா பெரியவரே! இந்த பகவான் சன்னிதிக்கு நாளொன்றுக்கு எத்தனையோ ஆயிரம் பேர் வருகிறார்கள். அவர்கள் கொண்டு வரும் தேங்காய் பழம் பஞ்சாஅமிர்தம் பால் பன்னீர் இவைகளை ஆண்டவனுக்கு அபிஷேக ஆராதனை செய்து கொடுக்கவே நேரம் போதவில்லை,

வருபவர்களை நாங்கள் எப்படியய்யா ஊர்பேர் அறிய முடியும்.

நேற்றிரவு பகவான் என் கனவில் தோன்றி உங்கள் ஊர்ப் பெயர் உங்கள் பெயர் உங்கள் உருவ அடையாளத்தை அப்படியே என்னிடம் காட்டி சொல்லி இவன் என்னுடைய ஆசிபெற்ற பக்தன்; என் வலது பக்கம் சாத்தி இருக்கும் வேலை அவனிடம் கொடுத்தனுப்பு என்றும் உத்தரவு கொடுத்தார்.

அதன்படி உங்களைத் தேடி வாசலில் நின்றேன். என்னிடம் காட்டிய அங்க அடையாளமுள்ள நீங்கள் வந்தீர்கள். உத்தரவில் எனக்குச் சொன்ன பெயளை கேட்டேன்; ஆமாம் என்றீர்கள்;

ஆண்டவனின் உத்தரவுப்படி வேலை உங்கள் கையில் கொடுத்தேன். வேறு எதுவும் எனக்குத் தெரியாது" சாமி என்றார் அர்ச்சகர்,

இவைகளையெல்லாம் கேட்ட அருணாசல உடையார் மெய்மறந்து இவை எல்லாம் அங்கே ஆண்டவனின் திருவிளையாடல் என்று நினைத்து ஆண்டவன் தனக்குக் கொடுத்த வேலையும் காலடியையும் தன் தோள்மீது அமர்த்தி ஊர் நோக்கிப் புறப்பட்டார்.

பகவானைத் தோளில் சுமந்து புறப்பட்ட அருணாசலத்திற்கு உன்னுடைய முதிய பருவத்தின் சோர்வு; அலுப்பு இவைகளெல்லாம் மாறி இளமைப் பருவத்தில் இருப்பது போன்ற உணர்வு ஏற்பட்டது: தன் வீட்டின் நிலமையை யோசித்தார். நமது வீடு பல குடும்பங்கள் உள்ள வீடாயிற்றே. இளம் பெண்கள், குழந்தைகள், முதியோர்கள் எல்லாம் சேர்ந்து வாழும் வீட்டில் சாமி வைத்து கும்பிட தனி அறை போன்ற வசதிகள் இல்லையே.பகவானை எந்த இடத்தில் வைத்துக் கும்பிடுவது என்று பலவாறு யோசித்துக் கொண்டு வந்தார்.

அப்படி வரும்போது அவர் மனதில் ஓர் யோசனை தோன்றியது. பலரும் உள்ள குடும்பமாகையால் நாம் வீட்டில் வைத்துக் கும்பிடுவது முறையாகாது.

நாம் பழக்கமாக காவடி கட்டும் குளக்கரையிலுள்ள மருத மரத்தடியில் ஓர் குடில் அமைத்து அதில் பகவானை வைத்துக் கும்பிடுவது சிறந்தது என்று முடிவு செய்து கொண்டு வந்தார்.

அங்கு புறப்பட்டதில் இருந்து ஆறாவது நாள் மாலை சுமார் 25 நாழிகைக்கு அம்பலமானனேந்தல் வந்து சேர்ந்தார். வந்தவுடன் காவடியையும் வேலையும் பெரிய குளக்கரையிலுள்ள மருத மரத்தடியில் வைத்தார்.

நாம் இதுவரையிலும் வழிப் பயணத்தில் நடந்து வந்தோம். இப்போது ஊர் வந்து விட்டோம். இன்றிரவே பகவானுக்குத் தீபம் ஏற்றி தரிசனம் செய்ய வேண்டுமென்று முடிவு செய்து உடன் வீட்டிற்குச் சென்று கழிகளும்

பனை ஓலையும் கொண்டு வந்து மீதமிருந்த ஐந்து நாழிகைக்குள்

1803-ம் ஆண்டு பங்குனி மாதம் ஒரு சிறிய குடில் அமைத்து. அதில் வேலை ஊன்றி வீட்டிலிருந்து ஒரு மண் சிட்டியும் பஞ்சும் எடுத்து வந்து வேலின் முன்னால் சிட்டியை வைத்து பஞ்சில் திரி தயார் செய்து சிட்டியில் போட்டு,

தான்குளத்தில் குளித்து இரண்டு கையையும் ஒன்றாகச் சேர்த்து கை நிறையத் தண்ணீர் கொண்டு வந்து சிட்டியில் நிரப்பித் தீபத்தை ஏற்றினார். தீபம் ஜெகஜ்ஜோதியாக எரிந்தது. அதைக் கண்டு ஆனந்த பரவசமடைந்து,

தான் முன்னால் அமர்ந்து சிவஸ்தோத்திர பாடல்கள் சொல்லி பூஜை செய்து முருகப்பெருமானை வீழ்ந்து வணங்கி தரிசனம் செய்து தீபத்தை மலை ஏற்றிவிட்டுச் சென்றார் அருணாசல உடையார்.

மனைவி பூவாயி அம்மாள் கணவன் பழனியில் இருந்து வர இன்னும் இரண்டு தினங்கள் ஆகும் என்று பருத்தி எடுக்க தனது புஞ்சைக்குப் போயிருந்தார். வழக்கம் போல் பொழுது போய் வீடு வந்தவுடன் தன் கணவர் வந்து விட்டதை அறிந்து விரைவில் சமையல் செய்து முடித்து,

கணவர் இல்லம் வந்தவுடன் பாதபூஜை செய்து வணங்கி, உணவு படைத்தார். அருணாசல உடையார் உணவருந்தி இரவு நித்திரை செய்தார். மறுநாள் ஊர்ப் பெரியவர்கள் அருணாசலம் பழனிக்குப் போய் வந்து விட்டாயா என்று விசாரித்தார்கள். போய் வந்தேன் என்று சொல்லி தினமும் மாலையில் குளத்தில் குளித்து விட்டு கையில் தண்ணீரை அள்ளி வந்து சிட்டியில் ஊற்றி தீபம் ஏற்றி சாமி கும்பிட்டு வந்தார்.

சில தினங்களுக்குப் பிறகு வழக்கம் போல் மாலையில் குளத்தில் குளித்துவிட்டு கையில் தண்ணீரை அள்ளி வந்து தீபசிட்டியில் ஊற்றி தீபம் ஏற்றுவதை, குளத்தில் கால்

கைகழுவ வந்த சின்னச்சாமி உடையார் பார்த்தார். அவர் மிகவும் ஆச்சரியப்பட்டு அருணாசலம் பூஜை முடியும் வரை தானும் கூட அமர்ந்திருந்து,

பூஜை முடிந்தவுடன், 'என்னப்பா அருணாசலம்! கையில் தண்ணீரை அள்ளி வந்து சிட்டியில் நிரப்பி தீபம் ஏற்றினாய். தீபம் எரிகிறது. இதன் விவரம் என்ன என்பதை விபரமாகச் சொல்லப்பா' என்று மிகப் பணிவுடன் கேட்டார்.

அருணாசல உடையார் தான் பழனியில் முருகப் பெருமானிடம் வரம் கேட்டதையும் அவர் கனவில் தோன்றிக் காட்சி கொடுத்ததையும் அவர் கொடுத்த வரத்தையும் விவரமாகச் சொன்னார்.

அவைகளை எல்லாம் கேட்ட சின்னசாமி உடையார் ஆச்சரியப்பட்டு தானும் சுவாமியை வணங்கினார். மறுநாள் ஊர்ப் பெரியவர்களிடம் விபரத்தை சொன்னார்.

கேட்ட எல்லோரும் மாலையில் மருத மரத்தடியில் கூடிவிட்டார்கள். வழக்கம்போல் அருணாசல உடையார் குளத்தில் குளித்து கையில் தண்ணீரை அள்ளி வந்து தீபத்தில் ஊற்றி தீபம் ஏற்றுவதையும் சாமி கும்பிடுவதையும் கண்ட மக்கள் ஆச்சரியப்பட்டு பகவான் முருகக் கடவுள் நம்மை எல்லாம் காத்து ரட்சிக்க நேரே வந்து விட்டார் என்று சொல்லி எல்லோரும் தரிசனம் செய்தார்கள். அதிலிருந்து காலை மாலை வந்து தரிசனம் செய்து போவது வழக்கமாகி விட்டது.

பக்கத்துக் கிராமங்களில் உள்ளவர்களும் இதைக் கேள்விப்பட்டு அம்பலவாணனேந்தலுக்கு முருகப்பெருமான் எழுந்தருளி இருக்கிறாராம்—பச்சைத் தண்ணீரில் விளக்கு எரிகிறதாம் என்று அவரவர்களும் வந்து நேரில் பார்த்து தரிசனம் செய்து போனார்கள்.

வெள்ளி திங்களில் பக்கத்து கிராமங்களில் உள்ளவர்கள் திரளாக வந்து சாமி தரிசனம் செய்து போவது வழக்கமாகி விட்டது.

இப்படிச் சில மாதங்கள் நடந்து கொண்டிருக்கும் போது ஊரில் உள்ள பெரிய மனிதர்கள் கூடி அருணாசல உடையார் 'அப்பா அருணாசலம், பகவானை குடிலில் வைத்து தீபம் மட்டும் ஏற்றி வணங்குகிறாய்.

நாங்களும் வந்து வணங்குகிறோம். நாம் எல்லோரும் சேர்ந்து நம்மால் முடிந்த அளவு மண் சுவர் வைத்து மேல் கூரை போட்டு சிறிய கோவிலாக அமைத்து அதில் இந்த வேலை ஸ்தாபிதம் செய்து—

அபிஷேகம் நெய்வேத்தியம் ஆராதனைகள் செய்து பகவானை நாம் எல்லோரும் தரிசனம் செய்தால் நன்றாக இருக்கும். அப்படி செய்வதுதான் நல்லது என்று நாங்கள் கருதுகிறோம். நீ என்ன நினைக்கிறாய்என்றுகேட்டார்கள்.

அதைக் கேட்ட அருணாசல உடையார் முருகப் பெருமான் உலகில் எல்லோரையும் காத்து ரட்சிக்கின்ற, கருணைக் கடவுள். அவரை நீங்கள் எல்லோரும் தரிசித்து, அவருடைய அருளைப் பெற வேண்டுமென்பதுதான் என்னுடைய ஆசை. அவருக்கு நம்மால் முடிந்த அளவு ஓர் ஆலயம் அமைத்து அவருடைய அடையாளமாகிய வேலை ஸ்தாபிதம் செய்து, அபிஷேக ஆராதனை செய்து நாமெல்லாம் வழிபடுவோமென்று நீங்கள் விரும்புவதை நான் மறுக்கவில்லை, அப்படியே செய்வோம்.

இதன் மூலம் இங்கு முருகப் பெருமானுக்கு ஓர் ஆலயம் அமைத்தால் இப்பகுதியில் வாழும் மக்கள் எல்லோரும் வந்து தரிசித்து பகவானின் அருளைப் பெறுவார்கள். ஆகையால் அதன்படியே செய்வோம் என்றார் அருணாசல உடையார்.

ஊரில் எல்லோரும் கூடினார்கள். அப்போது சின்னச் சாமி உடையார், அருணாசல உடையார் பொருட்டு முருகப்பெருமான்-நம் அம்பலவாணனேந்தலுக்கு எழுந் தருளி இருக்கிறார். இனிமேல் நாம் எல்லோரும் சேர்ந்து ஒரு சிறிய ஆலயம் அமைத்து அதில் ஸ்தாபிதம் செய்து

நம் கிராமத்தில் உள்ள பார்க்கவ குலமக்கள் அனைவருக்கும் இந்த முருகக் கடவுள்தான் குலதெய்வமெனப் போற்றி விஷேசமாகக் கொண்டாட வேண்டும்.

இப்போதே மருத மரந்தடியில் எழுப்பி மேல் கூரை போட்டு முடிப்பதற்கு வேண்டிய சாமான்களை நாம் எல்லோரும் சேகரம் செய்து சுணங்காமல் வேலையைப் பார்க்க வேண்டுமென்று சொன்னார் அனைவரும் நீங்கள் சொல்கிறபடியே செய்வோம் என்றார்கள்.

ஆலயம் அமைக்க ஒரு நாள் பார்த்து முகூர்த்தம் செய்ய வேண்டும். அதற்குரிய நாளை நம் பஞ்சாங்க அய்யரிடம் போய் பார்த்து வருவதென்று முடிவு செய் தார்கள்.

சின்னசாமி உடையாரும் சுப்பையா உடையாரும் ஐயர் வீட்டுக்குப் போய் ஐயரிடம் விபரத்தைச் சொல்லி நாள் பார்க்கும்படி சொன்னார்கள். ஐயர் பஞ்சாங்கத்தை ஆராய்ந்து பார்த்து ''சின்னசாமி இப்போது சமீபத்தில் நாள் ஒன்றும் சரியாக இல்லை. வைகாசியில் நாள் இருக்கிறது. அதில் முகூர்த்தம் செய்தால் பின்னால் இது ஒரு பெரிய ஆலயமாக அமையும். இதை நன்கு எல்லோரும் கலந்து பேசி முடிவெடுங்கள்'' என்று சொல்லியனுப் பினார்.

அதைக் கேட்டுக் கொண்டு வந்து இருவரும் ஊரில் எல்லோரையும் அழைத்து ஐயர் சொன்ன விபரத்தைச் சொன்னார்கள். அதைக் கேட்ட அனைவரும், ஒரே மனதாக, இரண்டு மாதம் சுணங்கினால் பரவாயில்லை. பின்னால் இது ஒரு பெரும் ஆலயமாக அமைவதுதான் நமக்குப் பெருமை.

ஆகையால் நம் கோவிலுக்கு வேண்டிய சாமான்களை சேகரம் செய்வோம், அப்போது ''ஐயர் சொல்லும் தேதியில் முகூர்த்தம் செய்து, சீக்கிரம் கோவிலைக் கட்டி முடிப்போம்'' என்று முடிவு செய்தார்கள்.

வைகாசி பிறந்தவுடன் சுப்பையா உடையாரும் சின்னச்சாமி உடையாரும் போய். "சாமி தாங்கள் சொன்னபடி, வைகாசியில் முகூர்த்தம் செய்வதென்று அதற்கு வேண்டிய சாமான்களை தயார் செய்து முடித்தோம். இப்போது அதற்கு ஓர் நல்ல நாளாகப் பார்த்துச் சொல்லுங்கள். இந்த கோவில் என்றும் வளர்ந்து கொண்டு போகும்படி" என்றார்கள்.

ஐயர் "வைகாசி மாதம் 13 ம் தேதி வெள்ளிக்கிழமை வளர்பிறையில் முகூர்த்தம் வைத்துக் கொடுத்து, இதன்படி செய்யுங்கள்; பின்னால், போகப் போக இது ஒரு பெரிய ஆலயமாக வளரும்" என்றார்.

அதன்படி வைகாசி மாதம் 13 ஆம் தேதியில் முகூர்த்தம் செய்து தச்சு நாலேகால் முழு சதுரத்தில். மண் சுவராலான ஓர் சிறிய ஆலயத்தை அமைத்து, அருணாசல உடையாரி கையில், வேலை அதில் ஊன்றி அபிஷேக ஆராதனை இவைகளை அருணாசல உடையாரே செய்ய ஊர் மக்களும் பக்கத்து கிராமங்களில் உள்ளவர்களும் சாமி தரிசனம் செய்து போவது பழக்கமாகி விட்டது.

இப்படி நடந்து கொண்டிருக்கும் போது, அருணாசல உடையாருக்கு வயது 85 ஆகிவிட்டது. வயது முதிர்ந்ததால் பகவானுக்கு செய்யும் அபிஷேக ஆராதனைகளைச் செய்ய மிகவும் கஷ்டப்பட்டார். கஷ்டத்தை எண்ணியும் தனக்கு ஆண்டவன் சொன்ன 22 வருஷம் முடியப் போகிறதே. ஆண்டவனுக்கு நாம் செய்யும் இந்த தொண்டை யாரிடம் ஒப்படைப்பது என்றும் மிக்ககவலைப் பட்டார்.

முருகப்பெருமான் ஓர் நாள் கனவில் தோன்றி "பக்தா, இன்னும் ஓராண்டில் உன்னை என்னிடம் அழைத்துக் கொள்கிறேன். இப்போது நீ எனக்கு செய்யும் தொண்டை யாரிடம் ஒப்படைப்பது என்று கவலைப்படுகிறாய். உன் ஊருக்குத் தென்மேற்கே-கானூர் என்னும் கிராமத்தில் கணபதி என்று ஒரு பண்டாரம் இருக்கிறான்

அவனிடம் கொடு. அவன் வாரிசாகப் பணி செய்வான் என்று சொல்லி மறைந்தார்.

இவைகளைக் கனவில் கேட்ட அருணாசல உடையார், ஓர் நல்ல நாளன்று கானூர் போய்—பண்டாரம் வீட்டில் விசாரிப்போம் என்று முடிவு செய்திருந்தார்.

ஓர் நல்ல நாளன்று அருணாசல உடையார் கானூருக்கு சென்று, சுப்பையா பண்டாரம் வீட்டை அடைந்தார். அருணாசல உடையாரைக் கண்டதும் பண்டாரம் சுப்பையா இருகரம் கூப்பி வணங்கி, அய்யா வாருங்கள், என்று வரவேற்று, வீட்டினுள் நின்று தன் மனைவியை பொன்னம்மாள் சீக்கிரம் வா என்றார். பொன்னம்மாள் வெளியில் வந்து, அருணாசல உடையாரைப் பார்த்ததும், தண்ணீர் குடத்தை எடுத்து வந்து அவர் பாதத்தில் ஊற்றி கழுவி, கணவன் மனைவி இருவரும் அருணாசல உடையார் பாதத்தில் வீழ்ந்து வணங்கி திண்ணையில் பாய் விரித்து அமரச் சொன்னார்கள்.

தாங்கள் இந்த ஏழையின் குடிசைக்கு எழுந்தருள நாங்கள் ஏதோ புண்ணியம் செய்திருக்கிறோம் என்றார் சுப்பையா. அப்போது மனைவி பொன்னம்மாள் கணவரிடம்-அன்று தாங்கள் கண்ட கனவை, அய்யாவிடம் சொல்லி, அதற்கு விபரம் கேளுங்கள் என்றார்.

"ஐயா பெரியவுங்களே, எனக் குக்கல்யாணம் ஆகி ஏழு ஆண்டுகள் வரையிலும், குழந்தை இல்லை. நாங்கள் இருவரும் குழந்தை இல்லையே என்று கவலையுடன் இருந்தோம். அப்போது தான் நம் அம்பலவாணனேந் தலுக்கு, முருகப்பெருமான் எழுந்தருளி பச்சைத் தண்ணீரில் தீபம் எரிகிறதென்று எல்லோரும் அங்கு வந்து சாமி தரிசனம் செய்து வந்தார்கள்.

அப்போது என் மனைவி, அம்பலவாணனேந்தலுக்கு முருகக் கடவுள் வந்து அமர்ந்திருக்கிறாராம். பச்சைத் தண்ணீரில் விளக்கு எரிகிறதென்று, எல்லோரும் சென்று

தரிசனம் செய்து வருகிறார்கள். நீங்களும் போய்த் தரிசனம் செய்து நம் பிள்ளை இல்லாக் குறையை. முறையிட்டு விபூதி வாங்கி வாருங்கள்—பச்சைத் தண்ணீரில் விளக்கை எரிக்கும் வல்லமை படைத்தவர்—நம் குறையையும் போக்குவார் என்று என் மனைவி பொன்னம்மாள் சொன்னாள்.

அதன்படி ஓர் வெள்ளிக்கிழமை மாலையில்த் அங்கு வந்து தீபம் பார்த்து சாமி தரிசனம் செய்து, இரவு கோவிலில் படுத்திருந்தேன்.

நீங்கள் கனவில் வந்து. உன்னுடைய குறையைத் தீர்க்கிறேன். உனக்கு ஆண்பிள்ளை பிறக்கும் என்று விபூதி கொடுத்தீர்கள். விழித்துக் கொண்டேன். பிறகு சாமியை வணங்கிப் படுத்திருந்து. காலையில் உங்கள் கையில் விபூதி வாங்கி வந்து தண்ணீரில போட்டு சாப்பிட்டு மீதியை பூசிக்கொள் என்று என் மனைவியிடம் சொன்னேன்.

அதே மாதத்தில் கருவுற்று ஆண் குழந்தை பிறந்தது. இப்போது மூன்று பிள்ளைகள் இருக்கிறது; அதிலிருந்து, மாதம் இரண்டு முறை அங்கு வந்து நம் சாமியை தரிசனம் செய்து வந்து கொண்டு இருக்கிறேன்.

இப்போது இரண்டு தினங்களுக்கு முன் ஓர் நாள் கனவில் வயது முதிர்ந்த கிழவர் நரைத்த தாடியுடன் பெரிய விருட்சத்தின் கீழ் நிற்கிறார்; நான் அவரை வணங்கி ஐயா என்றேன். அவர் உன்னுடைய மூத்த மகன் கணபதியை என்னிடம் அனுப்பு.

எனக்குப் பணிவிடை செய்ய ஓர் ஆள் வேண்டி இருக்கிறது என்று சொல்லி மறைந்தார். விழித்துக் கொண்டேன். அதை என் மனைவியிடம் சொன்னேன். அந்தக் கனவிற்கு அர்த்தம் தெரியவில்லை. நாங்கள் இருவரும் குழம்பிப் போனோம். அதைத்தான் உங்களிடம் கேட்கும்படி பொன்னம்மாள் சொல்லுகிறாள் என்று சுப்பையா சொன்னார்.

அருணாசல உடையார், அப்படியா? இதெல்லாம், அந்த முருகன் திருவிளையாடலப்பா—இங்கே உன்னிடம் இப்படி சொல்லி இருக்கிறார்—அங்கே நான் சில நாளாக நமக்கு வயதாகி விட்டது. ஆண்டவன் வரமும் இன்னும் ஓராண்டில் நமக்கு முடிவடைகிறது. இப்போது நாம் பகவானுக்கு செய்யும் தொண்டை யாரிடம் ஒப்படைப்பது என்று ரொம்ப கவலைப் பட்டுக் கொண்டிருந்தேன்; நான்கு தினங்களுக்கு முன் என் கனவில் தோன்றி பக்தா, நான் செய்யும் தொண்டை யாரிடம் ஒப்படைப்பது என்று கவலைப்படுகிறாய். கவலைப்பட வேண்டாம். இதற்கு தென்மேற்கே கானூரில் சுப்பையா என்னும் பண்டாரம் இருக்கிறான்.

அவனுடைய மூத்தமகன் கணபதியை அழைத்து வந்து, அவனிடம், ஒப்படை. அவன் வாரிசு பரம்பரையாகச் செய்வான் என்று சொல்லி மறைந்தார்.

இப்படிச் சொல்லி இருக்கிறாரே. அவரைக் கேட்டால், என்ன சொல்லப் போகிறாரோ என்று யோசித்து, சரி அவன் ஆணைப்படி போய் கேட்போம் என்று முடிவு செய்து, நல்ல நாள் பார்த்து இன்று வந்தேன்.

அவன் முன்னாலே உன்னிடம் வந்து எனக்குப் பணி விடை செய்ய உன் மூத்தமகனை அனுப்பு என்று சொல்லி இருக்கிறான். நீ ரொம்பப் புண்ணியம் செய்திருக்கிறாய். அதனால், இந்த பாக்கியம் உனக்குக் கிடைத்திருக்கிறது" என்றார் அருணாசல உடையார்.

இதைக் கேட்ட சுப்பையாவும் மனைவி பொன்னம்மாளும், "சாமி அவர் கொடுத்தப் பிச்சை இந்தப் பிள்ளைகள். அவருக்குத் தேவை என்றால் உடனே அழைத்துப் போங்கள். நாங்கள் இது புரியாமல் ஏதேதோ நினைத்துக் குழம்பினோம்.

1825 ம். ஆண்டு தை மாதம் ஆகிய இப்போதே அழைத்துப் போங்கள் என்று இருவரும் அனுமதி கொடுத்தார்கள்.

அதன்படி கணபதியை அழைத்து வந்து கோவிலில் செய்யும் முறைகளைச் சொல்லிக் கொடுத்து வந்தார் அருணாசல உடையார்.

## 6. தைப்பூசம்-பங்குனி உத்திரம் திருவிழா

அருணாசல உடையாருக்கு வயது 86 நடந்தது. பழனியிலிருந்து, முருகப் பெருமானை அம்பலவாணனேந்தலுக்குக் கொண்டு வந்து ஸ்தாபிதம் செய்தது முதல் 22 ஆண்டு காலமும், மாலையில் குளத்தில் குளித்து கையில் தண்ணீர் அள்ளி வந்து தீபம் ஏற்றும் பழக்கம் இடைவிடாது நடந்து கொண்டிருந்தது. 1825 ஆம் ஆண்டு 22 வது வருஷ முடிவிலும் தனக்கு 86 வது வயது இறுதியிலும், தைமாதம் தைப்பூச நன்னாளில் பக்தர்-தொண்டர் அருணாசல உடையார் இறைவனடி சேர்ந்தார்.

அருணாசல உடையார் ஆத்மா இறைவனடி சேர்ந்தவுடன் ஊர் மக்களும் அக்கம் பக்கத்துக் கிராமத்தில் உள்ளவர்களும் திரளாக வந்து கூடினார்கள். வந்த ஜனங்கள் ஆண், பெண் சகலரும் அருணாசல உடையார் உடலை வீழ்ந்து வணங்கி அவரவர்களும் முருகா எங்கள் அருணாசல உடையாரை உன்னோடு ஐக்கியப்படுத்திக் கொள்; மறுபிறவி கொடுக்காமல் உன்னுடன் சேர்த்துக் கொள் என்றெல்லாம் அவரவர்களுக்குத் தெரிந்த முறையில் இறைவனைப் பிரார்த்தனை செய்தார்கள்.

ஊரில் உள்ள பெரிய மனிதர்கள் கூடி அருணாசல உடையார் ஓர் பெரிய பக்தர்; அவருடைய ஆத்மா இறைவனடி சேர்ந்து விட்டது. அவரது உடலை நாம் ஓர் இடத்தில் சமாதி வைத்து இறைவனோடு ஒப்பிட்டு எல்லோரும் வணங்க வேண்டுமென்று பேசினார்கள்.

அப்போது பொன்னுசாமி உடையார் வந்தார். அவர் அருணாசல உடையாரைவிட வயதில் கொஞ்சம் முதியவர்.

அப்பா நீங்கள் பேசுவது சரிதான். நானும் முன்னால் அப்படித்தான் நினைத்திருந்தேன். அதற்கு மாறாக அருணாசலம் இரண்டு மாதங்களுக்கு முன்னால் என்னைத் தனிமையில் அழைத்து, நான் இன்னும் அதிக நாள் பூலோகத்தில் இருக்கமாட்டேன். இந்த தை மாதம் முப்பதாம் தேதிக்குள் என் ஆத்மா பிரிந்து விடும். என் உடலை, நமது குலவழக்கம் போல் தகனம் செய்து விடுங்கள்; வேறு எதுவும் செய்யாதிர்கள் என்று என்னிடம் சொன்னான்.

என்னப்பா, நான் உன் உடலை சமாதி வைத்து வெள்ளி, திங்கள் சாம்பிராணி போட்டு ஊர்மக்கள்வணங்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்று, நானும் முத்துச் சாமியும் பேசி இருந்தோம். இப்படிச் சொல்கிறாய் என்றேன்.

அண்ணா அப்படி எதுவும் செய்வீர்களென்றுதான் நான் இப்போதே உங்களிடம் சொல்கிறேன். நீங்கள் சொல்வதெல்லாம் ஆண்டவனுக்கு செய்யவேண்டியவைகள் நான் மனித உடலைத் தாங்கிப் பிறந்து பூலோகத்தில் வாழ்ந்தவன். அவைகள் எனக்குப் பொருந்தாது. ஆகவே நான் சொன்னபடி செய்துவிடுங்கள் என்றான். அதை நான் முத்துசாமியிடமும் சொல்லி இருக்கிறேன். அவனும் எவ்வளவோ மன்றாடிக் கேட்டானாம். என்னிடம் சொல்லியபடியே சொன்னதாக முத்துச்சாமி சொன்னான் என்றார்.

இதைக் கேட்ட எல்லோரும் அவர் விருப்பப்படிதான் செய்யவேண்டும். மாறாக எதுவும் செய்யக் கூடாது என்று முடிவு செய்து—

இங்குள்ள மரங்களில் தகனத்திற்கு உயர்ந்தது வேம்பு. ஆகையால்-உடனே வேப்பமரங்களை வெட்டி அடுக்கி, பல நூற்றுக்கணக்கான மக்கள் புடைசூழ அருணாசல

உடையாரின் உடலை அதில் அமர்த்தித் தகனம் செய்தார்கள்.

உடல் வெந்து சாம்பலாகும் வரை, நூற்றுக்கணக்கான மக்கள் சுற்றிலும் நின்று-அய்யாவினுடைய ஆத்மா இறைவனடி சேர வேண்டும் என்று பிரார்த்தனை செய்தார்கள்.

அன்று மாலையில் ஊர்ப் பெரியவர்களெல்லாம் கோவிலில் கூடி-அருணாசல உடையார் இறைவனடி சேர்ந்து விட்டார். இனி மேல் கோவிலுக்குச் செய்ய வேண்டிய தொண்டைப் பண்டாரம் கணபதியே செய்யட்டும் என்று முடிவு செய்து, கணபதியை அழைத்து அப்பா கோவிலுக்குச் செய்யவேண்டிய முறைகளை இனி மேல் நீ தான் செய்ய வேண்டும்

ஆகையால்-குளத்தில் குளித்து விட்டுக் கை நிறைய தண்ணீர் அள்ளி வந்து சிட்டியில் ஊற்றி தீபத்தை ஏற்று என்று சொல்லி எல்லோரும் கோவில் வாசலில் வரிசையாக நின்றார்கள்.

பண்டாரம் கணபதி குளத்தில் குளித்து, கையில் தண்ணீரைக் கொண்டு வந்து சிட்டியில் ஊற்றி தீபத்தை ஏற்றினார். தீபம் சுரு சுரு என்று எரியவில்லை;

அதை உற்று நோக்கி நின்ற ஊர்ப் பெரியவர்கள்-சற்று திகைத்து நின்றார்கள்.

பொன்னுசாமி உடையார்-அப்பா பச்சைத் தண்ணீரில் விளக்கு எரிவது எல்லோருக்கும் நடக்கிற காரியமல்ல. அவனுடைய பக்தர்களுக்கு, அவன் கொடுக்கும் அருள் பிரசாதம்.

ஆகையால் உலகப் பழக்கப்படி எண்ணெய் விட்டு தீபம் போடுவோம் என்று முடிவு செய்து, அன்று முதல் எண்ணெய் தீபம் போட்டுத் தரிசனம் செய்தார்கள்.

5

கோவில் பூஜை முறைகளை பண்டாரம் கணபதி செய்து வந்தார்.

பல மாதங்களுக்குப் பிறகு ஊர்ப் பெரிய மனிதர் பொன்னுச்சாமி உடையார், சுப்பையா உடையார், முத்துச்சாமி உடையார் போன்ற பெரியவர்கள் கோவிலில் இருந்து, நமது அருணாசல உடையாரின் உறுதியான பக்திக்கு இரங்கி-முருகன் அருணாசலத்தின் பொருட்டு பழனியை விட்டு ஏழைகள் வாழும் நம் அம்பலவாணனேந் தலுக்கு எழுந்தருளி,நான் இங்கு வந்து விட்டேன்.

என்னை உண்மையோடு வணங்கும் தொண்டர்களுக்கு வரும் இன்னலைப் போக்கி அருள் வழங்குவேன் என்பதற்கு அடையாளமாக 22 ஆண்டுகள் பச்சைத் தண்ணீரில் விளக்கை எரித்துக் காண்பித்திருக்கிறார், முருகக்கடவுள்.

பழனியில் அருணாசலத்திற்கு வேல் கொடுத்தது பங்குனி, உத்திரத்தில் அருணாசலத்தின் ஆத்மா இறை வனடி சேர்ந்தது, தைப்பூசத்தில்! இவை இரண்டும், முருகனுக்கு உகந்த முக்கிய நட்சத்திரங்கள். ஆகையால் வருஷம் இரண்டு முறை தைபூசத்திற்கும்,பங்குனி உத்திரத் திற்கும் திருவிழாச் செய்வோம்.

திருவிழாச் செய்து சுவாமியை ஊரில் வலமாக தூக்கிவர ஏதுவாக நமது ஊர், நாலு வீதியாக அமைந் திருக்கிறது என்று பேசினார்கள். பிறகு இந்தக் காரியம் ஆரம்பித்தால் நிறுத்தக் கூடாது. உலகம் உள்ள அளவும் நடக்கவேண்டிய காரியம். ஆகையால் ஒரு நல்ல நாள் பார்த்து ஊரில் அனைவரையும் கோவிலுக்கு அழைத்து கலந்து பேசி முடிவு செய்வோம் என்று முடிவு செய்தார்கள்.

கார்த்திகை மாதம் 13ந் தேதி வெள்ளிக்கிழமை இரவு ஊரில் அனைவரையும் அழைத்து கோவிலில் கூடி சிலர் முன்னால் பேசிய விபரத்தை, கூட்டத்தில் விளக்கமாகக் கூறினார் சுப்பையா உடையார்.

பொன்னுச்சாமி உடையார் அப்பா ‘முனியில் இருந்து முருகன் அருணாசலத்தின் மூலம் நம் வருக்கு வந்தது முதல் இன்று வரை, இங்கு நடந்தை கஸெல்லாம் நம் எல்லோருக்கும் தெரியும், பக்தர் அருணாசலம் இறைவனடி சேர்ந்து விட்டார். நாம் இருப்பவர்களும் வரும் வாரிசுகளும்—இந்த முருகப் பெருமானை எவ்வளவு பயபக்தியோடு கொண்டாடுகிறோமோ அவ்வளவுக்கு நமக்கு வரும் நோய் பிணியைப் போக்கி நன்மையைக் கொடுப்பார்.

குழந்தையும் தெய்வமும் கொண்டாடிய இடத்தில்— என்பது முதுமொழி.

அருணாசலத்திற்காக வந்தவரை இங்கேயே தங்க வைப்பது, நம்முடைய, பக்தியும், தொண்டும்தான் அருணாசலத்தின் ஞாபகார்த்தமாக, தைபூசத்திற்குப் பத்து நாள் திருவிழாவும், பங்குனி உத்திரத்திற்குப் பத்து நாள் திருவிழாவும் நடத்துவோம். அப்படிச் செய்தால் தான் அவருக்குத் தொண்டு செய்யும் வாய்ப்பு ஏற்படும். இல்லையேல் ஏதோ நமக்கு வேலை இல்லாத நேரத்தில் வந்து வணங்கிப் போவோம். தொண்டுக்குத்தான் இறைவன் சீக்கிரம் இரங்குவான் என்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். இதை எல்லோரையும் அழைத்துச் சொல்லுவோம். சம்மதமிருந்தால் செய்வோம் என்று தான் உங்களையெல்லாம் அழைத்து வந்தோம் என்று பொன்னுசாமி உடையார் சொன்னார்.

அதைக் கேட்ட ஊர்மக்கள் அனைவரும் ஏதோபித்து, “நீங்கள் சொல்லியபடியே செய்வோம். இங்கு எழுந்தருளி இருக்கும் முருகக் கடவுள்தான், நம்முடைய உடல், பொருள், ஆவி அனைத்தையும் காக்க வல்லவர்.

அவருக்கு எதைச் செய்வதானாலும் ஊர்மக்களாகிய நாங்கள் மறுப்புச் சொல்லமாட்டோம். இப்போது வரும் தைப்பூசத்திற்கே திருவிழாவை ஆரம்பிக்க பெரியவர்கள் யோசித்து அதற்கான ஏற்பாட்டைச் செய்யுங்கள் என்றார்கள்.

சகலரும் சம்மதம் தெரிவித்தவுடன் பெரியவர்கள் "சரி அனைவரும் ஒப்புதல் கொடுத்து விட்டார்கள். நாமெல்லாம்; கிராமத்தில் வாழ்பவர்கள். திருவிழா செய்யும் விபரம் தெரியாது. ஆகையால் (திருப்பெருந்துறைக் ஆவுடையார் கோவிலுக்குப் போய் மணிவாசகக் குருக்களிடம் விபரத்தைச் சொன்னால், அவர் திருவிழாச் செய்ய வேண்டிய முறை, அதற்கு வேண்டிய சாமான் எல்லாவற்றையும் விபரமாகச் சொல்லுவார். பிறகு முடிவு செய்வோம்." என்றார் சின்னச்சாமி உடையார். சரி என்று எல்லோரும் சம்மதித்தார்கள்.

மறுநாள் காலையில், பொன்னுசாமி உடையார் சுப்பையா உடையார், சின்னச்சாமி உடையார் கருப்பையா உடையார், முத்துச்சாமி உடையார் ஐவரும் கோவிலுக்கு வந்து, சாமி தரிசனம் செய்து ஆவுடையார் கோவில் போய் மணிவாசகக் குருக்களிடம் தாங்கள் வந்த விபரத்தைச் சொன்னார்கள்.

குருக்கள் அய்யர், "நீங்கள் எடுத்திருக்கும் முயற்சி, போற்றத் தக்கது. இதை விடாமல் நீண்ட காலம் நடத்த வேண்டும். திருவிழாச் செய்வது கொஞ்சம் சிரமமான வேலைதான். நீங்கள் ஒற்றுமையுடன் ஆளுக்கொரு வேலையாகப் பார்த்தால் பணச் செலவு அதிகம் வராது, வேலைதான் அதிகம். அதை நீங்கள் பார்த்தால் எளிதில் முடிக்கலாம், அங்கு விக்கிரகம் இல்லையே" என்று கேட்டார் ஐயர்.

இல்லை, வேலை அலங்காரம் செய்து, வீதி உலா தூக்கி வருவோம் என்று யோசித்திருக்கிறோம் என்றார்கள்.

சரி; செய்யலாம். சுவாமி வைத்து தூக்கி வர ஒரு கேடயம் வேண்டும். அதைக் கட்டித் தூக்க இரண்டு வாரைக் கம்புகள்.

சுமார் ஆறு தீவட்டிகள் தயார் செய்து வையுங்கள். தைமாதம் பூச நட்சத்திரத்திற்குப் பத்து தினங்கள் முன்னதாக நான் அங்கு வருகிறேன்.

காலையில் ஓமம் வளர்த்து அதற்குரிய மந்திரங்கள் ஜெபித்து புண்ணியங்களைப் பண்ணி சுவாமிக்கு வலது கையிலும், பண்டாரத்திற்கும் மூன்று கிளையுள்ள மஞ்சளால் காப்புக் கட்டிக் கொடியேற்ற வேண்டும்.

இரவு சுவாமிக்குப் பால பன்னீர் இவைகளால் அபிஷேகம் செய்து நல்ல பூக்களால் அலங்காரம் பண்ணி ஆராதனைகள் செய்த பிறகு சாமியைக் கேடயத்தில் வைத்து; வீதி உலா தூக்கி வரவேண்டும். சாமி சேர்க்கையானவுடன் பிரசாத வினியோகம் செய்யவேண்டும். இது தான் திருவிழா செய்ய வேண்டிய முறை.

முதல் வருஷமாகையால், நான் பத்து தினங்களும் அங்கே தங்கி இருந்து அவைகளை முறைப்படி நானே செய்து காண்பிக்கிறேன். பின்னால் நீங்களே செய்து கொள்ளலாம் என்று மணிவாசகக் குருக்கள் சொன்னார்.

அய்யர் சொன்ன விபரங்களை எல்லாம் ஐவரும் கேட்டு "சாமி தாங்கள் சொல்லியதை எல்லாம் கேட்டுக் கொண்டோம். நாங்கள் ஊருக்குப் போய் இப்போதிருந்தே தேவையான சாமான்களைத் தயார் செய்கிறோம். தாங்கள் சொல்லியபடி, அது சமயம் தாங்கள் வந்திருந்து திருவிழா முறையை எங்களுக்குக் கற்றுத் தர வேண்டும்" என்றார்கள்.

அப்படியே செய்கிறேன் என்றார் ஐயர்

ஐயரிடம் விடை பெற்றுக் கொண்டு ஊர் வந்தார்கள் வந்தவர்கள் ஊரில் எல்லோரிடமும் விபரத்தைச் சொல்லி வேண்டிய சாமான்களைத் தயார் செய்து முடித்தார்கள்.

தை மாதம் பிறந்த உடன் ஆவுடையார் கோவில் போய் ஐயரிடம் விபரத்தைச் சொன்னார்கள்.

ஐயர், ''சரி, முக்கியமான சாமான்கள்; தயார் செய்து விட்டீர்கள்'' என்று சொல்லி.

1826-ம் ஆண்டு தை மாதம்

காப்பு கட்டும் தேதியையும்; அதற்கு வேண்டிய சாமான்களையும் ஓர் ஓலை நறுக்கில் எழுதிக் கொடுத்து இவைகளைத் தயார் செய்து வையுங்கள். அன்று காலையில் நான் அங்கு வருகிறேன் என்றார்.

அதன்படி ஐயர் வந்து காப்புக் கட்டி முறைப்படி பத்து தினங்களும் திருவிழா நடத்தி பத்தாம் நாள் பூச நட்சத்திரத்தில் சுவாமிக்கு தீர்த்தம் கொடுத்து திருவிழாக் கொண்டாடி முடித்தார்கள்.

திருவிழா செய்யும் முறைகளை நன்கு தெரிந்து கொண்டதால், பங்குனி உத்திரத்திற்குக் காப்புக் கட்ட மட்டும் ஐயரை அழைத்து வந்து செய்யவேண்டிய முறைப்படி செய்து; காப்புக் கட்டி திருவிழா செய்து முடித்தார்கள். அதன்படியே வருஷம் இரண்டு முறை திருவிழா செய்வது பழக்கமாக நடந்து கொண்டிருந்தது.

# 7. முருகன் கற்சிலை பிரதிஷ்டை

அம்பலவாணனேந்தல் கிராமம் திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்தது.

ஆவுடையார் கோவில் மடத்திற்குச் சொந்தமான கிராமம். ஆகையால் ஆவுடையார் கோவில் மடத்தைச் சேர்ந்த. அதிகாரிகளும் மடம் கட்டளைத் தம்பிரானும் அம்பலவாணனேந்தலில் சாகுபடி காலம். கதிர் அறுவடை காலங்களில் அடிக்கடி கிராமத்திற்கு வருவது பழக்கம்.

அதன்படி பங்குனித் திருவிழாவின்போது, ஆவுடையார் கோவில் மடம் கட்டளைத் தம்பிரான் காசிநாத தம்பிரான் என்பவர் கிராமத்திற்கு வந்து கோவிலில் இருந்தார். தம்பிரான் வந்தால் ஊர்ப் பெரியவர்கள் வந்து, தம்பிரானை வீழ்ந்து வணங்கி விபூதிவாங்குவார்கள். பின் அவர்கேட்கும் விபரங்களுக்குப் பதில் சொல்லி அவர் போகும் வரை அவரோடு இருந்து புறப்பட்டவுடன் ஊர்க் கடைசிவரை போய் வழி அனுப்புவது வழக்கம்.

அன்று வழக்கம் போல் ஊர்ப் பெரியவர்கள் வந்தார்கள். எல்லோருக்கும் விபூதி கொடுத்து அமரச் சொன்னார்: எல்லோரும் அமர்ந்தார்கள்.

பிறகு கோவிலில் திருவிழா செய்வதை விபரமாகக் கேட்டார். காசினாத தம்பிரான், அவர்கள் கேட்டதற்கு, சுப்பையா உடையார் திருவிழா ஆரம்பித்தது முதல், அன்று வரை நடப்பதை விபரமாகச் சொன்னார். முழு விபரத்தையும் அறிந்து தம்பிரான் அவர்கள் நீங்கள் ஒன்று சேர்ந்து ஆரம்பித்து செய்வது மிக உயர்ந்த காரியம்; இப்பகுதியில் முருகப் பெருமானுக்கு ஓர் தனி ஆலயம் இல்லை,

முருகக்கடவுளை வணங்கவேண்டும்; அவருக்கு விருப்பமான காவடி எடுத்து வேல் போட்டுப் பிரார்த்தனை செலுத்த வேண்டுமென்று விரும்பினால், பழனிதான் போகவேண்டும். பழனி தமிழ்நாட்டின் மேல் எல்லையில் இருக்கிறது. இங்குள்ள ஏழை எளிய மக்கள் அங்கு போவது சாத்தியப்படாது.

ஆகையால் வரும்காலத்தில் இது ஓர் பெரிய ஆலயமாக அமைந்து இப்பகுதியில் வாழும் மக்கள் தங்கள் பிரார்த்தனைகளைச் செலுத்தி.

முருகப் பெருமானைத் தரிசனம் செய்ய ஓர் அரிய வாய்ப்பை உண்டுபண்ணி இருக்கிறீர்கள். இது உயர்ந்த புண்ணிய காரியம், இதை ஆரம்பித்த உங்களுக்கெல்லாம். ஆண்டவன் அருள் பாலிப்பான்.

ஆனால் ஒன்று, பழனியிலிருந்து வந்த வேலை மட்டும் வைத்து வழிபடுகிறீர்கள்; திருவிழாவின் போது அந்த வேலையே வாகனத்தில் வைத்து அலங்காரம் செய்து, வீதி உலாவிற்குத் தூக்கிச் செல்கிறீர்கள். அப்போது கோவிலில் விக்கிரகம் இல்லாமல் சும்மா இருக்கிறது. அப்படி இருப்பது சாஸ்திரப்படி குற்றம்

அதனால் கல்லில் முருகப்பெருமானின் சிலையொன்று செதுக்கி எப்போதும் இருக்கும்படி ஸ்தாபிதம் செய்து விடுங்கள். வேலை வீதி உலாவிற்குத் தூக்கிச் சென்று நீங்கள் திருவிழா செய்வது பொருத்தமாக இருக்கும் என்று தம்பிரான் அவர்கள் சொன்னார்கள்.

அங்கே இருந்த பெரியவர்களில், சுப்பையா உடையார் எழுந்து கையைக் கட்டிக் கொண்டு "சாமி தாங்கள் சொல்லுவது நல்ல யோசனைதான். கோவிலில் சிலை அமைத்து சாமி தரிசனம் செய்வது மிகவும் நல்லது. இங்கு இருக்கும் நாங்களெல்லோரும் தங்களின் உழவு குடியானவர்கள்.

இந்த அம்பலவாணனேந்தல் தங்களுக்குச் சொந்த மான கிராமம். இதில் நாங்கள் உழுது சாகுபடி செய்து தங்களுக்குரிய மேல்வாரம் சுவந்தரவகையராக்களைக் கொடுத்துவிட்டு மீதம் கிடைப்பதை வைத்து குடும்ப ஜீவியம் செய்து பிழைத்துக் கொண்டிருக்கிறோம்.

நாங்கள் மலையிலிருந்து கல் கொண்டு வந்து சாஸ்திர கலையுணர்ந்தவர்களைத் தேடி அழைத்து வந்து, முருகக் கடவுளின் உருவச்சிலை செய்து ஸ்தாபிதம் செய்வ தென்பது எங்களால் முடியக் கூடிய காரியம் அல்ல; நாங்கள் என்ன செய்ய முடியும்'' என்று சுப்பையா உடையார் வணக்கத்தோடும் பணிவோடும் சொன்னார்.

அதைக் கேட்ட தம்பிரான் அவர்கள் ''சுப்பையா நீ சொல்லுவது உண்மைதான். நம் பகுதியில் கல்மலையே இல்லை. சாஸ்திர கலையுணர்ந்த ஸ்தபதியார்களும் இப்பகுதியில் இல்லை, இவைகளை சேகரம் செய்து சிலை செதுக்குவது என்பது ஓர் பெரிய காரியம்தான்.

ஆனால், நான் இதற்கு ஒரு வழி சொல்லுகிறேன். அதன்படி செய்யுங்கள். நம் ஆவுடையார் கோவில் ஆத்மனாதசாமி ஆலயத்தில் ஓர் உன்னதமான முருகன் சிலை செய்து முடித்தபடி களஞ்சியத்தில் இருக்கிறது.

அந்தச் சிலை செதுக்கியபடி ஏன் களஞ்சியத்தில் இருக் கிறது என்பதற்குள்ள காரணத்தை விபரமாகச் சொல்லு கிறேன், கேளுங்கள்.

ஆவுடையார் கோவில் ஆத்மனாதசுவாமி ஆலயமும். மடமும் திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்தது என்பது உங்களுக்குத் தெரியும். திருவாவடுதுறை ஆதீனகர்த்தார் ஸ்ரீலஸ்ரீ - சுப்பிரமணியர பண்டார சன்னதி அவர்கள் ஆவுடையார் கோவிலுக்கு வந்து, கோவில் காரியங் களைக் கவனிப்பதற்காக சில மாதங்கள் மடத்தில் தங்கி

இருந்தார்கள். அப்படி அவர்கள் அங்கு தங்கி இருந்த போது, அவர்களுக்கு, ஓர் எண்ணம் தோன்றியதாம்.

அதாவது நம் ஆத்மனாத சுவாமி ஆலயம், பிரசித்தி பெற்ற சிவஸ்தலம் இவ்வட்டாரத்தில்;முருகக் கடவுளுக்குப் பெருமையுள்ள தனி ஆலயம் இல்லை.

இப்பகுதியில் வாழ்கின்ற மக்கள் முருகப் பெருமானைத் தரிசனம் செய்து அவருக்குப் பிரார்த்தனைகள் செலுத்த வேண்டுமானால் பழனிக்குத்தான் போக வேண்டும். ஆகையால் இதற்கு ஒரு வழியை நாம் வகுக்கவேண்டும் என்ற எண்ணம் சுவாமி அவர்கள் மனதில் தோன்றியதாம்.

சுவாமி அவர்கள் பலவாறு யோசித்து ஒரு முடிவுக்கு வந்து சாஸ்திர கலையை நன்கு பயின்று வல்லுனர்கள் பலரை ஒரு தேதியில் வரவழைத்து,

அவர்களிடம் விபரத்தைச் சொல்லி என் மனதில் இப்படி ஓர் எண்ணம் தோன்றுகிறது. அதனால் இங்கு ஒரு பழனியை உருவாக்க வேண்டும். பழனி ஆலயத்தில் அமைந்திருக்கும் உருவச்சிலையைப் போல, நாமும் சிலை அமைத்து அங்குள்ள அனைத்து சக்திகளும், நாம் அமைக்கும் சிலையில் அமையவேண்டும்; அதற்காக எவ்வளவு பணம் செலவானாலும் செலவாகட்டும். இந்த விபரத்தை, சாஸ்திரத்தை நன்கு உணர்ந்த நீங்களெல்லோரும் கலந்து ஆலோசித்து நாளைய தினம் சொல்லுங்களென்று சன்னிதானம் உத்தரவிட்டார்கள்.

சன்னிதானத்தின் உத்தரவை ஏற்றுக் கொண்டு ஸ்தபதியார்கள் எல்லாம் கோவிலுக்கு வந்து மண்டபத்தில் உட்கார்ந்து ஆலோசிக்கத் தொடங்கினார்கள்.

சன்னிதானம் அவர்களின் மனதில் இப்படி ஓர் எண்ணம் தோன்றி இருக்கிறது. பழனியைப் போல் இங்கு முருகனுக்கு ஓர் ஆலயம் அமைக்கவேண்டும். பழனியிலுள்ள மூல விக்கிரகம் போல் சிலை இருக்கவேண்டும் அதில்

எவ்வித வித்தியாசமும் இருக்கக் கூடாது என்கிறார். அதை நாம் செய்து விடலாம்.

ஆனால் பழனியில் இருக்கும் அனைத்து சக்திகளும் இதில் இருக்கவேண்டுமென்கிறாரே, அதை நாம் எப்படிச் செய்ய முடியும் என்று சிலர் சொன்னார்கள்.

சிலர் முடியாது என்று சொல்ல வேண்டாம். செதுக்கும் சிலையில் அதில் சக்தி இருப்பதற்கு மார்ககம் சொல்லுகிறது. அதை ஆராய்ந்து பார்ப்போம் என்று சாஸ்திர ஏட்டை நன்கு ஆராய்ந்து தொடங்கினார்கள். அவரவர்களும் நீண்டநேரம் ஆராய்ந்து பார்த்து.

அதில் உள்ளபடி மலையில் கல் எடுப்பதில் இருந்து சிலையை வடித்து முடிக்கும் வரை இன்னின்ன நட்சத்திரம் இன்னன்ன கிழமைகளில் அதற்குரிய முறைப்படி வேலை செய்தால், சிலையில் மூர்த்திகரம் அதிகம் உண்டு என்று சாஸ்திரத்தில் இருக்கிறதை ஓலை ஏட்டில் எழுதி முடித்தார்கள்.

பிறகு எல்லோரும் கலந்து பேசினார்கள். ஆறு நட்சத்திரங்கள் தான் கணக்கில் வருகிறது. இதன்படி பார்த்தால், மாதம் ஆறு நாள்தான் வேலை பார்க்கலாம். அதிலும் கிழமை மாறாக இருந்தால் அதிலும் குறையும். எடுத்த நட்சத்திரம் பூராவும் இல்லை இன்ன நட்சத்திரம் இன்ன பாதத்தில்தான் வேலை செய்யவேண்டும். என்றெல்லாம் வருகிறது இதன்படி பார்த்தால் இரண்டு ஸ்தபதிக்கு ஒரு ஆண்டுக்கு மேலாகும் போல் தெரிகிறது. என்றார்கள். அதில் ஒருவர், ஏன் நம் பண்டாரச் சன்னதி நிதியிலும் செல்வாக்கிலும் மன்னர்களைவிட மேல்பட்டவர். அவரே எவ்வளவு பணம் செலவானாலும் சரி, ஆகட்டுமென்று சொல்லிவிட்டார். அதைப் பற்றி நாம் யோசிகக வேண்டாம். அவரென்ன சாதாரண குடிமகனா? அவர் நினைத்தால் இந்த

ஊரையே கருங்கல்லால் கோவிலாக அமைக்கலாம்; அப்படி தகுதி உள்ளவர் என்று பேசி முடித்தார்கள்.

மறுநாள்-சன்னிதானம் ஸ்தபதியர்களை அழைத்து நேற்றைய தினம் நான் சொன்னதைப் பார்த்து முடிவு செய்து விட்டீர்களா என்று கேட்டார்.

ஸ்தபதியார்கள் சாஸ்திரத்தில் உள்ளபடி அதற்குரிய முறையைக் கண்டு பிடித்து எழுதி வந்திருக்கிறோம். இதன்படி சிலையைச் செய்தால், அதிகமான மூர்த்திகரம் உண்டு என்று சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது என்று எழுதிய ஓலையை சனனிதானம் அவர்கள் முன்னால் வைத்தார்கள்.

அந்த ஏட்டை என்று படித்துப் பார்த்து சரி இதன் படியே ஆரம்பித்து சிலையை செய்து முடியுங்களென்று ஸ்பபதியார்களுக்கு அனுமதி கொடுத்தார் சந்நிதானம்.

பிறகு அவர்களிடம் நமது ஆத்மனாதசுவாமி ஆலயத்தின் மதில் சுவருக்கு உள்ளே அதற்கு ஓர் கோவில் அமைக்க இடம் பார்த்து முகூர்த்தம் செய்து அந்த வேலையையும் ஆரம்பிக்க வேண்டும் என்றார்.

ஸ்தபதியார்கள் அந்தக் கோவிலுக்குரிய-படமும் முகூர்த்த தேதியும் எழுதி சன்னிதானம் அவர்களிடம் கொடுத்தார்கள்

சன்னிதானம் அதை பார்த்து, அந்த முகூர்த்த நாளில் அதற்குரிய முறைப்படி மேளதாளம் முழங்க சன்னிதானமும் இருந்து முகூர்த்தம் செய்தார்கள்.

பிறகு சன்னிதானம் ஸ்தபதியார்களை அழைத்து சிலை வடிப்பதற்கு வேண்டிய பணத்தைக் கட்டளைத் தம்பிரானிடம் பெற்று முறைப்படி அவசரமில்லாமல், சிலையைச் செய்து முடியுங்கள் என்று சொல்லி அனுப்பினார்.

தம்பிரானை அழைத்து ஸ்தபதியார்கள் கொடுத்திருக்கும் கணக்குப்படி கோவிலை ஆரம்பிக்கவேண்டிய சாமான்களை தயார் செய்து சுணக்கமில்லாமல் வேலையை பாருங்கள், அதற்குத்தேவையான பணத்தை மடம் கோவில் கஜானாவில் பெற்று செலவு செய்து கணக்கை அப்போதைக்கப்போது அனுப்புங்கள் என்று சொல்லி சன்னிதானம் திருவாவடுதுறை சென்றார்,

சன்னிதானத்தின் உத்தரவைத் தம்பிரான் சிரமேற் கொண்டு கோவில் நிர்மாணிக்கும் வேலையில் ஈடுபட்டார். அதற்குத் தேவையான செங்கல் சுண்ணாம்பு போன்ற சகல சாமான்களையும் தயார் செய்து வேண்டிய ஆட்களையும் அழைத்துக் கோவில் வேலையை ஆரம்பித்தார், வேலை நடந்து கொண்டு இருந்தது. ஸ்தபதியார்களும் சிலை வடிக்கும் வேலையை முறைப்படி செய்தார்கள்.

சன்னிதானம் அவர்கள் அடிக்கடி தபால் மூலமும், ஆட்கள் மூலமும்வேலையைத் துரிதப்படுத்திக் கொண்டிருந்தார்.

ஸ்தபதியார்கள் சிலை வடிக்கும் வேலையை எந்தெந்தக் காலங்களில் (அதாவது நட்சத்திரத்தில்) எப்படி வேலை பார்க்க வேண்டுமென்று முடிவு செய்தார்களோ அதன்படி வேலையைப் பார்த்து ஓராண்டில் சிலையின் வேலை பூராவையும் முடித்து ஜலவாசத்தில் வைத்தார்கள்.

கோவில் வேலையும் முக்கால் பங்கு வேலை முடிந்து விட்டது.

பாக்கி வேலைகளும் மிகத் துரிதமாக நடந்து கொண்டிருந்தன.

இப்படி இருக்கும்போது ஒருநாள் திருவாவடுதுறை ஆதீனகர்த்தர் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய பண்டார சன்னிதானம் அவர்கள் இரவு அயர்ந்து நித்திரை செய்யும் போது, ஆவுடையார் கோவில் ஆத்மநாதசுவாமி

ஜோதி வடிவில் அவர் கனவில் தோன்றி நீ ஆவுடையார் கோவிலில் என்னுடைய ஆலயத்திற்குள்ளே

முருகனுக்கு ஓர் ஆலயம் அமைத்து முருகனைப் பெருமையாக கொண்டாட விரும்பி அதற்குரிய வேலை களைச் செய்து வருகிறாய்.

ஆவுடையார் கோவிலில் உள்ள சகல வைபவங்களை யும் பெருமைகளையும் என்னுடைய பக்தன் மாணிக்க வாசகத்துக்குக் கொடுத்து விட்டேன். ஆனதால் அங்கு வேருயாருக்கும் பெருமை கிடையாது. முருகனை அங்கு ஸ்தாபிதம் செய்யும் வேலையை நிறுத்திவிடு என்று சொல்லி மறைந்தாராம்.

ஆத்மனாதசுவாமி தன் கனவில் சொல்லி மறைந்த உடன் சன்னிதானம் அவர்கள் விழித்து எழுந்து ஆத்மனாதர் இப்படிச் சொல்லி இருக்கிறாரே என்று பல வாறு யோசித்து, நாம் எடுத்த முயற்சிக்கு மாறாக இப்படி வந்து சொல்லி விட்டாரே என்று சிந்திந்தவாறு பிறகு தூக்கமில்லாமல் பகவானையே தோத்திரம் செய்து கொண்டிருந்தார்.

விடிந்தவுடன் எழுந்து தனது காலைக்கடனை முடித்துக் கொண்டு ஆசனத்தில் அமர்ந்து கஜானா தலைவர் சம்புருதியை அழைத்து விபரத்தைச் சொன்னார்.

சம்புருதியும் வயது முதிர்ந்தவர். அவரும் நீண்ட நேரம் யோசித்துவிட்டு, பகவானே உத்தரவிடும்போது நாம் அதைப் பற்றிக் கவலைப்படுவது வேண்டாம். எல்லாம் அந்த ஆத்மனாதனின் அருள்படியே நடக்கட்டும்'' என்று சம்புருதி ஆறுதல் கூறினார்.

ஆமாம் சம்புருதி, நான் ஆவுடையார் கோவில் போயி ருந்த போது இந்த எண்ணம் தோன்றியது. நானும் சடுதியில் இந்த முடிவுக்கு வரவில்லை; பல நாள் யோசித் தேன்; இந்த எண்ணம் என்னை சதா துன்புறுத்தியது.

பிறகுதான் முடிவுக்கு வந்து வேலையை ஆரம்பித்தோம். ஆரம்பித்தும் ஒராண்டிற்கு மேலாகி விட்டது. இப்போது சொல்லும்!

அந்த ஆத்மனாதர் ஏன் இதை ஆரம்பத்தில் சொல்லி இருக்கக் கூடாதா என்பதை நினைத்துத்தான் வருந்து கிறேன் என்றாராம்.

சம்புருதி, "சாமி! இதில் ஏதோ மர்மம் இருக்கிறது. ஆண்டவனின் திருவிளையாடலை நம்மால் கண்டறிய முடியாது. அவன் எதற்காக இதைச் செய்திருக்கிறான் என்பது அவனுக்குத்தான் தெரியும். நீங்கள் கவலைப்பட வேண்டாம். அவன் ஆணைப்படிதான் நாம் நடக்க வேண்டும். அடுத்து ஆகவேண்டியதைச் செய்யுங்கள்" என்றார் சம்புருதி மீனாட்சிசுந்தரம்.

சன்னிதானமும் மனம் தெளிவடைந்து சிலை வடித்த ஸ்தபதியார்களை அழைத்து, அமரச் சொல்லி, ஆவுடையார் கோவிலிலே ஓர் முருகன் ஸ்தலத்தை ஏற்படுத்தவேண்டும். அதுவும், பழனியைப் போல சக்தி வாய்ந்த ஸ்தலமாக விளங்கவேண்டும். அதற்கு என்ன முறைகள் உண்டோ அதன்படி செய்யுங்களென்றேன். நீங்களும் சாஸ்திரத்தை நன்கு ஆராய்ந்து சாஸ்திரத்தில் சொல்லியபடி சிலை செய்து முடித்து விட்டீர்கள் கோவில் வேலையும் முடியும் தருவாயிலிருக்கிறது.

இப்படி இருக்க சில தினங்களுக்கு முன்னால் ஆத்மனாதசுவாமி என்னுடைய கனவில் தோன்றி, அப்பா நீ, என்னுடைய ஆலயத்தில் முருகனுக்குத் தனி ஆலயம் அமைத்து முருகனை ஸ்தாபிதம் செய்து பழனியைப் போல் விமரிசையாய் கொண்டாட ஏற்பாடுகள் செய்கிறாய்.

ஆவுடையார் கோவிலில் உள்ள சகல பெருமைகளையும் என்னுடைய பக்தன் மாணிக்கவாசகத்திற்குக் கொடுத்து

விட்டேன். அங்கு வேறு யாருக்கும் இடமில்லை! ஆகையால் அந்த வேலையை நிறுத்தி விடு என்று சொல்லி மறைந்து விட்டார்.

இனி நாம் என்ன செய்ய வேண்டுமென்பதை நீங்கள் யோசனை செய்து முடிவு சொல்லுங்கள் என்று சன்னி தானம் அவர்கள் சொன்னார்.

அவைகளையெல்லாம் கேட்ட ஸ்தபதியார்கள், நன்கு கலந்து யோசித்து, பகவானுடைய கட்டளையை மாற்றி நாம் எதுவும் செய்யக் கூடாது. ஆத்மனாதரே. அங்கு சகலத்தையும் பக்தருக்குச் கொடுத்து விட்டதாகச் சொல்லி இருக்கிறார்.

அவர் விருப்பப்படியே பக்தர் மாணிக்கவாசகரின் சிலை ஒன்றைக் கல்லில் வடித்துப் புதிதாகக் கட்டப்படும் கோவிலில் ஸ்தாபிதம் செய்து குடமுழுக்குச் செய்வதுதான் சிறந்தது என்று சொன்னார்கள்.

வேலை முடிந்திருக்கும்; முருகன் சிலையை நம்முடைய நெல்களஞ்சியத்தில் வைத்து விடுவோம். தங்களுடைய நல்லெண்ணமும் பெரும் முயற்சியும் வீண் போகாது. அந்தச் சிலை ஓர் ஆலயத்தில் அமர்ந்து பிரசித்தி பெற்று விளங்கும். அந்த அளவுக்கு நாங்கள் சாஸ்திரம் ஆராய்ச்சி செய்து முறைப்படி அதைச் செய்திருக்கிறோம். ஆகை யால் தாங்கள் ஆயாசப்பட வேண்டாமென்று ஸ்தபதி யார்கள் ஆறுதல் கூறினார்கள்.

அதைக் கேட்ட சன்னிதானம் மன அமைதி அடைந்து 'நீங்கள் சொல்லுவதும் சரிதான். கோவிலைக் கட்டி சும்மா வைக்கக் கூடாது; ஆகையால் மாணிக்கவாசகரின் சிலை ஒன்றைக் கல்லில் வடியுங்கள்; கோவில் வேலை முடிந்த உடன் அதை ஸ்தாபிதம் செய்து கும்பாபி ஷேகம் செய்வோம்' என்று சொன்னார்.

அதன்படி ஸ்தபதியார்கள் மாணிக்கவாசகரின் சிலை ஒன்றைச் செய்து முடித்தார்கள். கோவில் வேலையும் முடிந்து அங்கே மாணிக்கவாசகர் சிலையை ஸ்தாபிதம் செய்து குடமுழுக்கு நிறைவேறியது. அந்தக் கோவில் தான், குதிரைச்சாமி மண்டபத்திற்கு மேற்கில் மேல்பூச்சு இல்லாமல் சிறு செங்கல் கற்களைத் தேய்த்து இலேசாக அறவைச் சாந்தில் எங்கேயும் இல்லாத முறையில் கட்டி இருக்கும். புது மாணிக்கவாசகர் கோவில் - மாணிக்கவாசகர் ஒருவர்தான்: அதில் புது மாணிக்கவாசகர் என்றும் பழைய மாணிக்கவாசகர் என்றும் இருவர் இல்லை. இந்த வரலாறு நாட்டில் யாருக்கும் தெரியாது.

எங்கள் பண்டார சன்னதி அவர்கள் பெரும் முயற்சி யில் செய்த அந்த விக்கிரகம் நமது களஞ்சியத்தில் இருக்கிறது.

அதை நான் உங்களுக்குத் தருகிறேன். அதை இங்கு ஸ்தாபிதம் செய்து தரிசனம் செய்யுங்கள். விழாக் காலத்தில் வேலை அலங்காரம் செய்து வீதி உலா செய்ய ஏதுவாக இருக்குமென்று திரு காசினாத தம்பிரான் அவர்கள் சொல்லி முடித்தார்கள்.

சொற்பொழிவு போல் நீண்ட நேரம் தம்பிரான் அவர்கள், சொல்லியதை எல்லாம் அமைதியாகவும் கவன மாகவும் கேட்டுக் கொண்டிருந்த ஊர்ப் பெரியவர்களில். சுப்பையா உடையார் எழுந்து இடையில் வேட்டியைக் கட்டிக் கொண்டு.

சாமியின் பக்கத்தில் போய் வாயில் கை வைத்துக் கொண்டு, 'ஓர் விபரம் கேட்க நினைக்கிறேன்' என்றார். சுப்பையா நீயோ வயது முதிர்ந்தவன். நீ கேட்க நினைப் பதைக் கேள் என்றார்;

சாமி சன்னிதானம் ஆவுடையார் கோவிலுக்கு வந்து தங்கி இருந்தபோது அங்கே முருகப் பெருமானுக்கு ஓர் ஆலயம் அமைக்கவேண்டும்.

அதுவும் பழனியைப் போல் பிரசித்தி பெற்ற ஆலயமாக இருக்கவேண்டுமென்று எண்ணியதாகவும் அதற்குள்ள முறைப்படி வேலைகளை ஆரம்பித்து, சிலையின் வேலை முடிந்து கோவிலின் வேலையும் முடியும் தறுவாயில் ஓராண்டுக்குப் பிறகு ஆத்மனாத சுவாமி அங்கு சகலத்தையும், மாணிக்கத்திற்குக் கொடுத்துவிட்டேன் என்று சொன்னதாகச் சொன்னீர்கள்.

ஓராண்டு கழித்து வேலை முடியும்போது சொன்னவர் அதை ஆரம்பத்தில் ஆதீனம் மனதில் எண்ணியபோதே சொல்லி இருக்கலாமே. ஏன் காலம் கடந்து ஆத்மனாத சுவாமி சொன்னார் என்பதைத்தான் தங்களிடம் கேட்க ஆசைப்பட்டேன் என்று சுப்பையா உடையார் சொன்னார்.

சாமி அவர்கள்-சுப்பையா, நீ கேட்கும் இதே கேள்வியை இதற்கு முன்னால்—நான் என் மனதில் பல தடவை கேட்டுக் கொண்டதுண்டு வேலைகள் முடிவடையும் போது, சன்னிதானத்திடம் போய் சொன்ன ஆத்மனாதர்—ஆரம்பத்தில் சொல்லி இருந்தாலென்ன?

மனிதன்தான் வெளியூருக்குப் போகிறான், காரிய நிமித்தம். சில காலம் அங்கே தங்கிவிடுகிறான். அப்போது ஊரில் சில காரியங்கள் நடந்து விடுகின்றன. தான் வந்த பிறகு அவைகளைத் திருத்தம் செய்கிறான்.

ஆத்மனாதசுவாமி வெளியூருக்குப் போயிருந்தாரா, அல்லது அவருக்குத் தெரியாமல் இந்தக் காரியத்தைச் செய்தார்களா. பிறகு ஒருவர் சொல்லித் தெரிந்த பின் போய் நிறுத்தினாரா; பெரும் விந்தையாக இருக்கிறதே.

எல்லாம்வல்ல இறைவன் ஆத்மனாதர்இப்படிச்செய்திருக்கிறாரென்றால் இதற்கு விடை நம்மால் எப்படிக் காண முடியும். எதற்கோ இந்தத் திருவிளையாடல் எல்லாம்? அவன் சித்தப்படி நடக்கட்டும் என்று முடிவு செய்தேன்.

அதற்குரிய (விடை) காரணம் இப்போது தெளிவாகப் புரிந்து விட்டது.

சுப்பையா—பழனி மலைமீது அமர்ந்திருந்த முருகக் கடவுள்—பின்னொரு சமயம் நாம் அம்பலவாணனேந் தலுக்கு எழுந்தருளப் போகிறோம். அங்குள்ளவர்களால் சாஸ்திர நிபுணர்களைக் கொண்டுவந்து முறைப்படி நம்முடைய உருவச் சிலையை அமைக்க முடியாது,

அதைச் செய்யக் கூடிய ஆற்றலும் செல்வமும் உள்ள ஒருவனிடம் அதைச் செய்யும் எண்ணத்தை ஏற்படுத்தி, செய்யச் சொல்லி இருக்கிறார் முருகப் பெருமான். செய்து முடிந்தவுடன் அது போய் அமரவேண்டிய இடம் வேறு என்று ஆத்மனாதசுவாமி அதை இங்கு ஸ்தாபிதம் செய்யாதே என்றால் ஆர்வத்தோடு செய்தவன் மனம் புண்படும் என்று எல்லாவற்றையும் மாணிக்கவாசகத் திற்குக் கொடுத்து விட்டேன். அதனால் இங்கு அதை ஸ்தாபிதம் செய்யாதே என்று சன்னிதானத்திடம் சொல்வி இருக்கிறார் என்ற விபரம் இப்போது நமக் கெல்லாம் தெளிவாகப் புரிந்துவிட்டது.

ஆகவே இறைவன் எப்போதும் அவனுடைய வேலையை நிறுத்தாமல் செய்கிறான் என்பது நமக்குப் புரிகிறது. ஏனென்றால் முன்னால் நாயன்மார்கள் 63 பேர் உறுதியோடு இறைவனை வணங்கித் தொண்டு செய்து அவருடைய சோதனைகளையெல்லாம் தாண்டி இறைவனுடைய தரிசனம் கிடைத்து, இறைவனடி சேர்ந் தார்களென்று புராணங்கள் கூறுகின்றன. நம் மாணிக்க வாசகரும் அப்படித்தான்.

இந்தக் கலியுகத்தில் நம் அம்பலவாணனேந்தலில் பிறந்த ஓர் ஏழை அருணாசல உடையாருக்குக் கருணை காட்டிப் பழனியில் இருந்தவர்-நீ இருக்குமிடத்திற்கு நான் வந்து விடுகிறேன் என்று இங்கு வந்தான், பக்தன் அருணாசலத்திற்காக இங்கு வந்திருக்கிறேன், என்பதை இங்குள்ள மக்கள் உணர 22 ஆண்டுகள் பச்சைத் தண்ணீரில் விளக்கெரித்துக் காண்பித்து இங்கு ஒரு ஆலயம் உருவாகிற்தென்றால் இதுதான் எங்கள்

பண்டார சன்னதி உருவாக்க நினைத்த கீழ்பழனிச் சேத்திரம்.

அவர் ஆர்வத்தோடும் பெரும் முயற்கியோடும் உருவாக்கிய சிலை இங்கே அமைகிறதென்றால் அவர் கண்ட கனவு நிறைவேறி விட்டது; என்பதுதான் பொருள் என்றார் காசினாத தம்பிரான்.

தம்பிரான் அவர்கள் சொல்லியதைக் கேட்ட ஊர் மக்கள் ஆனந்த பரவசமடைந்தார்கள்.

பிறகு—சுப்பையா உடையார் போன்ற ஊர்ப் பெரியவர்கள் எல்லோரும் கோவிலின் பின்புறமுள்ள மருத மரத்தடியில் உட்கார்ந்தார்கள். அப்போது சுப்பையா உடையார் சொன்னார்.

'என்னப்பா! சாமி தம்பிரான் அவர்கள் சொல்லியதை எல்லோரும் கவனமாய்க் கேட்டீர்களா? நான் இந்த வரலாற்றைக் கேட்டவுடன் திடுக்கிட்டுப் போனேன். பகவான் முருகக்கடவுள் நம்மீது எவ்வளவு கருணை காட்டுகிறார் என்பது தெளிவாகப் புரிகிறது.

அண்ணன் அருணாசலத்திற்காகப் பழனியிலிருந்து நமது ஊருக்கு வந்தவர் அவரோடு நின்றுவிடாமல் இப்போது இருக்கும் நம்மீதும் கருணை காட்டுகிறார் என்பதும் தெள்ளத் தெளிவாய்ப் புரிகிறது. சாமி அவர்கள் சொல்லிய கதையைப் பார்த்தால் முருகப் பெருமான் இங்கு வருவதற்காக ஓர் அற்புதத் திருவிளை யாடலையே செய்திருக்கிறார். நீங்களெல்லாம் என்ன நினைக்கிறீர்கள் என்று சுப்பையா உடையார் சொன்னார்.

எல்லோரும்—சாமி சொல்லியது அனைத்தும் உண்மை என்பது நம் எல்லோருக்கும் புரிந்து விட்டது. ஆகையால் சந்தர்ப்பத்தை நழுவவிடாமல் அந்தச் சிலை யைக் கொண்டு வந்து நமது கோவிலில் ஸ்தாபிதம்

செய்துவிட வேண்டும் என்று முத்துச்சாமி உடையார் வலியுறுத்திக் கூறினார்.

அதைக் கேட்ட அனைவரும் ஆனந்த பரவசம் அடைந்து தம்பிரானிடம் ''அந்த சிலையை இங்கு ஸ்தாபிதம் செய்து தாங்கள் திருவாய் மலர்ந்தபடி இது பின்னால் ஓர் பழனி ஆகவேண்டும். அதற்குத் தாங்கள் என்ன கட்டளை இட்டாலும் நாங்கள் அதைச் சிரமேற் கொண்டு செய்யத் தயாராக இருக்கிறோம்'' என்றார்கள்.

அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்த தம்பிரான் அவர்கள், இதை நான் அப்போதே முடிவு செய்து விட்டேன். நீங்கள் உத்திரத் திருவிழாவை முடித்துக் கொண்டு வாருங்கள். நான் சிலையை உங்களுக்குத் தருவதில் எவ்விதத் தடையுமில்லை என்றார்.

நின்றவர்கள் ஒருவரையொருவர் பார்த்து ரகசியமாக ஏதேதோ பேசினார்கள். அதைப் பார்த்த தம்பிரான் அவர்களை, ''என்ன பேசுகிறீர்கள். எதுவும் சொல்ல வேண்டியிருந்தால் சொல்லுங்கள்'' என்றார்.

சுப்பையா உடையார் ''தங்கள் திருவாக்கால் எங்களுக்குச் சிலையைத் தருவதாக வாக்களித்து விட்டீர் கள். எங்களுக்கெல்லாம் பெரிய சந்தோசம்.

ஆனால் திருப்பெருந்துறை இங்கிருந்து ஏழு கல் தொலைவு இருக்கிறது. இங்கு யாரிடமும் ஓர் வண்டிகூட இல்லை. நாங்கள் சிலையை எப்படிக் கொண்டுவருவ தென்றுதான் யோசிக்கிறோம் என்றார்.

சாமி அவர்கள் ''நீங்கள் சொல்லுவது உண்மை. ஏழு கல் தொலைவில் இருக்கும் சிலையை இங்கு கொண்டு வரும் சக்திகூட உங்களிடம் இல்லை என்பது தெரிந்து தான் அந்த முருகன் இப்படி ஏற்பாடு செய்திருக்கிறார். பரவாயில்லை. சிலையைப் பக்குவமாயும் பாதுகாப் பாகவும் கொண்டு வரவேண்டும். இந்தப் பங்குனி முடிந்து சித்திரையில் அங்கு வாருங்கள். குருக்கள் ஐயரிடம் நாள்

பார்ப்போம்; எப்போது இங்கு சிலை ஸ்தாபிதம் செய்ய நாள் இருக்கிறதென்று சொல்லுகிறாரோ, அப்போது நமது மடத்து வண்டியில் கொண்டு வந்து தர நான் ஏற்பாடு செய்கிறேன். அதைப்பற்றி நீங்கள் கவலைப் பட வேண்டாம். நடக்கும் திருவிழா வேலைகளை ஒற்றுமையாக நின்று செய்து முடியுங்கள்'' என்றார்.

சாமியிடம் விடைப் பெற்றுக் கொண்டு எல்லோரும் மதியம் சாப்பாட்டிற்குப் போனார்கள். தம்பிரான் அவர் களும் பால் பழங்களை அருந்திப் பசியமர்த்திக் கொண்டு நித்திரை செய்தார்.

சாப்பிடச் சென்ற ஊர்ப் பெரியவர்களெல்லாம் கோவிலுக்கு வந்து சேர்ந்தார்கள்; சாமியும் நித்திரை தெளிந்து எழுந்தார். பெரியவர்கள் தாங்கள் கொண்டு வந்த பாலைக் காய்ச்சி சாமிக்குக் கொடுக்கும்படி ஐயரிடம் கொடுத்தார்கள். தம்பிரான் அவர்கள் குளத்தில் முகம் கை கால் கழுவி சாமி தரிசனம் செய்து முடித்தார். அய்யர் காய்ச்சிய பாலைத் தம்பிரானிடம் கொண்டு வந்து வைத்தார். பாலை அருந்திய தம்பிரான் அவர்கள், நிறையப் பசும்பால் கொடுத்திருக்கிறீர்கள்; சரி, நான் சொன்னதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள், சித்திரை பிறந்த உடன் ஓர் நல்ல நாளன்று சுப்பையா, முத்துசாமி, ரெங்கசாமி, பொன்னையா, சாமினாதன் நீங்கள் ஐவரும் திருப்பெருந்துறைக்கு வந்து சேருங்கள், அங்கு யோசிப்போம். நான் ஊருக்குப்புறப்படுகிறேன் என்று சொல்லி விடை பெற்றுக் கொண்டு வண்டியில் ஏறிப் புறப்பட்டார் காசினாத தம்பிரான்.

சாமி அவர்களை வழி அனுப்பிட்டுக் கோவிலுக்கு வந்து திருவிழா வேலைகளைப் பார்த்து உத்திரம் வரையி லும் வழக்கப்படி திருவிழாவைக் கொண்டாடி முடித் தார்கள்.

பிறகு சுப்பையாஉடையாரும் முத்துச்சாமியும் கலந்து பேசி சித்திரை பிறக்க இன்னும் ஆறு தினங்கள்தான் இருக்கின்றன. வருஷம் பிறந்தஉடன் நாம் திருப்பெருந் துறைக்குப் போகவேண்டும்.அதற்குரிய நாளை இப்போதே நமது பஞ்சாங்க ஐயரிடம் பார்த்துக் கொள்ளுவோம் என்று இருவரும் ஐயர் வீட்டுக்குப் போய் நடப்பு விபரங்களைச் சொல்லி இதற்கு ஓர் நாள் பாருங்கள் என்றார்கள்.

அந்த விபரங்களைக் கேட்ட ஐயர் சுப்பையா நேற்றைய தினந்தான். புது பஞ்சாங்கம் வாங்கி வந்தேன்—வரும் வருஷம் புதன்கிழமை பிறக்கிறது.

வருஷம் பிறக்கும் நேரம் மிக உயர்வாக இருக்கிறது. இவ்வருஷம்—நாடு பூராவும் நல்ல மழை பெய்யும். தானியங்கள் நன்றாக விளையும்—ஜனங்களுக்கு அதிக நோய்நொடி இல்லாமல் வாழ்வார்கள். ஆலயம், மடம், தர்மசாலை போன்று புண்ணிய காரியங்கள் ஏராளமாக நடக்கும். எல்லோர் மனதிலும் நல்லெண்ணங்கள் தோன்றும்—மீன லக்கனத்தில் வருஷம் பிறந்திருக்கிறது. லக்கனாதிபன் குரு உச்சராசியில் இருக்கிறான்—மேகாதி பதியும் தான்யாதிபதியும் குருவாக வருவதால் எல்லா நன்மைகளும் இவ்வருஷம் உண்டாகும் என்று முடிவு செய்தேன்.

நான் முடிவு செய்தது சரிதான் என்பதற்கு அடையாள மாக—மிகப் பெரிய புண்ணியகாரியத்தைச் செய்ய நீங்கள் நாள் பார்க்க வந்திருக்கிறீர்கள் இந்தக்காரியம் நல்ல முறை யில் முடிந்து மென்மேலும் பெருக வேண்டுமென்று இறைவனைப் பிரார்த்தனை செய்து பஞ்சாங்கத்தைப் பார்ப்போம் என்று சொல்லி—

பஞ்சாங்கத்தை சாமி அறையில் வைத்து சாம்பிராணி போட்டு சூடம் ஏற்றி எல்லோரும் அந்த முருகப் பெருமானை மனதில் தியானித்து சாமி கும்பிடுங்கள் என்று ஐயர் சொல்ல இருவரும் முருகனைத் தியானித்து வீழ்ந்து வணங்கினார்கள்,

பிறகு ஐயர் பஞ்சாங்கத்தைப் பார்க்க ஆரம்பித்தார்—பார்த்து சித்திரை ஆறாம் தேதி திங்கள்கிழமை காலை ஒன்பது நாழிகைக்கு மேல் புறப்படுங்கள். உங்கள் காரியம் மிக நல்ல முறையில் நடக்கும் என்று ஐயர் சொல்லி முடித்தார்—அதைக் கேட்டுக் கொண்டு ஐயரிடம் பயணம் சொல்லி இருவரும் ஊர் வந்தார்கள்.

அன்று இரவே ஊர்ப் பெரியவர்களை அழைத்துக் கோவிலில் கூடி தாங்கள் ஐயரிடம் கேட்டு வந்த விபரத்தைச் சொன்னார்கள். வந்திருந்த அனைவரும் சந்தோசப்பட்டு அப்படியே செய்வோம் என்றார்கள்,

சின்னத்தம்பி உடையார், "அப்பா, நமது கோவில் ஏதோ ஒருவகையில் நம்மை அறியாமல் வளர்ந்து கொண்டு வருகிறது. சிலையைக் கொண்டு வந்து வைத்து விடுவது பெரிதல்ல. இந்தக் கோவிலை வைத்துப் பராமரிக்க நம்மிடம் பொருள் பலம் இல்லை. நம்முடைய ஒற்றுமை யைக் கொண்டு தான் இந்தக் கோவிலை நடத்த வேண்டும்.

நம்மிடையே எவ்வளவு வருத்தம் பிணக்குகள் இருந்தா லும் இந்தக் கோவில் வாசலுக்கு வந்தவுடன் அவைகளை யெல்லாம் மறந்து ஏகோபித்து ஒருவர் சொன்னதை ஒருவர் கேட்டுக் கோபப்படாமல் உழைத்தால்தான் இந்தக் கோவிலை நடத்த முடியும். நம்முடைய கடுமையான உழைப்பின் மூலம் இந்தக் கோவில் வளர வேண்டும்.

நமது தம்பிரான் அவர் வாயால் ஐந்து பேரி பெயரைச் சொல்லி ஆவுடையார் கோவிலுக்கு வரும்படி சொல்லி இருக்கிறார்—அவர் சொன்னபடியே அந்த ஐந்து பேரும் இந்தக் கோவிலுக்கு முக்கிய பொறுப்பாளிகள். கோவில் காரியம் எதுவாக இருந்தாலும் அவர்கள்தான் கவனமாகப் பார்க்கவேண்டும்.

அவர்கள் சொல்லுவதை நாமெல்லாம் தட்டாமல் கேட்போம். இப்போது நாள் பார்த்து வந்தபடி அந்தத் தேதியில் ஆவுடையார் கோவில் போய் அதற்கு ஆக

வேண்டிய வேலைகளைச் சுணக்காமல் பார்க்க வேண்டியது அந்த ஐவர் பொறுப்பு. எல்லோரும் என்னப்பா சொல்லு கிறீர்கள் என்றார் சின்னத்தம்பி உடையார்.

இருந்த அனைவரும் நீங்கள் சொல்லுவதுதான் சரி. அதன்படியே எல்லோரும் நடப்போம்—ஆகவேண்டிய காரியங்கள் அனைத்தையும் அந்த ஐந்து பேரும்தான் பார்க்க வேண்டுமென்று கூடி இருந்த எல்லோரும் சொன்னார்கள். ஐவரும் கோவில் காரியங்களை நாங்கள் பொறுப்புடன் பார்க்கிறோம் என்று ஒப்புக் கொண்டார்கள்.

சித்திரை பிறந்து ஆறாம் தேதியன்று அய்யர் சொல்லியபடி, ஒன்பது நாழிகைக்கு—சுப்பையா உடையார் ரெங்கசாமி உடையார், சாமினாத உடையார் இவர்கள் ஐவரும் கோவிலுக்குப் புறப்பட்டார்கள். அங்கு போய்ச் சேர்ந்து மடத்திற்குப் போய் சாமி அவர்களை வணங்கி விபூதி பெற்று அணிந்து கொண்டார்கள். சாமி அவர்கள் எல்லோரையும் அமரச் சொன்னார்.

பிறகு நான் சொல்லி வந்த காரியமாகத்தானே வந்திருக்கிறீர்கள் என்றார்.

ஆமாம், அதற்காகத்தான் வந்திருக்கிறோம் என்றார்கள்;

சரி நீங்கள் எல்லோரும்—மடத்தில் போய் மதியம் சாப்பாட்டை முடித்து இளைப்பாறுங்கள்—மாலையில் தீட்சதரை அழைத்து அதைப்பற்றிப் பேசுவோம் என்றார் சாமி.

போயிருந்த ஐவரும் மடத்தில் சாப்பாட்டை முடித்து—மடம் முற்றத்தில் இளைப்பாறினார்கள்.

மாலையில் தம்பிரான் அவர்கள் சேவகரை அனுப்பிப் பெரிய தீட்சதரை அழைத்து வரும்படி சொன்னார்—அழைப்பை ஏற்று 84 வயது நிரம்பிய—சுப்பிரமணிய

தீட்சதர், மடத்திற்கு வந்து தம்பிரானுக்கு மரியாதை செலுத்தினார்.

சாமி அவர்கள் தீட்சதரை அமரச் சொல்லி வெளியில் இருந்த ஐவரையும் அழைக்கச் சொன்னார். அவர்களும் வந்து சாமிக்கு மரியாதை செலுத்தினார்கள். எல்லோரையும் அமைதியாக அமரச் சொல்லி தீட்சதரிடம் காசினாத தம்பிரான் அவர்கள்தான், அம்பலவாணனேந்தல் போயிருந்ததையும், அங்கு கோவிலில்தான் கண்ட காட்சிகளையும் ஊர்ப் பெரியவர்கள் கோவிலைப்பற்றிச் சொல்லிய வரலாற்றையும் கேட்டு—தான் எல்லையில்லா மகிழ்ச்சி அடைந்து அங்கு தற்போது உள்ள முருகக் கடவுளாகிய வேலைச் திருவிழாவின் போது அலங்காரம் செய்து வீதி உலாவிற்கு வெளியே தூக்கிச் செல்கிறார்கள், அப்போது கோவில் சும்மா இருக்கிறது;

அப்படி இருக்கக் கூடாது என்பதற்காகத்தான் சொல்லி வந்த விபரங்கள் அனைத்தையும் விளக்கமாகவும், தெளிவாகவும் தீட்சதரிடம் சாமி சொன்னார்.

சாமி சொன்னது பூராவையும் கேட்டுக் கொண்டிருந்த சுப்பிரமணிய தீட்சதர் பெரும் மகிழ்ச்சி அடைந்தவராய் ''சாமி! தாங்கள் சொன்னதை எல்லாம் என் இரு செவிகளாலும் கேட்டு என் மனம் பூரிப்படைகிறது. எனக்கு வயது. 84 பூர்த்தியாகிறது. என்னுடைய பள்ளிப் படிப்பை முடித்தது முதல் இன்று வரை இறைவனுக்குதான் தொண்டு செய்கிறேன்.

பல பெரிய க்ஷேத்திரங்களுக்கும் போய் இறைவனை தரிசனம் செய்து வந்திருக்கிறேன்: ஆனால் இப்படியொரு நிகழ்ச்சியை இன்றுதான் தாங்கள் திருவாக்கால் சொல்லக் கேட்டிருக்கிறேன்.

அதுவும் நமது மடத்தைச் சேர்ந்த ஏழுகல் தொலைவில் உள்ள அம்பலவாணனேந்தலில் ஊரின் பெயரைக் கேட்கும் போது ஆனந்தமாக இருக்கிறது. அந்தத் தில்லைக் கூத்தனாகிய அம்பலவாணன் தன் பெயரால் அந்த ஊரை

அமைத்து, தன்னுடைய மைந்தன் இளைய பெருமாளாகிய முருகனை அங்கு அமரச் செய்து இந்நாட்டு மக்கள் வழிபட அருள் புரிந்திருக்கிறார் என்பதுதான் உண்மை என்று என் மனம் சொல்கிறது.

ஏனென்றால் நமது திருவாவடுதுறை சன்னிதானம் நமது ஆத்மனாத சுவாமி ஆலயத்திற்குள்ளே ஓர் உன்னதமான முருகன் ஆலயத்தை மிகச் சிறப்போடு அமைத்து இதையும் ஓர் பழனி ஆக்க வேண்டுமென்று பெருமுயற்சி செய்து அதற்குரிய எல்லா வேலைகளும் முடியும்வரை சும்மா இருந்து அந்தத் தில்லைக் கூத்தனாகிய அம்பலவாணன். சிலையை ஸ்தாபிதம் செய்து குடமுழுக்கு செய்ய வேண்டிய தருவாயில் இங்கு எல்லாவற்றையும் மாணிக்கத் திற்குக் கொடுத்து விட்டேன்; இங்கு முருகனை ஸ்தாபிதம் செய்ய வேண்டாம் என்று சொன்ன உட்பொருள் இப்போது புரிகிறது.

பெரும் புண்ணியம் செய்திருக்கிறீர்கள். அதனால்தான் இந்த பாக்கியம் உங்களுக்குக் கிடைத்திருக்கிறது. இதில் எவ்விதத் தாமதமும் வேண்டாம் அதற்குரிய நாளைப் பார்த்துத் தங்கள் பொறுப்பிலே சிலையை அங்கு கொண்டு போய் நாம் எல்லோருமாக இருந்து ஸ்தாபிதம் செய்து முடிப்போம்.

ஆகையால் இப்போது இரவு நேரமாகிவிட்டது; காலை யில் எல்லோருமாக இருந்து அதற்குரிய ஓர் நல்ல நாளை பார்த்து முடிவு செய்வோம் என்று தீட்சதர் சொல்லி முடித்தார்.

அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்த தம்பிரான் அவர்கள் தீட்சதர் சொல்லுவது சரிதான்; இரவு நேரத்தில் பஞ்சாங்கத்தை எடுத்து நாள் பார்க்க வேண்டாம். காலை நேரத்தில் பார்ப்பதுதான் நல்லது. நீங்கள் ஐவரும் மடத்தில் சாப்பிட்டு இங்கே வந்து படுத்திருங்கள் என்றார். தீட்சதருக்கும் விடை கொடுத்தனுப்பிவிட்டு சாமி அவர்கள்

தன்னுடைய நியம நிஷ்டைகளை முடிக்கப் புறப் பட்டார்.

காலையில் எல்லோரும் அவரவர்கள் காலைக் கடன் களை முடித்து மடத்திற்கு வந்தார்கள். பெரிய தீட்சதரும் வந்தார். தம்பிரான் அவர்களும் வந்து தன் இருக்கையில் அமர்ந்து தீட்சதரைப் பார்த்து நாள் பார்க்க வேண்டியது தானே என்றார்.

சோதிடத்தில் ஆற்றல்மிக்க கணபதி குருக்களை அழைத்து வந்து நாள் பார்க்கச் செய்தனர்.

சரி; நேரம் வந்துவிட்டது அதற்குரிய நாளைப் பார்ப் போம் என்று சொல்லிப் பஞ்சாங்கத்தை நீண்ட நேரம் ஆராய்ச்சி செய்தார். எல்லோரும் அமைதியாக இருந் தார்கள். பிறகு குருக்கள் அவர்கள் சொன்னார்-வரும் வைகாசி மாதம் 26-ஆம் தேதி திங்கட்கிழமை அன்று ஓர் உயர்வான நாள் இருக்கிறது. கிரகங்கள் நல்ல இடத்தில் பலம் பெற்று இருக்கின்றன. அதைத் தாண்டினாவ் மாசி 19-ம் தேதி ஓர் நாள் இருக்கிறது.

இடையிலுள்ள நாட்களில் கிரக அமைப்பு சரியாக இல்லை என்றார் குருக்கள்.

சாமி அவர்கள் இதில் எங்கள் அபிப்ராயம் என்பது ஒன்றுமில்லை. அந்த முகூர்த்த நேரம் அந்த கிராமத்தில் உள்ள மக்கள் அதிக நோய் நொடி இல்லாமல் வாழவும் கோவில் மேலும் விருத்தியடையவும்-உள்ள நாளும் கிரக அமைப்பும்தான் முக்கியம்; அதற்குரிய கிரக அமைப்போடு உள்ள நாளைப் பார்த்துச் சொல்ல வேண்டியது உங்கள் பொறுப்பு அதில் மக்கள் சுபீட்சம் மிக முக்கியம்.

அப்படி உள்ள நாளில் அதைச் செய்து முடிப்பதுதான் எங்கள் கடமை. ஆகையால் என்னை அபிப்பிராயம் கேட்க வேண்டாம். தங்களுடைய முழுத் திறமையையும், அனு பவத்தையும் இதில் செலுத்த வேண்டும். அந்த கிராமத்தில்

வாழும் மக்களும் கோவிலும் அமோகமாக இருக்க வேண்டு மென்பதுதான் எங்கள் விருப்பம் என்றார் சாமி.

தம்பிரான் அவர்கள் சொல்லியதைக் கேட்ட குருக்கள் அப்படியானால் வைகாசி 26-ம் தேதி முகூர்த்தம்தான் மிக நல்ல முறையில் அமைகிறது. காலை ஏழரை நாழிகைக்கு மேல் பதினொன்றேகால் நாழிகைக்குள் கடக லக்கினத்தில் செய்தால்—லக்கனாதிபதி லக்கினத்தில் ஆட்சி பெற்று நிற்கிறார். 2க்குடைய தனாதிபதி சூரியன் 11ல் லாப ஸ்தானத்தில் வலு பெற்று இருக்கிறார். குரு ஒன்பதா மிடம் தன்னுடைய சொந்த வீட்டில் ஆட்சி பெற்று லக்கினத்தைப் பார்க்கிறார். செவ்வாய் ஏழில் உச்சம் பெற்று லக்கினத்தைப் பார்க்கிறார்: எந்த கிரகமும், வக்கிரமோ, அஸ்தமோ இல்லை.

இது மிகவும் உயர்ந்த கிரக அமைப்பு உள்ள நாள். இப்படி அமைவது கடினம். இந்த நல்ல நேரத்தில் விக்கிர கத்தை ஸ்தாபித்து அபிஷேக ஆராதனை செய்து தரிசனம் செய்தால் எல்லா நலன்களும் உண்டாகும்.

ஊர் மக்கள் நலமுடன் வாழ்ந்து முன்னேற்றமடை வார்கள்—இப்போது கூரைக் கட்டிடத்தில் இருக்கும் இந்த கோவில் நாளுக்கு நாள் வளர்ந்து பின்னால் இது ஓர் கற்கோவிலாக அமைந்து மக்கள் அனைவரும் அம்பலவாண னேந்தலுக்குப் போய் அந்த முருகப் பெருமானை தரிசனம் செய்தால் நம்முடைய நோய்கள், சிரமங்களெல்லாம் விலகி சவுரியம் கிடைக்குமென்று மக்கள் திரளாக வந்து தரிசனம் செய்யும் ஓர் புனித க்ஷேத்திரமாக விளங்கும் என்று 86 வயது நிரம்பிய கணபதி குருக்கள் சொன்னார்.

குருக்கள் சொல்லியதை எல்லாம் அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்த தம்பிரான் அவர்கள் 'ஐயா பெரிய தீட்சதரே! குருக்கள் அவர்கள் சொல்லியதை எல்லாம் கேட்டேன். இதில் தங்களுக்கு எப்படித் தோன்று கிறது' என்றார்.

சுப்பிரமணிய தீட்சதர் 'சாமி இதில் எனக்கு எவ்வித ஐயப்பாடுமில்லை. இப்படியொரு நாள் அமைவது பெரிய அபூர்வம்; வளர்பிறையிலும் லக்கனாதிபன் லக்கனத்தில் ஆட்சியாகவும் இரண்டுக்குடையவன் பதினொன்றிலும் ஐந்துக்குடையவன் ஏழில் உச்சம் பெற்று லக்கனத்தைப் பார்க்கவும் — ஒன்பதுக்குடையவன் ஒன்பதில் ஆட்சி பெற்று லக்கினத்தைப் பார்ப்பதும் பதினொன்றுக் குரியவன் தர்ம கர்மாதிபதிகள் லக்கனத்தைப் பார்ப்பதும் பெரிய விசேஷம். தாங்கள் குறிப்பிட்டீர்கள்; அங்கு வாழும் மக்களுடைய சுபிட்சம் முக்கியம் என்று அங்கு வாழ்பவர்கள் எல்லோரும் விவசாயிகள்—பூமிகாரகனாகிய செவ்வாய் ஏழில் உச்சம் பெற்று லக்கனத்தைப் பார்க்கிறார். அது பூமியில் நல்ல விளைச்சல் ஏற்பட்டு அங்குள்ள குடிகள் சுபிட்சமாக இருப்பார்கள் என்பதற்கும் லக்கனத்தைப் பார்ப்பதால் அந்த லக்கனத்தில் செய்யும் காரியம் சுபிட்ச மாக இருக்கும்.

ஆகையால் இதில் எவ்வித ஐயப்பாடும் வேண்டாம். இதே முகூர்த்தத்தில் செய்து விடுவோம் என்று சுப்பிர மணிய தீட்சதர் சொன்னார்.

வைகாசி 26-ந்தேதி சொல்லி இருக்கிறார்கள் 15 தேதிக்கு மேல் நீங்கள் ஐவரும் வாருங்கள். அதற்கு வேண்டிய சாமான்கள், மற்ற விபரங்களுக்கெல்லாம் சிட்டை போட்டு அதற்குள்ளவைகளை சேமித்து அந்த தேதியில் முடிப்போம் என்று சாமி அவர்கள் சொன்னார்.

சுப்பையா உடையார் எழுந்து "சாமி அதன்படி வருகிறோம். ஆனால் இந்தக் காரியத்தைச் செய்து முடிக்க எவ்வளவு பணம் செலவாகும் என்பதைத் தாங்கள் சொன் னால் அந்தப் பணத்தை இப்போதிருந்தே நாங்கள் சேமிக்க ஏதுவாக இருக்கும் என்றார்.

சுப்பையா சொல்லுவதும் சரிதான்; அங்கிருப்பவர்கள் எல்லாம் உழவு குடியானவர்கள்; அதிகம் பணம் சேர்ப்பது அவர்களால் முடியாத காரியம். சுருக்கமான செலவில் அதை முடிக்க வேண்டும். அதற்கு எவ்வளவு செலவு ஆகுமென்பதை குருக்கள் ஐயாவும் தீட்சதரும் கலந்து ஒரு தோராயமான கணக்கைச் சொல்லுங்கள் என்றார் சாமி.

அதைக் கேட்ட குருக்கள் ஐயரும் தீட்சதரும் கலந்து பேசி சுமார் ஐம்பது ரூபாய் இருந்தால் அதற்கு மேல் போகாமல் முடிப்போம் என்றார்கள்.

சாமி, சரி அதன்படியே செய்வோம். அதற்கு வேண்டிய ஏற்பாட்டைச் செய்யுங்கள் என்றார்.

தம்பிரான் அவர்கள் நீங்கள் ஐவரும் மதியம் மடத்தில் சாப்பாட்டை முடித்துக் கொண்டு ஊர் போய் எல்லோரிடமும் விபரத்தைச் சொல்லி ஆகவேண்டிய காரியத்தை சுணக்காமல் பாருங்கள் என்றார். சாமியிடம் விடைபெற்றுக் கொண்டார்கள்.

திருப்பெருந்துறை சென்றிருந்த ஐவரும் மாலை அம்பலவாணனேந்தல் வந்து அன்று இரவு ஊர்ப் பெரியவர்களிடம் திருப்பெருந்துறையில் பேசிய விபரங்களைச் சொன்னார்கள்; அதைக் கேட்ட பெரியவர்கள் அப்படியானால் நாளை ஊரில் அனைவரையும் அழைத்து முடிவு செய்வோம் என்றார்கள்.

மறுநாள் இரவு அனைவரையும் கோவிலுக்கு வரும்படி அழைத்துக் கோவிலில் கூடினார்கள்.

சுப்பையா உடையார் தாங்கள் ஐவரும் திருப்பெருந்துறை போய் தம்பிரான் அவர்களைக் கண்டதும் சாமி அவர்கள் தீட்சதரையும், குருக்கள் ஐயரையும் அழைத்து அங்கு எல்லோரும் கலந்து பேசி முடிவு செய்தவைகளை விபரமாகச் சொன்னார்.

அதைக் கேட்ட அனைவரும் சந்தோசப்பட்டு இனி நாம் என்ன செய்ய வேண்டும்; அதைச் சொல்லுங்கள் அதன்படி செய்வோம் என்றார்கள்.

முதலில் இப்போதைய செலவிற்கு 50 ரூபாய் வேண்டு மென்று சொல்கிறார்கள். அதை நாம் எப்படிச் சேர்ப்பது என்பதை எல்லோரும் கலந்து யோசியுங்கள் என்றார் சுப்பையா உடையார்.

அம்பலம் கருப்புடையார், நாங்கள் என்ன கலந்து யோசிப்பது? நீங்கள் ஐவரும் சொல்லுவதை நாங்கள் கேட்கத் தயாராக இருக்கிறோம். ஆகையால் அதற்குள்ள வழியை நீங்கள் யோசித்துச் சொல்லுங்கள் என்றார்.

சுப்பையா உடையார், நாங்கள் நடையில் வரும்போதே பேசி ஒரு முடிவு செய்தோம். நம் ஊரில் நம் இனத்தவர்கள் 31 குடி இருக்கிறோம். குடி ஒன்றுக்கு இரண்டு ரூபாய் வீதம் வசூல் செய்து இந்தக் காரியத்தைச் செய்வோமென்று அது எல்லோருக்கும் சம்மதந்தானே என்றார்.

இருந்த அனைவரும் நீங்கள் சொன்னபடியே செய் வோம். வசூல் செய்வது அம்பலம் கருப்புடையார் செய்யட்டும்; பாக்கி வேலைகளை நீங்கள் செய்யுங்கள் என்றார்கள்.

வைகாசி 14-ம் தேதி காலையில் ஐவரும் கோவிலுக்கு வந்து சாமி தரிசனம் செய்து புறப்பட்டுத் திருப்பெருந் துறை போய் தம்பிரான் சாமி அவர்களுக்கு வணக்கம் செலுத்தி நின்றார்கள்.

சாமி அவர்கள் எல்லோரையும் ஆசீர்வதித்து அமரச் சொல்லி—கோவில் சம்பந்தமாக என்ன வேலை பார்த்திருக் கிறீர்கள் என்று விசாரித்தார். இங்கே அவர்கள் செய்தி ருக்கும் ஏற்பாடுகளைச் சொன்னார்கள். கேட்டுக் கொண்டு மடத்திற்குப் போய் மதிய சாப்பாட்டை முடித்துக்கொண்டு வாருங்கள்; மாலையில் குருக்களை அழைத்து அதற்கான வேலையைப் பார்ப்போமென்றார்.

மாலையில் கணபதி குருக்களையும் தீட்சதரையும் அழைத்து சாமி அவர்கள், ''நாம் முன்னால் பேசிய காரிய மாக அம்பலவாணனேந்தலில் இருந்து ஐவரும் வந்திருக் கிறார்கள்.

சாஸ்திர ஆகமங்களில் எவ்வித குறைவு மில்லாமல்—விக்கிரகத்தை ஸ்தாபிதம் செய்து கும்பாபிஷேகம் செய்ய —தகடு—மருந்து நீங்கலாகப் பாக்கி சாமான்களைத் தனித் தனியே சிட்டை யோடுங்கள் என்றார்.

சாமி அவர்கள் சொன்னதை கேட்ட தீட்சதரும் குருக்களய்யரும்—முதலில் முகூர்த்த நேரத்தை முடிவு செய்து குறிப்போமென்று,

வைகாசி மீ 26 திங்கள் கிழமை காலை ஏழேமுக்கால் நாழிகைக்கு மேல் பதினொன்றேகால் நாழிகைக்குள் விக்கிரகம் ஸ்தாபிதம் செய்ய உத்தமம்.

ஐந்து தினங்கள் முன்னதாக 22 வியாழக்கிழமை காலை 11¼ நாழிகைக்கு மேல் கடஸ்தாபனம் செய்து யாகசாலை ஆரம்பிக்க உத்தமம் என்று கும்பாபிஷேக முகூர்த்த சிட்டையை எழுதி சாமி கையில் கொடுத்தார்கள்,

பிறகு யாகசாலை. அபிஷேகம் மற்றும் உள்ள சாமான்களைத் தனித்தனியே சிட்டை எழுதி சாமி அவர் களிடம் கொடுத்தார்கள். சிட்டைகளையெல்லாம் நன்கு பரிசீலனை செய்து சுப்பையா உடையாரை அழைத்து அவரிடம் சிட்டைகளைக் கொடுத்து இதில் உள்ள சாமான் களை விட்டுப் போகாமல் தயார் செய்யுங்கள்.

பிறகு கோவிலின் முன்புறம் யாகசாலைக்கு ஒரு கொட்டகையும் இங்கிருந்து வரும் பிராமணர்கள் சமைத்துச் சாப்பிட தனி கொட்டகை ஒன்றும் போட்டு 21தேதி மதியத்திற்குள் சகல வேலைகளையும் முடித்து விடுங்கள்.

21ஆம் தேதி மாலையில்—தகடு அதற்குரிய மருந்து சமையல் பாத்திரம் உள்பட எடுத்துக் கொண்டு நாங்கள் அங்கு வந்து விடுகிறோம் என்று தம்பிரான் சொன்னார்.

இதை எல்லாம் கேட்ட ஐவரும் ஆனந்தமடைந்து தாங்கள் வரும்போது குருக்கள் ஐயாவையும் தீட்சதர் ஐயாவையும் அழைத்து வந்து அந்தக் காரியத்தை சாஸ்திர முறைப்படி செய்து வைக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்.

அதைக் கேட்ட இருவரும் அவசியம் நாங்கள் வந்து அந்தக் காரியத்தை கடைசி வரையிலும் இருந்து முறைப்படி செய்து வைக்கிறோம். அதைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம்.

இது ஆண்டவன் எங்களுக்குக் கொடுத்த சந்தர்ப்பம். இதை நாங்கள் நழுவவிடாமல் பயன்படுத்திக் கொள்வது எங்கள் பொறுப்பு என்று சுப்பிரமணிய தீட்சதர் சொன்னார்.

தம்பிரான் அவர்கள் குருக்களைப் பார்த்து எல்லா காரியங்களுக்கும் நாள் லக்கனம் நிர்ணயம் செய்து விட்டீர்கள் — யாகசாலை கடஸ்தாபனம் ஆரம்பிக்கும் போது ஒருவரை கர்த்தாவாக வைத்துக் கங்கணம் கட்டி அல்லவா ஆரம்பிக்க வேண்டும்.

அதற்கு இந்த ஐவரின் பேர் நாமத்தைப் பார்த்து யாருக்குப் பொருத்தம் அமைகிறதென்பதை பாருங்கள். ஏனென்றால் அந்தக் கோவில் மேலும் வளர்வதற்கு இது ஒரு முக்கியமல்லவா என்றார்.

அதைக் கேட்ட தீட்சதர் தாங்கள் சொல்லுவது உண்மை. இதுதான் மிகவும் முக்கியம். ஆகையால் அதை தாங்களே செய்யலாமென்று நாங்களிருவரும் யோசித்தோம் என்று குருக்கள் சொன்னார்.

அதைக் கேட்ட சாமி அவர்கள் ,அப்படியல்ல அந்தக் கோவில் முழுவதும் அவர்களுக்குச் சொந்தமானது. பழனி மலை மீதிருந்த முருகக் கடவுள் பக்தர் அருணாசல உடையாருக்காக அம்பலவாணனேந்தலுக்கு எழுந்தருளி அங்கு அமர்ந்திருக்கிறாரே தவிர நம் போன்றவர்களுக்காக அல்ல—ஆகையால் பின் வாரீசு பரம்பரையாக அந்தக் குலத்தவர்கள்தான் அந்தக் கோவிலைப் பராமர்த்து மேன்மைக்கு கொண்டுவர வேண்டும்.

எங்கேயும் அந்தந்தக் கோவிலுக்கு முழு உரிமை உள்ளவர்கள்தான்—பாமரனாக இருந்தாலும் கங்கணம் கட்டிக் கொள்ள வேண்டும். இடையில் நம் போன்றவர்கள் அங்கே கங்கணம் கட்டிக் கொள்வது விவேகம் அல்ல—இடையில் உள்ளவர்கள் வேண்டிய உதவியை செய்யலாம். எவ்வளவு உதவியை செய்தாலும் அந்த கோவிலின் உரிமை வராது,

ஆகையால் அவர்கள் பேர் நாமப்படி யாருக்குப் பொருந்துகிறதோ அவர்களைப் பார்த்து சொல்லுங்கள் என்று சாமி சொல்விட்டார்.

அதை கேட்ட ஐயர் ஒவ்வொருவருடைய நாம நட்சத்திரப்படி பார்த்து சாமினாதன் பெயருக்குதான் பொருத்தம் நன்றாக இருக்கிறது என்றார்.

சாமி அவர்கள் அந்த சாமினாதனுக்கு இந்த சாமினாதன்தான் பொருத்தம் என்றால் அதில் ஒன்றும் வியப்பில்லை, அந்தப் பெயரை சிட்டையில் எழுதுங்கள் என்றார்—அப்படியே எழுதி சிட்டையை சாமி அவர்களிடம் ஐயர் கொடுத்தார்.

தம்பிரான் அவர்கள் சாமிதனாத உடையாரை அழைத்து அவர் கையில் கொடுத்து சிட்டைகளை பத்திரமாக வைத்துக் கொள்ளுங்கள் என்றார். சாமினாத உடையார் மேல் வேட்டியை இடையில் கட்டிக் கொண்டு முருகப்பெருமானை மனதில் பிரார்த்தனை செய்து வணக்கத்துடன் சிட்டைகளைப் பெற்றுக் கொண்டார்.

நீங்கள் இரவு மடத்தில் சாப்பிட்டு மடத்தில் படுத்துக் கொள்ளுங்கள். அதிகாலையில் புறப்பட்டு ஊருக்குபோய் சிட்டைபடி சாமான்களை சேகரித்து முடியுங்கள்—நாங்கள் 21ஆம் தேதி மாலையில் எங்கள் பொறுப்பில் உள்ள சாமான் களுடன் அம்பலவாணனேந்தலுக்கு வந்து சேருகிறோம் என்று சொல்லி அவர்களுக்கு விடை கொடுத்து அங்கிருந்து குருக்கள் தீட்சதர் இருவரையும் நீங்களும் போய் போஜன காரியங்களை முடியுங்கள் என்று விடை கொடுத்து சாமி அவர்களும் போஜனத்திற்குப் புறப்பட்டார்.

போயிருந்த ஐவரும் இரவு சாப்பாட்டை முடித்து மடத்தில் தங்கிக் காலையில் அம்பலவாணனேந்தல் வந்து ஊர்ப் பெரியவர்களிடம் விபரங்களை சொல்லிச் சாமான் களைத் தயார் செய்ய அங்கங்கே ஆட்களை அனுப்பி னார்கள்.

கும்பாபிஷேகத்திற்கு வேண்டிய சகல சாமான்களையும் பாக்கி இல்லாமல் சேமித்து முடித்து 20ம் நாள் காலையில் யாகசாலை கொட்டகையும் சமையல் கொட்டகையும் கட்டி முடித்தார்கள் பிறகு கோவிலின் முன்புறம் வரும் பொதுமக்கள். தங்க பந்தல் ஒன்று அமைத்து கூந்தல் மாவிலை தோரணங்கள் கட்டி மிக அழகாக சோடனை செய்து முடித்தார்கள். 26தேதி கும்பாபிஷேகம் நடக்கஇருப் பதை அக்கம் பக்கத்து கிராமங்களுக்கு செய்தி அனுப்பி னார்கள்.

21 தேதி காலையில் எல்லோரும் கோவிலுக்கு வந்து பாக்கியுள்ள வேலைகளையும் பார்த்து மதியச் சாப்பாட் டிற்குப் பிறகு மாலையில் திருபெருந்துறையிலிருந்து வரும் தம்பிரான் சாமி அவர்களையும் மற்றவர்களையும் ஊர் வடக்கு எல்லையில் போய் வரவேற்று அழைத்து வர வேண்டுமென்று அனைவரும் வடக்கு எல்லையில் இருக்கும் கோவில் முன்புள்ள ஐயனார் அரசமர நிழலில் கூடியிருந் தார்கள்.

திருப்பெருந்துறையிலிருந்து காசினாத தம்பிரான் அவர்கள் தங்கள் மடத்து வண்டியில் முருகப்பெருமானின் கற்சிலையையும் மற்றும் சாமான்களையும் ஏற்றிக்கொண்டு கணபதிகுருக்கள், சுப்பிரமணிய தீட்சதர் மேலும் வயது முதிர்ந்த ஐந்து பிராமணர்களையும் அழைத்துக் கொண்டு மாலையில் அம்பலவாணனேந்தல் வந்தார்.

வந்தவர்களை ஊர் கிராம தேவதையாகிய ஐயனார் கோவிலின் முன்பு கிராமத்தார் அனைவரும் எதிர் கொண்டு அவர்களுக்கு வணக்கம் செலுத்தி வரவேற்று முருகன் ஆலயத்திற்கு அழைத்து வந்தார்கள்.

வந்த உடன் குளத்தில் கால்கை சுத்தம் செய்து சாமி தரிசனம் செய்து முன்னால் அமைத்திருந்த பந்தலில் எல்லோரும் அமர்ந்தார்கள்.

கணபதி குருக்களும் சுப்பிரமணிய தீட்சதரும் சிட்டையை வாங்கி சரி பார்த்து தர்ப்பை மாவிலை நீங்கலாக பாக்கி சாமான்கள் சரியாக இருக்க அவை இரண்டும் காலையில் எடுத்துக் கொள்வோம்—பக்கத்தில் இருக்கிறதென்றார் முத்துச்சாமி உடையார். வந்தவர்களுக்கு உணவு தயாரானது. உணவருந்திய உடன் சாமி அவர்கள் எல்லோரும் நித்திரை செய்யுங்கள் அதிகாலையில் எழுந்து வேலையை ஆரம்பிப்போம் என்று சொல்லிதானும் நித்திரை செய்தார்.

அதிகாலையில் எல்லோரும் எழுந்து தங்கள் காலைக் கடன்களை முடித்து கோவிலுக்கு வந்தார்கள்—குருக்கள் ஐயரும் மற்றவர்களும் யாகசாலையில் உள்ள வேலைகளை முடித்து $11\frac{1}{4}$ நாழிகைக்கு சாமினாத உடையாரை—கர்த்தாவாக வைத்து கங்கணம் கட்டி கடஸ்தாபனம் செய்து யாக சாலையை ஆரம்பித்தார்கள்.

காசிநாத தம்பிரான் அவர்கள் அருகில் இருந்து கொண்டு—கணபதிகுருக்கள்—சுப்பிரமணிய தீட்சதர் மற்றவர்களையும் யாகசாலையில் செய்ய வேண்டிய ஓமம் ஜெப

தபங்களை முறைப்படி காலை மாலை தினசரி செய்து 26ம் தேதி காலை $7\frac{1}{2}$ நாழிகைக்கு ஜெபத்தில் இருந்த தகட்டை 1832-ம் ஆண்டு வைகாசி மாதம் 26-ம் தேதி சுவாமியின் பீடத்தில் ஸ்தாபிதம் செய்து அதற்கு மேல் சிலையை அமர்த்தி மருந்து சாத்தினார்கள். அன்று உதயாதியி லிருந்து சுற்று வட்டார மக்கள் கும்மாபிஷேகம் பார்க்க திரளாக வந்து கூடினர்.

தம்பிரான் அவர்கள் அருகில் இருந்து கொண்டு முறைப்படி அந்தந்தக் காரியங்களை நாழிகைப்படி செய்து சரியாக 10 நாழிகைக்கு அபிஷேகம் செய்து ஆராதனை நடத்தி 11 நாழிகைக்கு வெளியில் திரளாகக் கூடியிருந்த மக்களுக்கு விபூதி கொடுத்தார் குருக்கள். பின்னால் தீட்சதர் குங்குமம் வழங்கினார்.

காசிநாத தம்பிரான் அவர்கள் வந்திருந்த எல்லோ ருக்கும் நல்லாசி கூறி அனைவருக்கும் வணக்கம் சொல்லி, "பொதுமக்களே! இப்பகுதியில் வாழும் மக்கள் அனை வருக்கும் இன்று ஓர் பொன்னான நாள்.

பழனியிலே இருந்த முருகப் பெருமான் அருணாசல உடையாருக்காக இங்கு எழுந்தருளி நம்மை எல்லாம் காத்துரட்சிக்கும் பொருட்டு இங்கு அமர்ந்திருக்கிறார்.

சிவபெருமான் - மாணிக்கவாசகருக்காகத் திருப்பெருந் துறையில் எழுந்தருளினார். அங்கே ஒரு பெரிய சிவாலயம் அமைந்திருக்கிறது. நாமெல்லாம் அங்கு சென்று ஆத்மனா தரையும் மாணிக்கவாசகரையும் தரிசித்து ஆத்ம சாந்தி அடைகிறோம்.

முருகப் பெருமான் அருணாசல உடையாருக்காக அம்பலவாணனேந்தலில் எழுந்தருளி இருக்கிறார். அவர் ஆலயத்திற்குக் கும்பாபிஷேகம் நடந்தது, இந்த திருக்குட நீராடலை வந்து தரிசித்து நீங்கள் அனைவரும் கண்குளிர பார்க்க முடியாமைக்கு மிகவும் வருந்துகிறேன்,

இப்போது இருக்கும் இந்த ஆலயம் கூரையாலான கட்டிடம். அதனால் கலசம் வைத்து அதில் குடமுழுக்கு செய்ய வாய்ப்பு இல்லை. குடமுழுக்கு கோவில் கோபுர உச்சியில் செய்வதை மக்கள் வெளியில் பல பகுதியிலும் நின்று பார்த்துத் தரிசிப்பது பழக்கம். ஆயினும் பரவா யில்லை. பகவானை மனதில் நினைத்து தரிசனம் செய்தோம்.

திருப்பெருந்துறை ஆலயத்தைப் போல் இந்த ஆலயமும் கருங்கல்லால் அமைக்கப்பட்டுக் குடமுழுக்கு நிச்சயமாக நடக்கும். இந்நாட்டு மக்கள் அதைக் கண்டு தரிசிப்போம் என்பது என் அசைக்க முடியாத நம்பிக்கை.

அங்கே மாணிக்கவாசகருக்காக நரியை அழகிய குதிரை களாக்கி பாண்டியனுக்கு ஒப்ப நடந்தார் சிவபெருமான்.

இங்கே அருணாசல உடையாருக்காக 22 ஆண்டுகள் பச்சைத் தண்ணீரில் விளக்கை எரித்துக் காண்பித்தார் முருகப்பெருமான்,

அது ஒருநாள் காட்சி உலகுக்கு காட்டியது. இது 22 ஆண்டுகள் நமக்கு காட்டியது. இரண்டையும் ஒப்பிட்டுப் பார்த்தால் அதைவிட இதில் பெருமைகூட இருக்கிறது.

நாமாகக் கோவில் அமைத்து அங்கே ஆண்டவனின் உருவங்களை ஸ்தாபிதம் செய்து வழிபடுகிறோம். அப்படி வழிபடுவது நம்முடைய மனத் திருப்திக்காக மட்டும்தான்.

இப்படி பக்தர்களுக்காக இறைவன் இரங்கி வந்து காட்சி கொடுத்த இடங்களில்தான் மகிமை அடங்கி இருக்கும். அங்கே தரிசனம் செய்தால் நம்முடைய பாபங்கள் விலகி நற்கதி கிடைக்குமென்று நமது இதிகாசங்கள் வலியுறுத்திக் கூறுகின்றன; அதனால்தான் இப்படி உள்ள இடங்களை சேத்திரம் என்கிறார்கள்.

இனிமேல் முருகக் கடவுளைத் தரிசிக்கப் பழனிக்குப் போக வேண்டியதில்லை. அவர் இங்கே வந்து விட்டார்,

நான் இப்போது உங்கள் மத்தியில் இருக்கிறேன். என்னைப் பார்க்க ஒருவர் திருப்பெருந்துறைக்குப் போனால் பார்க்க முடியுமா? என்னுடைய மடம் இருக்கைகள் எல்லாம் அங்கேதான் இருக்கும். ஆனால் நான் இங்கு வந்து விட்டேன். இங்கு வந்தால்தான் என்னைப் பார்க்க முடியும். முருகப் பெருமான் நான் அங்கு வருகிறேன் என்று சொல்லி இங்கு வந்து விட்டார்.

அதனால் இங்கு தரிசனம் செய்தால் பழனியில் தரிசனம் செய்வதற்கு சமம். நாமெல்லாம் பழனி போய்ப் பெருமானைத் தரிசிக்க முடியாது என்பதால் அவரே கருணை உள்ளங்கொண்டு இங்கு எழுந்தருளி இருக்கிறார்.

ஆகையால் வந்திருக்கும் மக்கள் இதை உணர்ந்து அடிக்கடி இந்த ஆலயத்தில் வந்து முருகப் பெருமானைத் தரிசித்து அவருடைய அருளைப் பெற்றுய்யுமாறு உங்களை எல்லாம் கேட்டுக் கொள்கிறேன் என்று காசிநாத தம்பிரான் அறிவுரை வழங்கினார்.

பிற்பகல் 18 நாழிகைக்கு இரண்டாவது அபிஷேக ஆராதனை நடந்தது. ஏராளமான மக்கள் தேங்காய் பழங்களுடன் வந்து, அர்ச்சனை செய்து தரிசனம் செய்தார்கள்.

இரவு வேளை அலங்காரம் செய்து சாமி வீதி உலா வந்தது. காலையில் ஊர் மக்களுக்குக் காசிநாதத் தம்பிரான் காளாஞ்சி பிரசாதம் வழங்கினார்.

45-ஆவது நாள் மண்டலாபிஷேகம் செய்ய வேண்டும். அதுவரை மணிவாசக குருக்களை நீர் இங்கே தங்கி சாமிக்கு செய்ய வேண்டிய அபிஷேக ஆராதனைகளை தினமும் முறைப்படி செய்யுங்கள். 45 ஆவது நாள் நாங்கள் எல்லாரும் வந்திருந்து மண்டலாபிஷேகத்தை முறைப்படி சிறப்பாக செய்து முடிப்போம்.

அதற்கப்பால் பண்டாரம் கணபதி கோவிலுக்குள்ள தொண்டைச் செய்யட்டும் என்று காசிநாத தம்பிரான் சொன்னார்.

மாலையில் காசிநாத தம்பிரான் அவர்களும், கணபதி குருக்கள் சுப்பிரமணிய தீட்சதர் மற்றவர்களும் திருப் பெருந்துறைக்குப் புறப்பட்டார்கள். ஊர்ப் பெரியவர்கள் ஊர் வடக்கு எல்லை வரைக்கும் போய் அவர்களை வழி அனுப்பி அவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு வந்தார்கள்.

45-ஆவது நாள் மண்டலாபிஷேகம் நடக்க ஐந்து தினங்கள் முன்னதாக பொறுப்பில் உள்ள ஐவரும் திருப் பெருந்துறைக்குப் போய் தம்பிரான் சாமி அவர்களுக்கு வணக்கம் செலுத்தினார்கள். அவர் ஆசீர்வதித்து விபூதி கொடுத்து அமரச் சொன்னார்.

மண்டலாபிஷேகம் இன்னும் ஐந்து தினங்கள்தான் இருக்கிறது. அதைச் சொல்ல வந்தோம் என்றார் சுப்பையா உடையார்.

சாமி அவர்கள் குருக்கள் ஐயரையும் தீட்சதரையும் அழைத்து வர சேவகரை அனுப்பினார். இருவரும் வந்து சாமிக்கு மரியாதை செலுத்தினார்கள். ஆசீர்வதித்து அமரச் சொல்லி மண்டலாபிஷேகத்திற்கு வேண்டிய சாமான்களை சிட்டை எழுதி கொடுங்கள் என்றார் சாமி.

அதன்படி குருக்களும் தீட்சதரும் தேவையான சாமான் களை சிட்டை எழுதி சாமி அவர்களிடம் கொடுத்தார்கள். சாமி அவர்கள் சாமிநாத உடையாரை அழைத்து அவர் கையில் கொடுத்தார். அவர் சாமியை வணங்கி சிட்டையை பெற்றுக் கொண்டார்.

44 வது நாள் மாலையில் நாங்கள் மூவரும் அங்கு வந்து விடுகிறோம். நீங்கள் சிட்டைப் படி சாமான்களை வாங்கி தயாராக வையுங்கள். மறுநாள் அதிகாலையில் கடம் ஆரம்

பித்தால்தான் முறைப்படி எல்லா ஜெபங்களும் செய்து அபிஷேகம் செய்ய நேரம் சரியாக இருக்கும். இப்போதே புறப்பட்டு ஊர் போய் ஆகவேண்டிய வேலைகளைப் பாருங்கள் என்று சாமி சொன்னார், சாமியிடம் விடை பெற்றுக் கொண்டு ஊர் வந்தார்கள்.

சிட்டைப் படி சாமான்கள் பூராவையும் தயார் செய்து 44 வது நாள் மார்லையில் வைத்து ஊர் வடக்கு எல்லைக்கு வந்து சாமியையும் மற்றவர்களையும் வரவேற்று அழைத்து போனார்கள். சாமியும் மற்ற இருவரும் குளத்தில் கால்கை சுத்தம் செய்து சாமி தரிசனம் செய்து பந்தலில் அமர்ந் தார்கள்.

அதிகாலையில் எழுந்து அவரவர்கள் காலைக் கடன் களை முடித்து, கடத்தை ஆரம்பித்தார்கள். ஊர் மக்களும் பக்கத்து கிராம மக்களும் ஏராளமாக வந்து கூடினார்கள்.

சாஸ்திர முறைப்படி ஓமம் இடம் இவைகளுக்குரிய ஜெப தபங்களை செய்து முடித்து அபிஷேகம் நடந்தது. பிறகு சுவாமிக்கு உயர்ந்த ஜாதி பூக்களால் அலங்கரித்து சுப்பிரமணிய தீட்சதர் சகஸ்ரநாம அர்ச்சனை செய்து விசேட ஆராதனை நடந்தது.

வந்திருந்த மக்கள் அனைவரும் அபிஷேக அலங்கார ஆராதனைகளைப் பார்த்து ஆனந்தமடைந்து பகவானை பக்தியோடு தரிசனம் செய்தார்கள். வயது முதிர்ந்த குருக்களும் தீட்சதரும் விபூதி குங்குமம் வழங்கினார்கள். பிறகு எல்லோருக்கும் பிரசாதம் சுண்டல் வழங்கினார்கள்.

காசிநாத தம்பிரான் அவர்கள் பொறுப்பேற்று நடத்திய ஐவருக்கும் மாலை அணிவித்து எல்லோருக்கும் நல்லாசி கூறினார்.

முக்கிய பெரியவர்கள் தம்பிரான் அவர்கள் காலில் வீழ்ந்து வணங்கி, இந்தப் பெரிய பேருதவியை எங்களுக்குச் செய்து தாங்களே வந்து முழுப் பொறுப்புடன் இந்த

காரியத்தை செய்து வைத்ததற்கு எங்கள் கிராம மக்கள் அனைவரும் தங்களை மனமார வாழ்த்துகிறோம் என்றார்கள்.

சாமி அவர்கள் உங்கள் வாழ்த்தை மனப்பூர்வமாக ஏற்றுக் கொண்டு இந்த கோவில் மேலும் வளர்ந்து ஓர் கற்கோவிலாக அமைந்து குடமுழுக்கு நடக்க வேண்டும் என்று என் இதயபூர்வமாக இந்த இறைவனைப் பிரார்த்தனை செய்கிறேன் என்று சுவாமியை நோக்கி இருகரத்தையும் தலைக்கு மேல் உயர்த்தி வணங்கினார் காசிநாத தம்பிரான்.

தம்பிரான் அவர்களும் மற்றவர்களும் ஊர் மக்களுக்கு நல்லாசி கூறி மாலையில் திருப்பெருந்துறைக்குப் புறப்பட்டார்கள். பெரியவர்கள் எல்லோரும் ஊர் வடக்கு எல்லை வரை போய் சாமி அவர்களை வழியனுப்பி ஊர் திரும்பினார்கள்.

## 8 உற்சவ மூர்த்தி உற்பத்தியான வரலாறு

1836ம் வருஷம் பங்குனி மாதம் திருவிழா நடந்தது—அங்கே குடியிருந்த நகை வேலை செய்யும் சிவலிங்க ஆசாரி வீட்டிற்கு அவருடைய மூத்த சகோதரியின் மகன் ஷண்முக ஆசாரி விருந்தினராக வந்திருந்தார்.

ஷண்முக ஆசாரி ஒரு பக்திமான். அவர் தினமும்—காலை மாலை கோவிலுக்குப் போய் இறைவன் மேல் பல பாடல் பாடி சாமி தரிசனம் செய்யும் பழக்கமுடையவராம்; அதன்படி இங்கேயும் கோவிலுக்கு வந்து பக்திப் பாடல்கள் பாடி சாமி தரிசனம் செய்வார். இரவு சாமி வீதி உலாவரும் போது முருகன் மேல் பல பாடல்களை மனமுருக சாமி பின்னால் பாடிக் கொண்டு வருவார். நல்ல சாரீர அமைப்புள்ளவர். அவர் பாடலை விரும்பி எல்லோரும் அவரைச் சுற்றி நின்று கையை கட்டிக் கொண்டு கேட்பார்கள்.

அவர் பாடலின் இனிமையை ரசிக்க அக்கம் பக்கத்து கிராமத்தார்களும் நிறைய வருவார்கள். சாமி வீதி உலா வந்து சேர்க்கையான உடன் அவருக்கு விபூதி பிரசாதம் கொடுத்து கௌரவிப்பார்கள்.

விழாக் கடைசி நாள் சுவாமி குளத்தில் தீர்த்தம் கொடுக்கும் போது—பாடத் தெரிந்தவர்கள் முருகன் மேல் சில பாடல்களைப் பாடுவார்கள். அங்கே சூழுமி இருக்கும் மக்கள் எல்லோரும் அரோகரா அரோகரா என்று சொல்லு வது வழக்கம்.

அன்றைய தினம் ஷண்முக ஆசாரி முருகன் பேரில் உள்ள முக்கியமான பாடல்களை நீண்ட நேரம் பாடினார். எல்லோரும் மெய்மறந்து அரோகரா அரோகரா என்று சொன்னார்கள்—அங்கே கூடி இருந்த மக்களெல்லாம்—ஷண்முக ஆசாரி இவ்வளவு பாடல்களையும் எப்படிப் பாராயணம் செய்து வைத்திருந்தார் என்று ஷண்முக ஆசாரியைப் பாராட்டினார்கள்.

அன்று இரவு இடும்பனுக்கு தனி அபிஷேக அலங்காரம் செய்து இடும்பன் பூசை சிறப்பாகக் கொண்டாடினர்.

ஆராதனை முடிந்தவுடன் அர்ச்சகர் கணபதி பண்டாரத்தின்மேல் அருள் வந்து நடப்பு ஆண்டுக்கு மழைபெய்வது, பெரும் நோய் நொடிகள் பற்றி குறி சொல்லுவார்—அதனால் ஊரில் ஆண் பெண் அனைவரும் வந்திருந்தார்கள். சிறப்பாக இடும்பன் பூஜை முடிந்ததும் எல்லோருக்கும் விபூதி குங்குமம் கொடுத்து பிரசாதம் வழங்கினார்கள்.

அப்போது ஷண்முக ஆசாரி எழுந்து கையைக் கட்டிக் கொண்டு ''ஐயா பெரியவர்களே, பிரசாதம் வழங்கி முடிந்த உடன் பெரியவர்களெல்லாம் சற்று இருங்கள். உங்கள் எல்லோரிடமும் நான் ஓர் காரியத்தைப் பற்றிப் பேச ஆசைப்படுகிறேன்'' என்றார்.

அவர் மேல் எல்லோரும் நன் மதிப்பு வைத்திருந்ததால் சரி ஐயா. அமருங்கள் அப்படியே செய்கிறோம் என்றார்கள் பிரசாதம் பெற்றவுடன் பெண்கள் குழந்தைகள் அனைவரும் வீடுகளுக்குச் சென்றனர். ஆண்கள் எல்லோரும் அமைதி யாக இருந்தார்கள். மருதமுத்து உடையார் ஐயா நீங்கள் சொல்ல வந்ததைச் சொல்லுங்கள் என்றார்.

அப்போது ஷண்முக ஆசாரி எழுந்து நின்று "ஐயா பெரியவர்களே! சாஸ்திர முறைப்படி திருவிழாச் செய்து முடித்திருக்கிறீர்கள். மிக சந்தோஷம்.

ஆனால் திருவிழா வீதி உலாவிற்கு வேலை மட்டும் மாலை அணிவித்து அலங்காரம் செய்து வீதி உலா தூக்கி வருகிறீர்கள். அதைவிட ஒரு சிங்காரவேலவர் சிலை வார்ப்பித்து அதனை அலங்காரம் செய்து வீதிஉலாவந்தால் ரொம்ப அழகாகவும் பொருத்தமாகவும் இருக்கும். எல்லோரும் தயவு செய்து அதற்கு ஓர் ஏற்பாடு செய்வுங்கள் என்றார்.

மருதமுத்து உடையார் ஐயா அமருங்கள், நீங்கள் சொல்லுவது உண்மைதான். உங்களுக்காகச்சொல்லவில்லை எங்களுக்கு ஏற்கனவே அந்த ஆசை உண்டு.

ஆனால் நாங்களெல்லாம் கிராமத்தில் வாழும் உழவு குடியானவர்கள். முன்னால் இந்த ஊருக்குள் அன்றாடம் காலை மாலை வணங்க ஓர் பிள்ளையார் கோவில் கூட இல்லாமல் இருந்தோம்—வருஷம் ஒருமுறை கிராம எல்லை யில், இருக்கும் கிராம காவல் தெய்வங்களைக் கும்பிடுவ தோடு இருந்த எங்களுக்கு எங்கள் இதய தெய்வமாகிய முத்தியடைந்த அருணாசல உடையாரின் பக்திக்கும் தொண்டிற்கும் கருணை காட்டி பழனியில் இருந்த முருகப் பெருமான் இந்த வேலை அவர் கையில் கொடுத்து அதன் மூலம் இங்கே எழுந்தருளினார். பக்தர் அருணாசல உடையார் இதை இங்கு ஊன்றி இந்தக் கோவிலை உருவாக் கினார்.

நாங்கள் இதை வணங்கிப் பின்னால் திருவிழாக் கொண்டாடிக் கொண்டிருந்தோம் — எங்கள் கிராம

மிராசுதார் திருப்பெருந்துறைமடம். காசினாத தம்பிரான் அவர்கள் திருவிழா நடக்கும் போது இங்கு வந்திருந்தார்.

நாங்கள் வேலை அலங்காரம் செய்து வீதி உலா செய்வதை பார்த்த அவர்—எங்களை அழைத்து கோவிலில் வேல் மட்டும் தான் இருக்கிறது நீங்கள் அதை அலங்காரம் செய்து வீதி உலாவிற்குத் தூக்கிப் போகிறீர்கள். அப்போது கோவில் சும்மா இருக்கிறது. அப்படி விக்கிரகம் இல்லாமல் கோவில் சும்மா இருக்கக் கூடாது என்று சொல்லி அவர்கள் இந்த மூலவிக்கிரகத்தை எங்களுக்குக் கொடுத்து இங்கு ஸ்தாபிதம் செய்து வைத்தார்கள்.

அவர்கள் அந்த உதவியைச் செய்யாமல் இருந்தால்—இதையும் எங்களால் செய்திருக்க முடியாது—இந்த நிலையில் உள்ள நாங்கள் ஐம்பொன் சேர்த்து சிங்கார வேலவர் செய்வதென்றால்—அதற்குரிய தொழிலாளியைத் தேடிக் கொண்டு வந்து உலோகங்கள் தயார் செய்துசிலைவார்ப்பது சின்ன வேலையல்லவே—அந்த வசதி எங்களிடம் இல்லையே அய்யா என்று மருதமுத்து உடையார் சொன்னார்.

இதை எல்லாம் கவனமாகக் கேட்ட ஷண்முகஆசாரி,

ஐயா பெரியவர்களே—நான் இந்த ஊருக்கு வந்து ஒன்பது நாள் ஆகிறது. நான் எங்கு போனாலும் அங்குள்ள கோவிலுக்குப் போய்க் காலை மாலை சாமி தரிசனம் செய்வது வழக்கம்.

அதன்படி இங்கு வந்த அன்று மாலையில் என் மாமா விடம் கேட்டேன். இந்த ஊரில்கோவில் இருக்கிறதா என்று. அவர்கள் இருக்கிறதப்பா பிரசித்தி பெற்ற முருகன் கோவில் பெரிய குளம் கீழ்க்கரையில் மருதுமரத்தடியில் இருக்கும் கூரைக் கட்டிடம் என்றார்.

உடனே இங்கு வந்து குளத்தில் குளித்து விட்டுக் கோவிலுக்கு வந்து சாமி தரிசனம் செய்து அருகில் அமர்ந்து சிலையைக் கூர்ந்து கவனித்தேன். கோவில் சிறியதாகையால்

சிலையின் அருகாமையில் இருந்து பார்க்கும் வாய்ப்புக் கிடைத்தது.

சிலையின் அமைப்பு சாஸ்திரத்திற்கு எந்த வித்தியாசமும் இல்லாமல் தன்னை நாடிவரும் பக்தர்களுக்கு அருள் வழங்கும் அமைதியான முகபாவனையும் கருணை ததும்பிய கண்கள் அமைப்போடும் அமைந்திருப்பதைப் பார்த்தேன்— இப்படி சிலை அமைவது மிகவும் கடினம்—இதில் பெரும் மகிமை அடங்கி இருக்கிறது என்பதைப் புரிந்து கொண்டு வீட்டிற்குச் சென்று என் மாமாவிடம்—சிலையில் அடங்கி இருக்கும் மகத்துவங்களை விளக்கமாக சொன்னேன்.

நான் சொல்லியதை அமைதியாகக் கேட்ட என் மாமா நீங்கள் சாஸ்திர கலைகளை நன்கு பயின்ற ஸ்தபதி— அதனால் சிலையின் அமைப்பை பார்த்த உடன் சகலத்தையும் புரிந்து கொண்டீர்கள் என்று சொல்லி—இந்தக் கோவிலின் உற்பத்தி முதல் இன்று வரையிலும் உள்ள வரலாற்றைச் சொன்னார்கள். அதைக் கேட்டவுடன் என்னுடைய உடம்பெல்லாம் நடுங்கிவிட்டது. நான் பல புராண இதிகாசங்கள் படித்திருக்கிறேன்,

அவை அப்பர், சுந்தரர், ஞானசம்பந்தர் மாணிக்க வாசகர் போன்று 63 நாயன்மார்கள் இறைத் தொண்டு செய்து இறைவனடி சேர்ந்தார்கள் என்று கூறுகின்றன.

அவைகளெல்லாம் வெகுகாலத்திற்கு முந்தியவை— இந்தக் கலியுகத்தில்—கலியுகவரதனாகிய முருகக்கடவுள் இப்படி ஒரு பக்தருக்குக் காட்சி கொடுத்திருக்கிறார் என்பதையும்— அதை நேரில் பார்த்த நீங்களெல்லாம் சொல்லுவதை ஆராய்ந்து பார்த்தால்—முருகப்பெருமான் பழனியிலிருந்து அம்பலவாணனேந்தலுக்கு வந்து விட்டார் என்பது உறுதி. அது முதல் பழநி. இது இரண்டாவது பழநி.

இறைவன் எப்போதும் ஏழ்மை உள்ளவர்களிடம்தான் தங்குவார். அருள்பாலிப்பார் என்பதை நூல்களில் படித்திருக்கிறேன். இங்கேயும் அதுதான் நடந்திருக்கிறது.

இந்த வரலாற்றை என் மாமா சொல்லக் கேட்ட நான் அவர்களை மேலும் ஓர் விபரம் கேட்டேன்.

மாணிக்கவாசகர் பாண்டிய மன்னனுக்காகக் குதிரை வாங்க வந்தபோது திருப்பெருந்துறை துறைமுகமாக இருந்தது. பின்னால் சமுத்திரம் விட்டுப்போன பகுதி என்கிறார்களே—இந்தக் கிராமம் உற்பத்தியாகி சுமார் எத்தனை ஆண்டுகள் இருக்கலாம் என்றேன். அவர்கள் கொஞ்ச நேரம் யோசித்து விட்டு சுமார் 350 ஆண்டுகளுக்கு குறையாது என்று நினைக்கிறேன் என்றார்கள்.

நான் யோசித்தேன் 350 ஆண்டுகளுக்கு முன் இந்த நாடு எப்படி இருந்தது? இந்த கிராமத்தை உற்பத்தி செய்த மக்களின் அறிவு, ஆற்றல், கல்வி எந்த அளவு இருந்திருக்க லாம் என்று ஆழ்ந்து யோசிக்கும் போது அந்தப் பழமை யான காலத்தில் மேலே சொன்னவைகளெல்லாம் மிகமிக குறைவாகத்தான் இருந்திருக்க முடியும்.

அந்த நிலையில் உள்ளவர்கள் இந்த கிராமத்திற்கு—ஏன் அம்பலவாணனேந்தல் என்று பெயர் வைத்தார்கள். அம்பலவாணன் என்பது யார்? இதை நாம் நன்கு யோசிக்க வேண்டும்.

நானும் தமிழ் நாட்டில் அனேக இடங்களை சுற்றி பார்த்து இருக்கிறேன்—என்னை என் சகோதரர்கள், ஊர் சுற்றி என்பார்கள். அதனால் எனக்கு 35 வயது வரை கல்யாணம் செய்யவில்லை—என் தாயார் என் கல்யாணத் தைப் பற்றி சொன்னால்,இவனுக்குக் கல்யாணம் செய்தால் இவன் ஆண்டுக் கணக்கில் ஊர் சுற்றுவான். இவன் மனைவி மக்களுக்கும் நாங்கள் தான் உழைத்துப் போட வேண்டு மென்பார்கள்.

அப்படி எல்லாம் நான் சுற்றிய இடத்தில் இப்படிப் பெயருள்ள ஊரைப் பார்த்ததுமில்லை. காதால் கேட்டது மில்லை—சற்று முன் சொன்னீர்கள்—முன்னால் தினம்

வணங்க ஓர் பிள்ளையார் கோவில் கூட ஊருக்குள் இல்லை என்று அப்படி இருந்தபோது—ஏன் இப்படி நான்கு வீதியாகவும் வீதியின் அகலம் ஒரே அளவாகவும் வைத்து இந்த ஊரை அமைத்தார்கள்.

ஊரின் அமைப்பு, ஊர் பெயர், ஊர் அமைந்த காலம் —இவைகளையெல்லாம் — என்னுடைய அறிவுக்கும் அனுபவத்திற்கும் ஆழ்ந்து சிந்திக்கும்போது என்ன புலனாகிறது. 350 ஆண்டுகளுக்கு முன்பே பகவான் இங்கு எழுந்தருளத் திட்டம் போட்டு அந்தந்தக் காலங்களில் வாழ்ந்த மக்களின் உள்ளங்களில் தங்கி முறைப்படி வேலைகளை அவ்வப்போது செய்து முடித்து,

தொண்டர் அருணாசல உடையாரிடம் அப்பா—நீ பழனிக்கு வரவேண்டாம். நான் அங்கு வந்து விடுகிறேன்—என்னை அங்கு வைத்துத் தரிசனம் செய் என்று சொல்லி அவர் தோள்மீது ஆரோகணித்து இங்கு வந்து அமர்ந்து, உலகம் வியக்கும் ஓர் அற்புதத்தை 22 ஆண்டுகள் நடத்திக் காண்பித்திருக்கிறார்—ஆமாம் இப்படி ஊர் அமைப்பு இல்லாவிட்டால்—திருவிழாக் கொண்டாடி எப்படி சுவாமி எழுந்தருளச் செய்து வீதி உலா தூக்கி வருவீர்கள் என்று பேச்சை நிறுத்தினார்!

அவர் சொல்லி வந்ததை எல்லாம் அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்த பெரியவர்கள் ஆம் ஐயா நீங்கள் சொல்லுவதெல்லாம் உண்மை தான், மற்ற கிராமங்களைப்போல்—சந்து பாதையாகவும் மூலை முடுக்காகவும் இருந்திருந்தால் திருவிழா செய்யும் வேலையை நாங்கள் ஆரம்பித்தே இருக்க மாட்டோம் என்றார்கள்.

அவர் மேலும் சொன்னார்: ஐயா இப்படி கோவில்—குளம்—வீதி அமைப்புள்ள கிராமம் நம் தமிழ் நாட்டில் எங்கேயும் இல்லை. அப்படி அமைத்திருக்கிறார் முருகப் பெருமான்,

முருகப்பெருமான் தந்தையிடம் ஞானப்பழம் கேட்க—அது கிடைக்காததால் தந்தை மீது கடுஞ்சினங் கொண்டு தாய் தந்தையர்களைப் பிரிந்து தனியே பழனியில் வந்து அமர்ந்தார் என்று சரித்திரம் கூறுகிறது.

எம்பெருமான் பழனியில் பல ஆண்டுகள் தங்கியதில்—சினமெல்லாம் தணிந்து உலகையும் உலகில் வாழும் ஜீவராசிகளையும் காக்க பழனியில் இருந்தவர் இங்கு வந்து அமர்ந்திருக்கிறார்.

பழனிக்கு வந்தபோது கோபத்தோடு வந்தார்—இந்த அம்பலவாணனேந்தலுக்கு வந்தபோது—அன்பும்—பாசமும் கலந்த—கருணை உள்ளத்தோடு—அப்பா இனி உன்னால் இங்கு வர முடியாதது உண்மைதான். என்னால் நீ—கஷ்டப் பட வேண்டாம்—நான் அங்கு வந்து விடுகிறேன் என்று இங்கு வந்திருக்கிறார். அந்தக் கருணை முகத்தோடுதான் அமைந்திருக்கிறது விக்கிரகம்.

ஐயா உங்கள் எல்லோர் மத்தியிலும் உங்களிடம் ஒன்றை வேண்டுகிறேன்—அதை அனைவரும் மனமுவந்து ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று ஷண்முக ஆசாரி சொன்னார்: எல்லோரும் சரி என்றனர்.

ஐயா எனக்காக நான் எதையும் உங்களிடம் கேட்க நினைக்கவில்லை—நான் சிறுபிள்ளையில் கற்ற பிறகு—கோவில்களுக்கு விக்கிரகம் வார்ப்பிக்கும் சிற்ப சாஸ்திரத்தை நன்கு பயின்று—ஒரு பெரிய சிற்பியிடம் அந்தக் கலையைச் செய்யும் அனுபவத்தையும் பயின்று என்னுடைய 26வது வயது முதல் அந்தத் தொழிலைச் செய்து வருகிறேன்.

இதுவரையிலும் அனேக கோவில்களுக்கு அந்தந்த ஊருக்கு உள்ள பொருத்தப்படியும் சாஸ்திரப்படியும்—அவரவர்கள் சொல்லும் இறைவனின் உருவச் சிலையைச் செய்து வைத்து அதற்குரிய கூலியைப் பெற்றிருக்கிறேன்.

இங்கே—இந்தக் கோவிலுக்கு உற்சவமூர்த்தி சிங்கார வேலர்—சிலை ஒன்றை நம் கையில் அழகாக வார்ப்பித்து வைக்கவேண்டுமென்ற பெரிய ஆசை என் மனதை வாட்டு கிறது.

தயவு செய்து எல்லோரும் என்னுடைய வேண்டு கோளுக்கு மனமிரங்கி உதவி செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

விக்கிரகத்திற்கு வேண்டிய பஞ்சலோகங்களை தயார் செய்து கொடுங்கள்—நான் இப்போதிருந்தே ஆரம்பித்து செய்து முடித்து விட்டு ஊருக்கு போகிறேன்—ஆனால் எனக்கு எவ்வித கூலியும் தாங்கள் தரவேண்டாம்.

நானோ என் மாமா வீட்டிற்கு விருந்தினனாக வந்தேன். விருந்தும் மருந்தும் மூன்று நாள் என்பது பழமொழி. அதிலும் அவர்கள் ஏழ்மை நிலையில் உள்ள வர்கள்—வேலை முடியும் வரை மாதக்கணக்கில்—அவர்கள் வீட்டில் சாப்பிடுவது சிரமமாக இருக்கும்.

நான் எந்த கெட்ட பழக்கமும் இல்லாதவன்-வேளைக்கு சாப்பாடு மட்டும் நீங்கள் கொடுத்தால் போதும்—இதை எல்லோரும் கலந்து முடிவு செய்து இந்த வாய்ப்பை எனக்குக் கொடுச்கும்படி உங்கள் எல்லோரையும் சிரந் தாழ்த்தி கேட்டுக் கொள்கிறேன் என்று கைகூப்பி வணங்கிக் கேட்டுக் கொண்டார் ஷண்முக ஆசாரி.

மருதமுத்து உடையார், ''ஐயா பெரியவரே, நீங்கள் சொல்லுவது எங்கள் நன்மைக்கு! அது எங்களுக்கு நன்கு தெரிகிறது. எங்களிடம் இல்லாதகுறை—இதை நாங்கள் கலந்து பேசிப் பிறகு உங்களுக்கு சொல்லுகிறோம். என்றார்—அவரும் சரியய்யா என்றார் — எல்லோரும் வீடுகளுக்குப் போனார்கள்.

ஆசாரி சொன்னது எல்லோர் மனதிலும் பதிந்து விட்டது; மறுநாள் ஊரில் எல்லோரையும் அழைத்து கோவிலில் கூடினார்கள்.

மருதமுத்து உடையார்—என்னப்பா நேற்றையதினம் ஆசாரி சொன்னது நம் எல்லோருக்கும் தெரியும். அவர் அனேக காரணங்களையும் உதாரணங்களையும் சொல்லி நமக்கெல்லாம் விளக்கம் சொன்னார்;

அவர் நன்கு படித்தவர்; அதனால் நமக்குப் புரியும்படி நமது முருகப்பெருமானைப்பற்றி விளக்கிக் கூறினார். அது மட்டுமல்ல. ஒரு பெரும் பொறுப்பை அவர் ஒப்புக்கொண்டு நான் செய்து தருகிறேன் என்று நம்மை எல்லாம் கெஞ்சிக் கேட்கிறார். ஒரு நல்ல சந்தர்ப்பம்—சிலை செய்வதில் உள்ள பெரிய கஷ்டம்—அதற்குரிய சாஸ்திரம் படித்து தொழில் கற்ற சிற்பியைத் தேடிக் கொண்டு வந்து வேலை முடியும் வரை அவர்களுக்குச் சாப்பாடு சவரட்சணை செய்வதும் கூலி கொடுப்பதும்தான்.

அந்த சிரமம் எதுவுமே இல்லாமல் ஏதாவது சாப்பாடு மட்டும் போடுங்கள். கூலியோ எதுவும் வேண்டாம் என்று சொல்லி வலியவந்து நம்மிடம் கேட்கிறார். இதற்கு நாம் என்ன செய்யலாம் என்பதை எல்லோரும் யோசனை சொல்லுங்கள் என்றார் மருதமுத்து உடையார்.

கூட்டத்தில் இருந்த பலர் எப்படியாவது இந்த ஆசாரியை விடாமல் சிலை செய்து விட வேண்டுமென் றார்கள்,

முத்துச்சாமி உடையார் அப்பா நீங்கள் சொல்லுவதை யானும் மறுக்கவில்லை—எல்லோருக்கும் செய்து விட வேண்டுமென்று ஆசைதான் — அதற்குரிய பொருள் சேர்ப்பதுதான் எப்படி என்பது தெரியவில்லை தங்கம்—வெள்ளி இவைகள் அதிகம் வேண்டுமே, அது நம்மால் முடியுமா என்பதைத்தான் யோசிக்க வேண்டி இருக்கிறது என்றார்.

சுப்பையா உடையார்: என்ன முத்துச்சாமி எவ்வளவு நாள் ஆனாலும் சரி, சாப்பாடு மட்டும் போடுங்கள் நான் இங்கேயே இருந்து செய்து முடித்துவிட்டுப் போகிறேன் என்கிறார் ஆசாரி.

இப்படி சொல்லும் ஓர் ஆள் நமக்கு கிடைக்குமா அதை யோசிக்காமல் ஏதேதோ சொல்லுகிறாய். இந்த சமயம் நாம் இதை செய்யவில்லை என்றால் இனி நம் தலை முறைக்கே இந்தக் காரியம் நடக்கப் போவதில்லை. துணிந்துதான் இந்த காரியத்தில் இறங்கவேண்டும். உற்சவ மூர்த்தி செய்வோமென்று நாம் யாரும் நினைத்தது கூட இல்லை. அந்த நேரம் வந்துவிட்டது. அதனால்தான் அதற்குரிய ஆளை அந்தப் பெருமானே அழைத்து வந்திருக் கிறார். நாம் ஆரம்பித்தால் அதற்கு வேண்டிய உதவியை அவர் செய்வார்.

விக்கிரகத்திற்கு வேண்டிய ஐந்து உலோகங்களில்—மூன்று நாம் தயார் செய்து விடலாம்—தங்கம்—வெள்ளி இவை இரண்டிற்கும் பணம் வேண்டும்—அதற்கு ஊர் ஊராகப் பிச்சை எடுத்தாவது செய்து முடிப்போம் என்று சற்று வேகமாக சொன்னார் சுப்பையா உடையார்.

மருதமுத்து உடையார்—"ஏனப்பா சுப்பையா! இந்த காரியத்தில் யாரும் அக்கறை இல்லாமலா இருக்கிறோம். வழி தெரியாமல்தான் விழிக்கிறோம். நீ சொல்லியதில் வழி தெரிந்துவிட்டது.

இதுவரையிலும் நமது கோவிலில் நடந்திருக்கும் காரியங்கள் நம்முடைய பலத்தாலா? இல்லை. நம்மால் என்ன செய்ய முடியும். எல்லாம் இந்த முருகப்பெருமானின் அருளாலும் உதவியாலும்தான் நடந்திருக்கிறது.

இதை அவர் முன்னின்று முடித்து வைப்பார்—நாளைய தினம் ஆசாரியை அழைத்து அதற்கு என்னென்ன பொருள் எவ்வளவு தேவை என்பதைத் தெரிந்து கொள்வோம். நம்மால் முடிந்தது போக பாக்கிக்கு வெளிகிராமங்களுக்கு

சென்று விபரத்தை சொல்லி கேட்டால் எல்லோரும் தாராளமாக கொடுப்பார்கள். அப்படி வசூல் செய்து சிலையைச் செய்து முடிப்போம் என்றார்.

மறுநாள் ஊர்ப் பெரியவர்கள் கோவிலுக்கு வந்து ஆசாரியை அழைத்து ஐயா விக்கிரகம் செய்வது சம்பந்த மாக எல்லோரும் கலந்து யோசித்தோம். அதற்கு என்னென்ன பொருள் எவ்வளவு தேவை? பணம் எவ்வளவு தேவைப்படும் என்பதைத் தங்களிடம் தெரிந்து பிறகு முடிவு செய்வோமென்று பேசி இருக்கிறோம். ஆகையால் அதற்கு வேண்டியவைகளை விபரமாகச் சீட்டை எழுதுங்கள் என்றார் சுப்பையா உடையார்.

ஷண்முக ஆசாரி ஐயா பஞ்சலோகத்தால் செய்ய வேண்டும். பஞ்சலோகமென்றால் வெண்கலம் (முறி) செம்பு, பித்தளை, தங்கம், வெள்ளி இவை ஐந்தும் சேர்ந்தால் ஐந்து உலோகங்கள் ஆகிறது. அதைத்தான் பஞ்சலோகம் என்று சொல்லுவது. இதில் தங்கம், வெள்ளி இரண்டும் விலை கூடுதலாக உள்ளது.

அதனால் அது கிடைத்தது போகப் பாக்கி உலோகங் களைச் சேர்த்துச் செய்யலாம். அவை இரண்டும் முழுதும் முடியாவிட்டாலும் வெள்ளி, ஈயம், தாமிரம் இரண்டையும் சேர்த்து பஞ்சலோகங்களாக விக்கிரகம் வார்க்கலாம். தங்கம், வெள்ளி சேர்த்தால்தான் மூர்த்தி கரம் உண்டு என்பதல்ல.

நாம் எதை வைத்து ஒருமனதோடு வணங்கினாலும் அங்கே இறைவன் இருந்து அருள் பாலிப்பான்.

ஏன் தங்கம், வெள்ளி சேர்ப்பதென்றால் விக்கிரகத்தில் சீக்கிரம் களிம்பு ஏறாமல் பொலிவுடன் இருக்கும் என்பது தான் அதன் கருத்து.

கடவுள் தூணிலும் இருப்பார், துரும்பிலும் இருப்பார் என்பதைப் பிரகலாதன் சரித்திரம் உலகுக்குச் சொல்லு கிறது.

அப்படி இருக்கத் தங்கமும் வெள்ளியும் முக்கியம் அல்ல. ஏன் அதற்கு அவ்வளவு முக்கியத்துவம் கொடுத்தார்கள் என்றால் முன்னால் விக்கிரகம் செய்தவர்களெல்லாம் மன்னர்களும் பெரும் ஆதீனகர்த்தாக்களும், ஜமீன்களும் அவர்களிடம் ஸ்தபதியார்கள்தாங்கள்செய்யும் தொழிலுக்கு புகழ் வேண்டும். என்பதற்காக இவைகளை அதிகம் கணக்கு சொல்லுவார்கள். அவர்கள் செல்வம் மிகுந்தவர்கள் தாராளமாக கொடுப்பார்கள். அதில் இவர்களும் கொஞ்சம் பங்கிட்டு கொள்வது வழக்கம். அதனால்தான் தங்கம் வெள்ளிக்கு முக்கியத்துவம் ஸ்தபதியார்கள் கொடுத்தது இதுதான் ரகசியம்.

ஆனால் சிலை செய்வதில் உள்ள பெரிய சிரமம். உலோகம் சேர்ப்பதில் அல்ல. அதைச் செய்யும் சிற்பியை தேடி இப்படிக் கிராமங்களுக்கு கொண்டு வந்து சேர்ப்பதும் அவர்கள் இங்கு வந்தவுடன் நாங்கள் தெய்வீகமானவர்கள் உலகில் தெய்வங்களை உருவாக்கவே ஆண்டவன் எங்களைப் படைத்தான். எங்களைத் தவிர உலகில் வேறு யாராலும் இதைச் செய்ய முடியாது என்று படாடோபம் பேசுவர் எந்த அளவுமில்லாமல் ஊதியமும் கேட்பார்கள்.

ஏன் மன்னர்களிடமும் செல்வந்தர்களிடமும் அப்படி வாங்கி பழக்கப்பட்டவர்கள். அதுதான் சமாளிக்க முடியாத பெருந்தொல்லை. அது உங்களுக்குக் கிடையாது. என்ன இப்படியெல்லாம் சொல்கிறாரே இவரும் கம்மாளர் வகுப்பை சேர்ந்த ஸ்தபதிதானே என்று நீங்கள் நினைக்கலாம்.

இந்தக் கோவிலின் வரலாற்றை என் மாமாவிடம் கேட்டுத் தெரிந்தவுடன் இது ஓர் புனிதமான ஆலயம்; இங்கே நம்முடைய கையாலும் கற்பனையாலும் செய்த முருகப் பெருமானின் உருவச் சிலை அபிஷேக ஆராதனையோடு இருக்க வேண்டும். நமக்கு வயது 63 ஆகிறது;

நாம் முதிய பருவத்தில் இருக்கிறோம். இன்று இருப்போம். நாளை மரிப்போம். நம் கையால் செய்த முருகப்பெருமான் உலகம் உள்ள அளவும் அபிஷேக ஆராதனையோடு பலர் வணங்க இந்த ஆலயத்தில் இருப்பார். நம் ஆத்மாவுக்குச் சாந்தி அளிப்பார் என்று நம்புகிறேன். இதுதான் என் மனதில் உள்ள அந்தரங்கம் இந்த முருகன் மீது ஆணையாக வேறு எந்த லாபத்தையும் கருதியல்ல. இதைத் தாங்கள் அனைவரும் நிறைவேற்றித் தரும்படி கேட்டுக் கொள்கிறேன் என்று ஸ்தபதி ஷண்முக ஆசாரி சொன்னார்.

ஐயா இப்போது முழு விபரமும் தெரிந்து கொண்டோம். நாங்கள் என்ன நினைத்தோம் எல்லா உலோகங்களும் சம எடை வேண்டும் போலும். தங்கம், வெள்ளி அவ்வளவு நம்மால் எப்படி சேர்க்க முடியும் என்றுதான் பயந்து போனோம். இப்போது எங்களுக்குத் தைரியம் வந்துவிட்டது. எப்படியும் விக்கிரகம் செய்து விடுவோம். தேவையான எல்லாவற்றையும் சிட்டையில் எழுதிக் கொடுங்கள் என்றார் மருதமுத்து உடையார்.

ஸ்தபதி ஷண்முக ஆசாரி ஊரார் விக்கிரகம் செய்ய ஒப்புக் கொண்டதில் பெரும் மகிழ்ச்சி அடைந்து, நமது குறிக்கோள் நிறைவேறிவிட்டது. இந்த முருகப்பெருமான் நம் மீது கருணை காட்டி இருக்கிறார். நல்லது நினைத்துத் தன்னை நாடி வருபவர்கள் விருப்பை நிறைவேற்றி வைப்பவனல்லவா இந்தப் பெருமான் என்று அவரை மனதில் தியானித்து,

எழுந்து நின்று கணேசர் மேல் இரண்டு பாடல்களும் முருகப்பெருமான் மீது இரண்டு பாடலும் பாடி வீழ்ந்து வணங்கி சீட்டை எழுத ஆரம்பித்தார்.

கோவில் அபிஷேக ஆராதனை செலவு—3

மெழுகு உபரி சாமான்கள் 20

23

| | |
|---|---|
| வெண்கலம் சேர் | 50 |
| செம்பு சேர் | 20 |
| பித்தளை சேர் | 10 |
| மொத்த எடை சேர் | 80 |

தங்கம், வெள்ளி தங்களால் முடிந்த அளவு சிட்டையை எழுதி எல்லோர் முன்னாலும் படித்துக் காண்பித்தார் ஸ்தபதியார், பிறகு ஐயா பெரியவர்களே நீங்கள் முயற்சி செய்யுங்கள். இந்த பகவான் உங்கள் கூட இருந்து எல்லாவற்றையும் எளிதில் முடித்து வைப்பான். இது இன்று மட்டு மல்ல. எந்தக் காலத்திலும் அவனுக்காக எடுக்கும் முயற்சியில் அவன் முன்னால் நின்று எதிர்பார்த்ததைவிட அபரிமிதமாக முடித்து வைப்பான் என்பது என்னுடைய முழு நம்பிக்கை என்றார்.

சரி ஐயா உங்கள் வாக்குப்படியே நடந்து கோவில் மேலும் பெருக வேண்டுமென்பதுதான் எங்களுடைய ஆசை என்றார் வெள்ளைச்சாமி உடையார்.

ஸ்தபதியார் சிட்டையை கையில் எடுத்து கணேசரையும் முருகனையும் பிரார்த்தனை செய்து வயது முதிர்ந்த பெரியவர் மருதமுத்து உடையார் கையில் கொடுத்தார். அவரும் எழுந்து முருகனைப் பிரார்த்தனை செய்து சிட்டையைப் பெற்றுக் கொண்டார்.

எல்லோரும் அமைதியாக இருந்து எப்படி வசூல் செய்வதென்று ஆலோசனை செய்தார்கள், விக்கிரகத்திற்குத் தேவையான உலோகப் பொருள் மொத்த எடை 80. சேர் சிட்டையில் எழுதி இருக்கிறார். நம் ஊரில் நம் இனத்தவர்கள் 30 குடிகள் இருக்கின்றோம். குடி

ஒன்றுக்கு மூன்று சேர் சாமானாகவோ, அல்லது பண மாகவோ வசூல் செய்து சேர்ப்பது. பாக்கி தங்கம், வெள்ளி இவைகளுக்கு வெளி இடங்களுக்குப் போய் விபரத்தை சொல்லி நன்கொடையாக வசூல் செய்வோம். சேர்வதைப் பொறுத்து பிறகு யோசிப்போம் என்றார் மருதமுத்து உடையார்.

எல்லோரும் அப்படியே செய்வதென்று முடிவு செய்தார்கள். முதலில் ரூபாய் 21-ஐ ஸ்தபதியாரிடம் கொடுத்து அதற்கு வேண்டிய உபரி சாமான்களை வாங்கி வரும்படி சொல்லி நாம் ஆவுடையார் கோவிலுக்குப் போய் ஐயரிடம் நாள் பார்த்து வந்து முகூர்த்தம் செய்வோம் என்றார் சுப்பையா உடையார்.

சுணங்காமல் நாளையத் தினமே அண்ணன் மருதமுத்து உடையார், சுப்பையா உடையார், முத்துசாமி உடையார் இராமசாமி உடையார்; வெள்ளைச்சாமி உடையார் இவர்கள் ஐவரும் போய் கணபதி குருக்களிடம் ஆரம்பிப்பதற்கு நாள் வைத்துக் கொண்டு வாருங்கள். சுணங்காமல் இப்போதிருந்தே துரிதமாக வேலையை செய்ய வேண்டும். இந்த வேலை முடியும் வரை இவர்கள் ஐவரும் தான் பொறுப்பாக நின்று பார்க்க வேண்டும் என்று ரங்கசாமி உடையார் சொன்னார்.

பச்சமுத்து உடையார், ரெங்கசாமி சொல்லியபடி வேலையை இப்போதே சுறுசுறுப்பாகப் பார்த்தால்தான் முடியும். இப்போது கோடையில் நமக்கு ஓய்வு நேரம். நாம் வெளி இடங்களுக்குச் சென்று யாசகம் வாங்கிச் செய்ய வேண்டிய நிலையில் இருக்கிறோம். விவசாய ஆரம்பத்திற்குள் இந்த வேலையை முடித்துவிட வேண்டும். ஆகையால் நாளைக்கே இந்த ஐவரும் ஆவுடையார் கோவிலில் நாள் பார்த்து வாருங்கள். அதன் பிறகு பாக்கியை யோசிப்போம் என்றார். அப்படியே செய்வதென்று முடிவு செய்தார்கள்.

மறுநாள் காலையில் ஐவரும் கோவிலுக்கு வந்து சாமி தரிசனம் செய்து ஆவுடையார் கோவிலுக்குப் புறப் பட்டார்கள். மதியம் அங்கு போய்ச் சேர்ந்து கணபதி குருக்களிடம் இங்கு நடந்தவைகளை விபரமாகச் சொன் னார்கள்.

அதைக் கேட்ட ஐயர் அவர்கள் மிக சந்தோசப்பட்ட வராய், அப்பா நீங்கள் சொன்ன விவரத்தைக் கேட்ட என் மனம் ஆனந்த பரவசமடைகிறது.

சிவபெருமான்-சூரபத்மனுக்கு என் சக்தியைத் தவிர வேறு யாராலும் உன்னை அழிக்க முடியாது என்று கொடுத்த வரத்திற்காகவும், கலியுகத்தில் பக்தர்களை காக்கவும் தானே முருகனாக அவதாரம் எடுத்தார் சிவன் வேறு, முருகன் வேறு அல்ல.

நாம்தான் சிவனுடையபிள்ளை முருகன் என்று கொண்டாடுகிறோம் என்று சில பெரியவர்கள் சொன்னார்கள். அது உண்மையாகத்தான் தெரிகிறது. முந்திய யுகங்களில் சிவபெருமான் பல திருவிளையாடல் களைச் செய்தார்.

சரி நாளைப் பார்ப்போம் என்று பஞ்சாங்கத்தைப் பார்த்தார். இம்மாதம் இன்னும் ஏழு நாட்கள்தான் இருக்கிறது. இப்போது தேய்பிறை. நாளும் சரியாக இல்லை. சித்திரையில் பார்ப்போம் என்று புதுப்பஞ்சாங் கத்தைப் பார்த்து அதிக நேரம் ஆராய்ச்சி செய்து மருதுமுத்து. சித்திரை 11ஆம் தேதி ஓர் நாள் இருக்கிறது. அன்று உதயத்திற்கு மேல். மூன்றே முக்கால் நாழிகைக்குள் முகூர்த்தம் செய்ய வேண்டும். ஊர்க்காரியம் அதிகாலையில் எல்லோரும் வந்து விடுவார்களா என்பதை யோசிக்க வேண்டு மென்றார்.

சாமி! நமக்கு நாளும் நேரமும் தான் முக்கியம், ஆட்கள் வரமுடியுமா என்பதற்காக நாள் பார்க்கவேண்டாம் என்றார். சுப்பையா உடையரர். அப்படியானால்,

சித்திரை மாதம் 11 ஆம் தேதி திங்கள் கிழமை உதயா திக்கு மேல் மூன்றே முக்காலுக்குள் மேஷ லக்கனத்தில் எழுதித்தருகிறேன். அதன்படி செய்யுங்கள், நல்ல அமைப்பு கிரகங்கள் நல்லவலுப் பெற்று, ஆட்சி உச்சம்-பரி வர்த்தனை இவைகள் எல்லாம் அமைந்து நன்றாக இருக்கிறது என்றார்.

உங்கள் மனதிற்குச் சரியாக இருந்தால் அதன்படி எழுதுங்கள். மேலும் நாங்கள் பலரிடம் யாசகம் வாங்கிச் செய்ய வேண்டி இருப்பதால், அதற்கும் ஓர் நாள் பார்த்து எழுதி கொடுங்கள் என்றார். ராமசாமி உடையார்.

அப்படியா? அதற்கும், அதே தேதியில் 10 நாழிகைக்கு மேல் 13 நாழிகைக்குள் அதையும் செய்யுங்கள். இரண் டிற்கும் ஒரே நாளில் சரியாக இருக்கிறது. அதன்படி எழுதிதருகிறேன், என்று சொல்லி விபரமாக சீட்டை எழுதி, மருதமுத்து, நன்கொடையில் முதலில் உன் பெயரை எழுதி உன்னால் முடிந்ததை வரவு வை என்று சொல்லி மருதமுத்து உடையார் கையில் சீட்டைக் கொடுத்தார்.

சரி அப்படியே செய்கிறேன் என்று சிட்டையைப் பெற்றுக் கொண்டார் மருதமுத்து உடையார்.

ஐயர்-மருதமுத்து உங்களுக்கு மூலவிக்கிரகம் கொடுத்து கும்பாபிஷேகம் செய்து வைத்த காசினாத தம்பிரான் இப்போது திருவாவடுதுறையில் இருக்கிறார், அவர் உங்கள் கோவில் மேல் நல்ல பிரியமுள்ளவர் மார்கழித் திருவிழா விற்கு வந்த போது என்னிடம் உங்கள் கோவிலைப் பற்றி விசாரித்தார்.

அவர் இந்த சித்திரையில் இங்கு வருகிறார்: கிராமங் களின் வரவு செலவு கணக்குப்பார்த்து ஆனித் திருவிழா முடித்துத் தான் புறப்படுவார்; ஆகையால் அவர் இங்கு வந்த பிறகு நீங்கள் ஐவரும் வாருங்கள். நானும் அவரிடம்

சொல்லுகிறேன். இந்தக் காரியத்திற்கு நல்ல உதவி செய்வார் என்றார் கணபதி குருக்கள்.

சாமி நீங்கள் சொல்லியபடி வருகிறோம். அவர் வந்த உடன் எங்களுக்குத் தகவல் சொல்லி அனுப்புங்கள் என்று மருதமுத்து உடையார் சொல்லி ஐயரிடம் விடை பெற்றுக் கொண்டு, ஊர் வந்து சேர்ந்தார்கள்.

மறுநாள் ஊர்ப் பெரியவர்கள். ஸ்தபதியாரை அழைத்து-நாள் வைத்திருக்கும் விபரத்தைச் சொல்லி நீங்கள் சொன்ன ரூ. 21 தருகிறோம், வேண்டிய உப சாமான்களை வாங்கி வாருங்கள். சித்திரை 11-ந் தேதி மூகூர்த்தம் செய்து உங்கள் வேலையை ஆரம்பிக்கலாம் என்றார் சுப்பையா உடையார்.

அப்படியே செய்வோமென்று ஸ்தபதியார் ஒப்புக் கொண்டார்.

அன்று மாலையில் சிவலிங்க ஆசாரியை அழைத்து விபரத்தைச் சொன்னார்கள்—அவர் ஐயா: பெரியவர் களே. எல்லா விபரங்களும் அன்றாடம் நான் தெரிந்து கொண்டேன். நாங்கள் ஏழு பேர் சகோதரர்கள். நான் கடைசி. எங்கள் மூத்த சகோதரி சுப்பம்மாள் அதனுடைய குழந்தை தான் இவர், எற்களுக்கும் இவர்களுக்கும் நீண்ட நாளாக வருத்தம், ஒருவர்க்கொருவர் பேச்சுவார்த்தை கூட இல்லை. என் திருமணத்திற்கு முன்பே எவ்வித போக்கு வரத்தும். கிடையாது என் சகோதரி சுப்பம்மாள் சிவபதம் அடைந்த போதும்,

நான் என் சகோதர்கள் யாரும் போகவில்லை.

அப்படி இருந்தும்-நம் திருவிழா இரண்டாம் நாள் மாலையில் திடீரென்று வீட்டினுள் வந்து மாமா என்றார். வாங்க தம்பி உட்காருங்கள் என்றேன். அமர்ந்தார். எனக்கு திகில் பிடித்தாற் போல ஒன்றுமேபுரியவில்லை.

சரி என்ன இருந்தாலும், வீட்டினுள் வந்தவர்களை வரவேற்று உபசரிக்கவேண்டியதுதான் முறை. என்று எண்ணி.

"தம்பி சாப்பிடுங்கள் என்றேன். சரி மாமா! அத்தை எங்கே என்றார். அவள் வேலைக்குப் போயிருக்கிறாள் நானே சாதம் போடுகிறேன் என்று என்னுடைய கும்பா விலேசாப்பாடு போட்டேன். மகிழ்ச்சியோடு சாப்பிட்டார் பிறகு வெற்றிலை போடுங்கள் என்றேன், எனக்கு அந்த பழக்கங்கள் எல்லாம் இல்லை மாமா என்றார்.

அவரே என்ன மாமா முகமெல்லாம் ஓர் மாதிரியாக இருக்கிறது. என்றார். ஒருவாரமாக உடம்புக்கு சரியாக இல்லையப்பா என்று சொல்லி சமாளித்துக் கொண்டு ஊரில் இருந்துதானே வருகிறீர்கள்? வீட்டில் எல்லோரும் சௌகரியமாக இருக்கிறார்களா என்றேன்.

மாமா நான் புறப்பட்டு ஒரு மாதமாகிறது. சில கோவில்களுக்குப் போய் சாமி தரிசனம் செய்து ஆவுடையார் கோவில் ஆத்மனாதரையும் மாணிக்கவாசகரையும் தரிசனம் செய்து போவோம் என்று அங்கு வந்தேன்.

உங்களைப் பார்த்தும் பல வருஷங்களாகிவிட்டன. அதனால் இப்பறியே உங்களையும் பார்த்துப் போகலாம். என்று வந்தேன் என்றார்.

இப்போது தான் தெரிகிறது. அவரை இங்கு அழைத்து வந்தது யார்? எதற்காக அழைத்து வந்தார்? என்ற விபரம் தெளிவாகப் புரிந்து விட்டது.

ஆனால் நன்கு சாஸ்திரம் படித்தவர். சாஸ்திர முறைப்படி தொழிலும் மிக அருமையாகச் செய்வார். நல்ல கைராசியும் கூட. கோவில் வேலைகள் தவிர சும்மா இருந்தாலும் வறுமைக்காக வேறு எந்த வேலையும் செய்யமாட்டார். சாமி பித்துபிடித்தவர். எப்போதும்

சாமிதரிசனம் சாமிதரிசணம் என்று சுற்றுவார், நல்ல ஆளாகப்பார்த்துத்தான் அழைத்து வந்திருக்கிறார் நமது முருகப் பெருமான் என்றார் சிவலிங்க ஆசாரி.

சுப்பையா உடையார் இப்படியா விபரம்? ஆச்சரியம்தான். சரிஇருக்கட்டும். இப்போது அவர் இங்குள்ள வேலை முடியும் வரைதங்கவேண்டிய திருப்பதால் அவர் சாப்பாட்டிற்கு அரிசி பருப்பு முதலியவைகளை நாங்கள் தருகிறோம். சமையல் செய்து போடுங்கள்.

அவர் உங்கள் சகோதரிபிள்ளையாக இருந்தாலும் அதிக நாள் இங்கு தங்கி எங்களுக்கு வேலை செய்ய வேண்டியிருப்பதால் இப்படிச் சொல்லுகிறோம் என்றார்.

ஐயா நீங்கள் சொல்லும் எதையும் நான் மறுக்க மாட்டேன். அதிலும் இது தெய்வ காரியம். அவரே எந்த ஊதியமும் வேண்டாம் என்று இதைச் செய்ய முன் வந்திருக்கிறார்.

நான் இந்த ஊரில் குடி இருப்பவன். தினம் அந்த பகவானைத் தரிசனம் செய்யும் வாய்ப்பைப் பெற்றவன். அவர் இங்கு இருக்கும் வரை உணவு கொடுக்கலாம். என்னுடைய ஏழ்மை நிலையை அறிந்து இப்படிச் சொல்லுகிறீர்கள். உண்மையும் அதுதான். ஆகையால் அவர் இங்கு இருக்கும் வரை அதை நாங்கள் செய்கிறோம். என்றார்.

எல்லோரும் சந்தோசப்பட்டு நம் எல்லோர் வீட்டிலும் மாதம் ஒன்றுக்கு ஒருபடி அரிசி வீதம் வசூல் செய்து கொடுப்போம். மற்றும் பருப்பு, எண்ணெய், புளி நம் வீடுகளில் தாராளமாக இருக்கிறது. அவைகளை வேண்டும் போது நீங்களே வாங்கிக் கொள்ளுங்கள் என்றார் மருதமுத்து உடையார்.

அந்த விபரங்கள் எனக்குத் தெரியும். வேண்டிய சாமான்களை அவ்வப்போது வீடுகளில் வாங்கி அவருக்கு

மனம் கோணாமல் சமையல் செய்து போடுவது என் பொறுப்பு, இந்த வேலையாவது எனக்குக் கிடைத்ததைப் பற்றிப் பெருமைப்படுகிறேன் என்றார் சிவலிங்க ஆசாரி.

சித்திரை மாதம் பிறந்தது பத்தாம் நாள் காலையில் மருதமுத்து உடையார், சுப்பையா உடையார் இன்னும் சில பெரியவர்கள் கோவிலுக்கு வந்து ஸ்தபதியாரை அழைத்து ஐயா நாளை முகூர்த்தத்திற்கு என்ன சாமான்கள் வேண்டுமென்று கேட்டார்கள்.

ஸ்தபதியார் ஐயா முதலில் மஞ்சள், குங்குமம், சந்தனம், வெற்றிலைபாக்கு, பத்தி, சூடம், சாம்பிராணி. பச்சை அரிசி இவைகள் போதும். உதயாதிக்கு முகூர்த்தம். ஆகையால் முன்கூட்டியே எழுந்து பசும்பால் தயார் செய்யுங்கள். உதயத்திற்கு முன்பே சுவாமிக்கு அபிஷேகம் நெய்வேத்தியம் ஆராதனையை முடித்துக் கொண்டு,

ஊரில் ஆண்-பெண் சகலரையும் அழைத்து சாமி தரிசனம் முடிந்தவுடன் சிலை செய்யும் மெழுகை ஓர் தட்டில் வைத்து அனைவரும் அதில் மஞ்சள் குங்குமம் பொட்டு வைக்க வேண்டியதுதான். பிறகு நான் வேலையை ஆரம்பிப்பேன் என்றார் ஸ்தபதியார்.

மறுநாள் உதயத்திற்குள் அபிஷேக ஆராதனைகளைச் செய்து அனைவரும் சாமி தரிசனம் செய்து ஸ்தபதியார் சொன்னபடி மருதமுத்து உடையார் மஞ்சள் தொட்டு வைத்தார். பின்னால் அனைவரும் முறைப்படி மஞ்சள் தொட்டு வைத்து முடித்தார்கள். ஸ்தபதியாரும் நேரத்தை விடாமல் அவர் செய்யும் முகூர்த்த முறையைச் செய்தார். பிறகு எல்லோருக்கும் பிரசாதம் காப்பரிசி வழங்கினார்கள்.

அனைவரையும் 10 நாழிகைக்கு கோவிலுக்கு வரும்படி சொன்னார் சுப்பையா உடையார். அதன்படி 10 நாழிகைக்குள் எல்லோரும் கோவிலுக்கு வந்தார்கள். ஐயர் சிட்டையில் எழுதி இருந்தபடி 11 நாழிகைக்கு நன்கொடை புத்த

கத்தில் மருதமுத்து உடையார் பேரை எழுதி ஒரு ரூபாய் வரவு வைத்து பிறகு எல்லோரும் அவரவர் பேரை எழுதி வரவு வைத்தார்கள்.

ஆவுடையார் கோவில் மடம் காசிநாத தம்பிரான் ஊருக்கு வந்திருப்பதாகக் கணபதி குருக்கள் சொல்லி அனுப்பி இருந்தார். முதலில் அவரைப் பார்த்துத் தம்பிரான் பெயரை முதலில் எழுதி வரவு வைத்து அடுத்து வெளியூர்களுக்குப் போவதென்று முடிவு செய்து,

14-ம் தேதி காலையில் ஐவரும் கோவிலுக்கு வந்து சாமி தரிசனம் செய்து ஆவுடையார் கோவிலுக்குப் புறப் பட்டார்கள். மதியம் அங்கு போய்க் குருக்கள் ஐயரை முதலில் பார்த்தார்கள்.

ஐயர் சொன்னார்: "ஒன்பதாம் தேதி சாமி அவர்கள் வந்தார். மறுநாள் அவரைப் பார்க்கப் போனேன். அவர் என்னை வரவேற்று அமரச் சொல்லி இங்குள்ள சேமங்களை கேட்டு, பிறகு உங்கள் கோவிலைப் பற்றி விசாரித்து, திருவிழா நடத்தினார்களா என்றெல்லாம் கேட்டார். அதற்குரிய பதில்களைச் சொல்லி இப்போது ஆரம்பித் திருக்கும் காரியத்தை விபரமாகச் சொன்னேன்.

இந்த விபரத்தைக் கேட்டவுடன் அவர் ஆச்சரியப்பட்டு நமது சன்னிதானத்தின் ஆசை பூர்த்தியாகி விட்டதய்யா என்றார்.

நீங்கள் வருவதை விசாரித்தார்கள். இம்மாதம் வருவதாக தகவல் என்றேன். உங்கள் கையில்தான் முதலில் நன்கொடை வாங்க வேண்டுமாம் என்றேன். அவர் சந்தோசத்தோடு கொடுப்போம்; இப்படிக் காரியங்களுக்கு உதவி செய்ய ஆண்டவன் நமக்குக் கொடுக்கும் வாய்ப்பை நழுவ விடக் கூடாதய்யா என்றார்.

ஆகையால் நான் முன்னால் மடத்திற்குப் போகிறேன் நீங்கள் கொஞ்சம் வெற்றிலை பாக்கு ஐந்து எலுமிச்சம்

பழம் வாங்கிக் கொண்டு சற்று தாமதித்து மடத்திற்கு வாருங்கள் என்று சொல்லி அவர் புறப்பட்டார்.

போயிருந்தவர்கள் வெற்றிலைபாக்கு பழம் இவைகளை ஓர் தட்டில் எடுத்துக் கொண்டு மடத்திற்குப் போய் தம்பிரான் முன் வைத்து வணங்கினார்கள். எல்லோருக்கும் விபூதி கொடுத்து அமரச் சொன்னார்.

தம்பிரான் ஊரில் குடிகளின் நலன்களை விசாரித்துக் கோவிலுக்கு உற்சவ மூர்த்தி செய்ய ஏற்பாடு நடப்பதாக அய்யர் சொன்னாரே அப்படியா என்றார்.

ஆமாம் என்று விபரத்தைச் சுருக்கமாக மருதமுத்து உடையார் சொன்னார்.

அதை அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்த தம்பிரான் அவர்கள் இதை எல்லாம் விபரமாக ஐயர் சொன்னார். மிக நல்ல காரியம். ரொம்பப் பொறுமை யோடும் முயற்சியோடும் செய்ய வேண்டும்.

தைரியத்தோடு செய்யுங்கள்; எல்லாம் நல்ல முறையில் முடியும் என்றார்.

முதலில் தங்கள் கையில் நன்கொடை வாங்க வேண்டு மென்றுதான் வந்திருக்கிறோம் என்று மருதமுத்து உடை யார் சொன்னார்.

சரி, அப்படியே செய்வோம். என் ஆயுள் உள்ளவரை உங்கள் கோவிலுக்கு என்னால் முடிந்த உதவியைச் செய்யக் கடமைப்பட்டிருக்கிறேன். ஆனால் நான் இப்போது திருவாவடுதுறையில் இருப்பதால் உங்கள் கோவிலை அடிக்கடி வந்து பார்க்க முடியவில்லை. வர முடியா விட்டாலும் எப்போதும் ஞாபகத்தில் இருக்கிறது. மனதால் வணங்கிக் கொண்டுதான் இருக்கிறேன்.

இந்தக் காரியத்திற்கு ஐந்து பவுன் தங்கமும் ஒரு சேர் வெள்ளியும் தருகிறேன். அதை வாங்கி வைத்துக் கொண்டு

ஆள் அனுப்புகிறேன். வந்து வாங்கிப் போகலாம். என் கையில் முதலில் வாங்க நினைப்பதாகச் சொன்னீர்கள். அதனால் இந்த ஐந்து ரூபாயை என் பெயரில் வரவு வைத்துக் கொள்ளுங்கள் என்று ஐந்து ரூபாயைக் கொடுத்தார் மருதமுத்து உடையார்; சாமி அவர்களை வணங்கிப் பெற்றுக் கொண்டார்.

தம்பிரான் அவர்கள் ''மருதமுத்து! நீங்கள் ஆரம்பித்திருப்பது மிகப் பெரிய காரியம். நீங்களோ உழவு குடியானவர்களிடம் நன்கொடை வாங்கி எவ்வளவு பணம் சேரும்? குடிகள்.பணம்-காசைப் பார்ப்பதே மிகக் கஷ்டமான காலமாக இருக்கிறது.

ஒரு மூட்டை நெல்லை முக்கால் ரூபாய்க்கு வாங்க ஆள் இல்லாத காலமாக இருக்கிறதே. எப்படிப் பணம் சேரும் என்று சொன்னவர் அவரே நான் யோசிக்காமல் அதைச் சொல்லுகிறேன் நீங்களா இதைச் செய்கிறீர்கள்? இல்லை. அந்த முருகப்பெருமானே தான் செய்கிறார்.

அதனால்தான் சம்பளமில்லாமல் வேலை செய்ய ஆள் கொண்டு வந்திருக்கிறார். அதில் முக்கால் பங்கு வேலை முடிந்து விட்டது. இனி என்ன? பணம் கிடைத்தால் தங்கம் வெள்ளி அதிகம் சேர்க்கலாம். இல்லாவிட்டால் கிடைத்ததை வைத்து வேலையை முடித்துவிடலாம். செய்யும் ஆளைக் கொண்டு வந்தவர் இனி சும்மாவா இருந்து விடுவார்? இனியும் அதற்குள்ளதை அவர் செய்வார். நீங்கள் மட்டும் மனம் தளராமல் உறுதியோடு செயல் படுங்கள். பாக்கியை அவர் பார்த்துக் கொள்ளட்டும் என்றார்.

நாங்களும் அப்படித்தான் நம்புகிறோம் என்றார் சுப்பையா உடையார்.

தம்பிரான் அவர்கள் எனக்கு இன்னாரு யோசனை தோன்றுகிறது.

திருவாவடுதுறையில் சன்னிதானத்திடம் ஓர் நாள் பரஸ்பரமாக நாங்கள் இருவரும் பேசிக் கொண்டிருந்த போது உங்கள் கோவிலைப் பற்றி முழு விபரத்தையும் விபரமாகச் சொன்னேன்.

அதைக் கேட்ட அவர் ஆச்சரியப்பட்டுப் போனார். 'என்னய்யா இந்தக் கலியுகத்தில் இப்படியொரு நிகழ்ச்சி நடந்ததென்றால் ஆச்சரியமாக இருக்கிறதே: அப்ப எந்தக் காலத்திலும் பக்தர்களுக்கு அருள் வழங்க இறைவன் தவறுவதேயில்லை' என்பது இதன் மூலம் நன்கு புலனா கிறது.

அதிலும் நமது மடத்திற்குச் சொந்தமான கிராமத்தில் இப்படியொரு பிரசித்தி பெற்ற முருகன் ஆலயம் உருவாகிறது நமக்கும் பெருமைதான். ஆனால் அவர்கள் சிறு விவசாயிகள். ஒரு சிவஸ்தலத்தை முறைப்படி நடத்து வது பெரிய காரியம். தொடர்ந்து விடாமல் நடக்க வேண்டும் என்று சொல்லியவர் அவரே. திரும்பி நடக்கும், ஏன் தானே வலிய வந்து அவரே அமர்ந்ததால் அங்கு குறைவு ஏற்பட விடமாட்டார்.

அந்தக் கோவில் வளர்ந்து கொண்டேதான் போகும். அப்படித்தானே? என்று என்னைக் கேட்டார்.

நானும் அதில் என்ன சந்தேகம். நமது திருப்பெருந் துறையிலும் இறைவன் தானே வந்து மாணிக்கவாசகரைத் தடுத்தாட்கொண்டார். இப்போது அது நமது நாட்டில் ஒரு பெரிய க்ஷேத்திரமாகி விட்டது.

அதைப்போல் அம்பலவாணனேந்தலில் எழுந்தருளி இருப்பவர் கலியுக வரதனாகிய முருகப் பெருமான் இவரென்ன குறைந்தவரா? என்று சொன்னேன்.

ஆமாம். நீங்கள் சொல்லிய பிறகுதான் ஞாபகம் வருகிறது. அங்கேயும் ஆரம்பம் இப்படித்தானே இருந் திருக்கும். இப்போது நமது ஆத்மனாதசாமி ஆலயம் எவ்வளவோ பெரியதாகவும், ஏராளமான கிராமங்கள்

கொண்டு பெரிய நிர்வாகங்கள் எல்லாம் நடக்கின்றன: ஆரம்பம் மாணிக்கவாசகர் இறைவனிடம் ஞானோபதேசம் பெற்று அவருக்கு ஓர் சிறிய ஆலயம் அமைத்தார். இன்று எவ்வளவோ விரிவடைந்திருக்கிறது. அருள் பெற்றவர்கள் ஆரம்பிப்பது பெருகிக் கொண்டு போகுமே தவிரக் குறைவு ஏற்படாது என்றார். நானும் அது உண்மைதான் என்றேன்.

ஆகையால் நான் சித்திரைக் கடைசியில் திருவாவடு துறைக்குப் போகிறேன்—வைகாசியில் நீங்கள் இரண்டுபேர் அங்கு வந்தால் நானும் இருந்து சன்னிதானத்திடம் சொன்னால் இந்தக் காரியத்திற்கு நல்ல முறையில் பொருளுதவி செய்வார் என்று நம்புகிறேன். நீங்கள் கிராமங்களில் போய் அரைக்காலும் காலுமாக வாங்கிச் சேர்ப்பது அதிகம்; சேர்வது கஷ்டம். ஆகையால் நீங்கள் ஊரில் எல்லோரும் கலந்து கொண்டு எனக்குத் தகவல் சொல்லுங்கள் என்றார் காசிநாத தம்பிரான்.

போயிருந்த ஐவரும், "சாமி, தாங்கள் சொல்வது மிகவும் நல்ல யோசனை. நாங்கள் ஊரில் எல்லோரும் கலந்து பேசி இங்கு வரும் போது தகவல் சொல்லுகிறோம்" என்று சொல்லி தம்பிரான் சாமியிடம் விடை பெற்றுக் கொண்டு ஊருக்கு வந்தார்கள்.

மறுநாள் ஊர்ப் பெரியவர்களை எல்லாம் அழைத்துக் கோவிலில் இருந்து தாங்கள் ஆவுடையார் கோவில் தம்பிரான் சாமியிடம் போனதையும் அவர்கள் சொன்ன விபரம் பூராவையும் மருதமுத்து உடையார் சொன்னார்.

அப்படியானால் அவர்கள் சொல்லியது ஓர் நல்ல வழி: நாம் அதை அனுசரித்து நடப்பதுதான் நல்லது—அவர்கள் பல பெரிய தேவஸ்தானத்தை வைத்து நடத்தும் தர்ம கர்த்தாக்கள்; அவர்களைப் பின்பற்றினால் நல்ல உதவியும் கிடைக்கும்; சில பழக்கங்களும் நமக்குப் புரியும்,

ஆகையால்—சாமி அவர்கள் ஊருக்குப் போன உடன் மருதமுத்தும்—சுப்பையாவும் போய் வாருங்கள். நாம் இங்கு கோவில் வைத்து நடத்துவது பற்றி நாமே நேரில் சொன்னால், அதில் எவ்வளவோ நன்மை இருக்கிறது என்றார் முத்துச்சாமி உடையார். அப்படியே செய்வதென்று முடிவு செய்தார்கள். மறுநாள் காலையில் கோவிலுக்கு வந்து சாமிதரிசனம் செய்து—வெளியூர்களுக்கு வசூல் செய்யப் புறப்பட்டார்கள்—பல இடங்களுக்குச் சென்று அங்கங்கே கிடைப்பதை வசூல் செய்து வந்தார்கள்.

சித்திரை—21-ஆம் தேதி மடம் சேவகர் வந்து மருதமுத்து உடையாரிடம் உங்களை சாமி அவர்கள் ஆவுடையார் கோவிலுக்கு வரும்படி சொன்னார் என்றார்.

மறுநாள் காலையில் மருதமுத்து உடையாரும் சுப்பையா உடையாரும் ஆவுடையார் கோவிலுக்குப் போய் சாமி அவர்களைப் பார்த்து வணக்கம் செலுத்தினார்கள்.

சாமி அவர்கள் இருவருக்கும் விபூதி கொடுத்து அமரச் சொல்லி நான் சொல்லியனுப்பியதற்கு என்ன முடிவு செய்தீர்கள் என்றார்.

நீங்கள் சொன்னபடி திருவாவடுதுறைக்கு வந்து சன்னிதானத்தைப் பார்ப்பதாக முடிவு செய்தோம் என்றார்.

அப்படியா? நான் நாளை மறுதினம் புறப்படுகிறேன்; வைகாசி முதல் தேதியில் சுணங்காமல் வந்து சேருங்கள் என்று கூறி, தான் முன்னால் சொல்லிய ஐந்து பவுன் தங்கம் ஒருசேர் வெள்ளி ஆகிய இவை இரண்டையும் கொடுத்தார். மருதமுத்து உடையார் எழுந்து பணிவுடன் அதைப் பெற்றுக் கொண்டு வைகாசி பிறந்தவுடன் அங்கு வருகிறோம் என்று சொல்லி சாமியிடம் விடை பெற்றுக்கொண்டு ஊர் வந்தார்கள்.

பிறகு இங்கு பல இடங்களுக்குச் சென்று முடிந்த அளவு வசூல் செய்தார்கள்.

வைகாசி மாதம் 5ஆம் நாள் மருதமுத்து உடையார் சுப்பையா உடையார் இருவரும் கோவிலுக்கு வந்து சாமி தரிசனம் செய்து திருவாவடுதுறைக்குப் புறப்பட்டார்கள்.

இருவரும் திருவாவடுதுறை போய்ச் சேர்ந்து மடத்திற்குப் போய் காசிநாத தம்பிரானைப் பார்த்து வணக்கம் செலுத்தினார்கள். அவர் சிரித்த முகத்துடன் வரவேற்று விபூதி கொடுத்து அமரச் சொன்னார்.

பிறகு தம்பிரான் கூறியதாவது :

''சன்னிதானத்தைப் பார்க்கப் போனேன், அவர் என்னை வரவேற்று ஆவுடையார் கோவில் மடம் தேவஸ்தானம் இவைகளின் இவ்வருஷ சாகுபடி விபரங்களை கேட்டார். அதற்குரிய பதில்களைச் சொன்னேன். கேட்டுக் கொண்டு அம்பலவாணனேந்தல் கோவிலைப் பற்றி விசாரித்தீர்களா? திருவிழாவெல்லாம் விடாமல் நடத்து கிறார்களா? என்றார்.

நான் இது நல்ல சமயம், அவரே முந்துகிறார். இந்தச் சந்தர்ப்பத்தை விடக்கூடாது என்று அங்கு நீங்கள் சொன்னதை விரிவாகவும் விளக்கமாகவும் சொன்னேன்.

அவர் சிரித்த முகத்தோடு இது என்னய்யா கலியுகத்தில் ஒரு விளையாடலா? ஒரு ஸ்தபதி அந்தக் கிராமத்திற்குப் போய் அவர்களை ஒன்று கூட்டி அவர்களைக் கை கூப்பி வணங்கி எனக்கு எவ்வித ஊதியமும் வேண்டாம். உங்கள் கோவிலுக்குச் சிங்காரவேலவர் விக்கிரகத்தை நான் வார்த்துத் தர அனுமதி மட்டும் கொடுங்கள் என்றால் இதை நம்பவே முடியவில்லையே என்றார்.

நான் 'ஆமாம் சாமி' இதை முன்னொருதரம் பேசி இருக்கிறோம். நம் திருப்பெருந்துறையில் வந்து சிவ பெருமான் பள்ளி நடத்தி மாணிக்கவாசகருக்கு ஞானோபதேசம் செய்ய மாணிக்கவாசகர்—தான் இங்கு குதிரை வாங்க வந்தோமென்பதை மறந்து, கொண்டு வந்த திரவியத்தை எல்லாம் திருப்பணி செய்து முடித்து விட்டார்,

இதை யறிந்த பாண்டியன் தன் பொக்கிஷத்தில் எடுத்துப்போன திரவியத்தை எல்லாம் திருப்பித் தரும்படி கேட்டான் — மாணிக்கவாசகர் திரவியத்தை எல்லாம் திருப்பணிக்குச்செலவு செய்து விட்டார்—திருப்பிக்கொடுக்க முடியவில்லை—பாண்டியன் உடனே மாணிக்கவாசகரை மதுரைக்கு கொண்டு போய்—வைகை சுடுமணலில் நிறுத்தி நெற்றியில் சுடுசெங்கல்லை வைத்தான். எப்படிச் செய்தா லும் திரவியம் பகவானின் திருப்பணியில் முடிந்து விட்டது.

எப்படித் திருப்பிக் கட்டுவார்—முடியவில்லை. உடனே மாணிக்கவாசகரைச் சிறையில் அடக்க உத்திரவிட்டான் பாண்டியன்—மாணிக்கவாசகர் சிறையில் இருந்து அவதிப் பட்டார்.

சிவபெருமான் சும்மா இருந்தாரா? காட்டில் உள்ள நரிகளை எல்லாம் பிடித்து உயர்ந்த அரபு நாட்டுக் குதிரை களாக்கிப் பாண்டியனுக்கு ஒப்படைத்து மாணிக்க வாசகரைச் சிறையிலிருந்து மீட்டு வந்ததுதானே திருப்பெருந்துறை வரலாறு.

அதைப் போல பழனியில் சகல வைபவங்களிலும் இருந்த முருகப்பெருமான் ஒரு பரம ஏழை பக்தர்!, அருணாசலத்திற்காக அருள் கூர்ந்து கருணையோடு, "அப்பா அருணாசலம்! இனிமேல் நீ இங்கு வரவேண்டாம், நான் அங்கு வந்து, விடுகிறேன்" என்று அவரோடு அம்பல வாணனேந்தலுக்கு வந்து தான் அங்கு வந்ததை உலக மக்கள் உணர 22 ஆண்டுகள் பச்சைத் தண்ணீரில் விளக்கை எரித்தார் என்றால்—

அருணாசலத்தின் பக்தியையும் மாணிக்கவாசகருடைய பக்தியையும் ஒப்பிட்டுப் பார்த்தால் மாணிக்கவாசகருக்காக இறைவன் வேலை செய்தது ஒருநாள்; அருணாசலத்திற்காக வேலை செய்தது 22 ஆண்டுகள்—

இறைவன் மாணிக்கவாசகரை ஆட்கொண்டது உலகுக்குத் தெரிந்துவிட்டது. அருணாசலத்தை ஆட்

கொண்டது தெரியவில்லை. ஆகையால் ஸ்தபதியை அழைத்து வந்ததும் அங்கே இதை நடத்துவதும் யாரென்பது தெளிவாகப் புரிகிறது. அதுவும் இந்த கலியுகத்தில்!

ஊரின் பெயரைப் பார்த்தீர்களா? அம்பலவாணனேந்தல் தில்லைக் கூத்தனுடைய பெயர்—ஊரை நீங்கள் பார்க்கவில்லை. நான் பார்த்திருக்கிறேன்.

ஊரின் மேல்புறம் பெரிய குளம்—குளத்தின் கீழக்கரையில் கோவில், கோவிலின் முன் நம் ஆவுடையார் கோவிலைப் போல் நான்கு வீதியும் சதுரப்பட அமைப்பு இங்கே ஆவுடையார் கோவிலில்—கோவில் அமைந்த பிறகு ஊரை அமைத்திருக்கிறார்கள். அங்கே அப்படியல்ல, ஊர் அமைந்து சுமார் 250 ஆண்டுகளுக்குப் பிறகு முருகப்பெருமான் அங்கு எழுந்தருளி இருக்கிறார்.

அது ஒரு பெரிய அதிசயம்—நான் விசாரித்து தெரிந்த வரையில் — பெரிய க்ஷேத்திரங்களெல்லாம் — கோவில் அமைந்த பிறகுதான், திருவிழாக் கொண்டாடி சாமி வீதி உலாவர ஏதுவாக ஊரை அமைத்திருக்கிறார்கள்.

அங்கே அப்படி அல்ல. முதலில் அந்தக் கிராமத்தை உற்பத்தி செய்தார்களே, சாமி வீதி உலா செய்ய எப்படி இருக்க வேண்டுமோ —அப்படி அமைத்திருக்கிறார்கள். அதிலும் அது ஒரு குக்கிராமம்; அதை ஆழ்ந்து யோசித்தால் பெரிய அதிசயம் என்றுதான் சொல்ல வேண்டும் என்று நான் சொன்னேன். சன்னிதானம் அவர்கள் வெகு நேரம் மௌனமாக இருந்துவிட்டு—அப்படியா அமைந்திருக்கிறது: அந்த ஆறுமுருகன் வெகுகாலத்திற்கு முன்பே அங்கு எழுந்தருளத் திட்டமிட்டிருக்கிறார். அதனால்தான் அப்பொழுதே இப்படி அமைத்திருக்கிறார் என்றார்.

சன்னிதானத்திற்கு உங்கள் கோவிலின் மேல் அதிகப் பற்றுதல் ஏற்பட்டு விட்டது; நம்மால் என்ன முடியும்? செய்யு வேண்டியவன் செய்கிறான் நடக்கட்டும்: இப்போது

மாலைப் பொழுதாகி விட்டது; இரவு மடத்தில் சாப்பிட்டு தங்குங்கள். காலையில் போய் பார்ப்போமென்று காசிநாத தம்பிரான் சொன்னார்.

இருவரும் இரவு மடத்தில் தங்கியிருந்து காலையில் எழுந்து காலைக் கடன்களை முடித்து உணவருந்தியபின்— சாமி அவர்களைப் பார்த்தார்கள். அவர் ஓர் தட்டைக் கொடுத்து வெற்றிலை பாக்கு எலுமிச்சம்பழம் கற்கண்டு இவைகளை வாங்கிக் கொண்டு மடத்திற்கு வாருங்கள் என்று சொன்னார்.

இருவரும் சாமான்களை வாங்கித் தட்டில் வைத்துக் கொண்டு மடத்திற்குப் போய் சன்னிதானத்தின் முன் தட்டை வைத்து வீழ்ந்து வணங்கினார்கள்.

இருவரையும் ஆசிர்வதித்து விபூதி கொடுத்து அமரச் சொன்னார் சன்னிதானம். இருவரும் எழுந்து நின்று, "நாங்கள் நம் மடத்தைச் சேர்ந்த அம்பலவாணனேந்தல் தங்களைப் பார்க்க வந்திருக்கிறோம்" என்றார் மருதமுத்து உடையார்.

"அமருங்கள்" என்றும் சொல்லி தம்பிரானை பார்த்து நாம் அன்று பேசினோமே அந்த ஊரா? என்றார்; ஆமாம் அவர்கள்தான். கோவிலுக்கு உற்சவமூர்த்தி விக்கிரகம் செய்ய ஆதீனத்திடம் பொருள் பெற்றுப் போக வந்திருக் கிறார்கள்" என்றார் தம்பிரான்.

அப்படியா! செய்வோம்; நீங்கள் இங்கு எப்போது வந்தீர்கள் என்றார். நாங்கள் நேற்று மாலை இங்கு வந்து சேர்ந்தோம்; மடத்திற்குப் போய்ச் சாமி அவர்களைப் பார்த்தோம்.

இரவில் போய் ஆதீனத்தைப் பார்க்கவேண்டாம்; காலையில் பார்ப்போம்; இரவு மடத்தில் சாப்பிட்டுத் தங்குங்கள் என்றார்கள். அதன்படி மடத்தில் தங்கி இருந்தோம் என்றார்கள்.

உங்கள் கோவிலைப் பற்றிய முழுவிபரமும் சாமி அவர்கள் சொன்னார்; உங்கள் கிராமத்தில் எத்தனை வீடுகள் இருக்கின்றன? என்றார். மருதமுத்து உடையார் "அங்கு? 16 வீடுகள்" என்றார்; சரி என்றும் 16 ஆக விளங்கட்டும். எல்லோரும் உங்கள் வகுப்பினர்கள்தானா என்றார். ஆமாம்; எல்லோரும் எங்கள் வகுப்பினர்தான்; அப்படியானால் இந்த 16 குடும்பத்தாருந்தான் இந்தக் கோவிலை வைத்துப் பராமறிக்கிறீர்களா? என்றார்; ஆமாம் என்றனர்.

அப்படியா ரொம்ப சந்தோசம். மூலவிக்கிரகம்கூட நம் களஞ்சியத்தில் இருந்ததைக் கொடுத்து அங்கு ஸ்தாபிதம் செய்ததாகச் சொன்னார். இப்போது அங்கிருந்து வந்த வேலை வைத்துத்தான் திருவிழா செய்கிறீர்களோ என்றார். ஆமாம் என்றாரீகள்!

திருவிழாவிற்கு சாமி தூக்கிவர வீதிகள் தோதாக இருக்கிறதா என்றார்.

தங்கள் ஆவுடையார் கோவிலைப் போல சதுரப்பட நாலு வீதி, வீதியின் மேல்புறம் கோவில், கோவிலின் பக்கத்தில் பெரிய குளம்; இவைகளெல்லாம் அமைப்பாக இருக்கிறது; ஆவுடையார் கோவில் ஆத்மனாதசாமி ஆலயம் தெற்கு முகம்; இங்கே கிழக்கு முகம்; இதுதான் வித்தியாசம் என்றார் சுப்பையா உடையார்.

அப்படியா! அது ஒரு புண்ணிய சேத்திரமாக விளங்கப் போகிறது. நீங்களெல்லாம் புண்ணியம் செய்து பிறந் திருக்கிறீர்கள்; அதனால்தான் அந்த ஊரில் பிறந்து தினம் அந்த பகவானுக்குத் தொண்டு செய்யும் வாய்ப்புக் கிட்டி இருக்கிறது.

பெரியவர்கள் சொல்லுவார்கள்—ஆரூரில் பிறக்க, அருணையை நினைக்க, தில்லையைக் காண காசியில் இறக்க முக்தி என்று.

நான் நினைக்கிறேன். அம்பலவாணனேந்தலில் பிறந்தாலே அந்தப் பலன் கிடைக்கும் என்று; அங்கு பிறந்தால் அந்த முருகக் கடவுளுக்குத் தினம் தொண்டு செய்யலாம்.

வேறு இடங்களில் பிறந்தால் ஒரு நாள் போய் அபிஷேக ஆராதனை செய்து தரிசனம் செய்து விட்டு உடன் வந்து விடுவோம்; ஒரு மாதம் இரவு பகலாக பக்தியோடு தரிசனம் செய்வது—ஒரு நாள் தொண்டுக்கு ஈடாகாது? என்கிறார்கள்.

இப்போது என்னிடம் வந்திருக்கிறீர்கள்; உங்கள் ஊரில் இருந்து எவ்வளவு தொலைவு நடந்து வந்து ரயில் ஏறினீர்கள் என்றார்.

சுப்பையா உடையார் எங்கள் ஊரிலிருந்து தஞ்சாவூர் வரை நடந்து வந்து தஞ்சாவூரில் ரயில் ஏறினோம். இங்கு கும்பகோணத்தில் இருந்து நடந்து வந்தோம் என்றார்கள்.

ஆதீனம் அவர்கள் தம்பிரானைப் பார்த்து அந்தப் பக்கம் எத்தனை காததூரம்? எத்தனை காதம்? என்றார்.

தம்பிரான் அவர்கள் அந்தப் பக்கம் தஞ்சாவூர் வரை சுமார் ஒன்பது காதமிருக்கும்; இங்கு கும்பகோணத்திலிருந்து இரண்டரை காதம் (ஒரு காதம் = 10 மைல்)

சன்னிதானம் அவர்கள், பார்த்தீர்களா எத்தனை காததூரம்? இரவு பகலாக நடந்து என்னை வந்து பார்க்கிறீர்களா? ஏன் நான் ஒரு ஆதீனகர்த்தா. என்னிடம் வந்தால் அதிகப் பொருள் பெறலாம் என்பதற்காகத்தானே உங்களின் உடம்பை வருத்தி நடந்து, வேளா வேளைக்குச் சரியாக சாப்பிடாமல் உங்கள் சிரமத்தைக் கொஞ்சமும் பொருட்படுத்தாமல் வந்திருக்கிறீர்கள் என்றார்.

மருதமுத்து உடையார் ''ஆமாம் சுவாமி! அதோடு உங்களைப் போன்ற தன்னலமற்று தெய்வத் தொண்டு செய்யும் நல்ல உள்ளம் படைத்தவர்கள் கையால் பொருள்

பெற்று இந்தக் காரியத்தைச் செய்தால் அந்தக் கோவில் மேலும் பெருகி அந்தச் சிலையின் மூர்த்தி தரமும் குறையாமல் இருக்கும் என்பது எங்களுடைய நம்பிக்கை'' என்றார்.

நீங்கள் போய் மடத்தில் சாப்பிட்டு ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள். நெடுந்தூரம் நடந்து வந்திருக்கிறீர்கள். இரண்டு தினங்கள் சென்று ஊருக்குப் போகலாம் என்று விடை கொடுத்து தம்பிரானும் தானும் மதியம் போஜனத் திற்குப் புறப்பட்டார்கள்.

மருதமுத்து உடையாரும், சுப்பையா உடையாரும் மடத்தில் சாப்பிட்டு ஓய்வெடுத்துக் கொண்டார்கள். மறுநாள் பக்கத்தில் உள்ள பெரிய கோவில்களுக்குப் போய் சாமி தரிசனம் செய்து வந்தார்கள்.

மூன்றாவது நாள் மாலையில் ஆதீனம் அவர்கள் இருவரையும் அழைத்து நீங்கள் எப்போது ஊருக்குப் போகிறீர்கள் என்றார்.

இருவரும் தாங்கள் எப்போது விடை கொடுக்கிறீர் களோ அப்போது புறப்படுகிறோம் என்றார்கள்.

ஆதீனகர்த்தா ஸ்ரீ பண்டாரச் சன்னதி அவர்கள் இருவரையும் அருகில் அழைத்து பதினைந்து பவுன் தங்கமும் இரண்டு சேர் வெள்ளியும் இருவர் கையிலும் கொடுத்தார்.

இருவரும் இடுப்பில் துண்டைக் கட்டிக் கொண்டு ஆதீனம் அவர்களை வணங்கிப் பெற்றுக் கொண்டார்கள். இருவரையும் அமரச் சொன்னார்.

நீங்கள் இதுவரையிலும் வெளி இடங்களுக்குப் போய் வசூல் செய்ததில் எவ்வளவு பணம் சேர்ந்திருக்கிறது என்றார்.

நாங்கள் இதுவரையிலும் பல கிராமங்களுக்குப் போய் வசூல் செய்து சேர்த்து மொத்தம் எண்பத்து ஏழு ரூபாய் இருக்கிறது என்றார் மருதமுத்து உடையார்.

சரி; தங்கம் ஒரு பவுன் ஐந்தேகால் ரூபாயும் வெள்ளி ஒரு சேர் ஏழு ரூபாயாக இருக்கிறது. உங்களிடம் உள்ள ரூபாய்க்கு பன்னிரண்டு பவுன் தங்கமும் மூன்று சேர் வெள்ளியும் வாங்கி அதோடு இதையும் சேர்த்தால் போதும். நீங்கள் ஊருக்குப் போய் ஸ்தபதியாரிடம் சொல்லி விக்கிரக வேலையை முடியுங்கள்.

ஆனித் திருவிழாவிற்குத் தம்பிரான் அங்கு வருகிறார். அப்போது அவரை வந்து பார்க்கச் சொல்லுகிறேன். மேலும் அந்தக் கோவிலுக்கு ஏதேனும் எங்களிடம் உதவி தேவைப்பட்டால் என்றும் நாங்கள் செய்யத் தயாராக இருக்கிறோம். உங்கள் கோவில் மேலும் வளர வேண்டு மென்று நான் இறைவனைப் பிரார்த்திக்கிறேன்.

நீங்கள் இரவு மடத்தில் சாப்பிட்டு தங்கி இருந்து அதிகாலையில் புறப்படுங்கள். அதிகாலை கோழி கூவும் நேரத்திற்குப் புறப்பட்டால்தான் உங்கள் பயணந்திற்கு ஏதுவாக இருக்கும். அப்போது எங்களைக் கண்டு பயணம் சொல்ல லேண்டுமென்று நினைக்க வேண்டாம் என்று சன்னிதானம் அவர்கள் சொன்னார். தம்பிரானும் அது தான் சரி என்று ஒப்புதல் கொடுத்தார்.

அதன்படி மருதமுத்து உடையாரும், சுப்பையா உடையாரும் எழுந்து இருவருக்கும் வணக்கம் செலுத்தி விடை பெற்றுக் கொண்டு மடத்திற்கு வந்து இரவு சாப்பிட்டுத் தங்கியிருந்து அதிகாலையில் புறப்பட்டு ஊர் வந்து சேர்ந்தார்கள்.

அவர்கள் ஊருக்கு வந்தவுடன் ஊர்ப் பெரியவர்கள் கோவிலுக்கு வந்து இருவரையும் வரவேற்று நீங்கள் போன காரியம் எப்படி என்று விசாரித்தார்கள்.

சுப்பையா உடையார் தாங்கள் போய்ச் சன்னி தானத்தைப் பார்த்ததும் அவர்கள் கோவிலைப் பற்றியும் ஊரைப் பற்றியும், ஊரின் மக்களைப் பற்றியும் சொல்லியவைகளை விபரமாக சொல்லி அவர்கள் கொடுத்த பொருளையும் சொன்னார்.

எல்லோரும் சந்தோசப்பட்டார்கள்: முத்துச்சாமி உடையார், என்னப்பா மேன்மக்கள்,மே மன்மக்களே என்று சொல்லியது பொய்யாகுமா? தெய்வக் காரியங்களைப் பற்றி அதில் ஈடுபாடு உடையவர்களுக்குத்தான் தெரியும். அதனால்தான் காதால் கேட்டதைக் கொண்டு இவ்வளவு விபரம் சொல்லி இருக்கிறார். மேலும் தேவையான உதவியை செய்யத் தயாராக இருக்கிறோம் என்றால் நமக்கு எவ்வளவோ தைரியம். ஏனென்றால் நாம் அவர்கள் கிராமத்தில் இந்தக் கோவிலை வைத்து நடத்துகிறோம். இதைப்போல் இன்னும் எத்தனையோ காரியங்களுக்கு அவர்கள் உதவி தேவைப்படும். ஆகையால் தம்பிரானும், சன்னிதானமும் நம் கோவில் பேரில் பற்றுதலாக இருப்பது நமக்கு எவ்வளவோ நல்லது என்றார் முத்துச்சாமி உடையார்.

ஸ்தபதியாரை அழைத்து, ''ஐயா, எங்களால் முடிந்த அளவு உலோகப் பொருள்கள் சேர்த்துவிட்டோம். உங்கள் வேலை எப்படி இருக்கிறது என்று மருதமுத்து உடையார் கேட்டார். ஸ்தபதியார், என் வேலையும் முடிந்து விட்டது. இன்னும் நாலு தினத்திற்குமேல் எப்போது வேண்டு மானாலும் வார்க்கலாம்'' என்றார்.

அப்படியானால் அதற்கு நாள் பார்க்க வேண்டுமோ என்றார், அவசியம் பார்த்துத்தான் செய்ய வேண்டும். ஆண்டவனை உருவாக்கி நாமெல்லாம் கண்ணால் பார்க்கப் போகிறோம். அதற்கு மிகவும் உயர்வான நாளாகப் பார்க்க வேண்டும் என்றார்.

நீங்களே பார்த்து முடிவு செய்யுங்கள் என்றார். நானே பார்த்துச் செய்யலாம். இருந்தாலும் உங்கள் கோவில் காரியங்களுக்கெல்லாம் கணபதி குருக்கள், நாள் பார்த்துச் சொல்லுவது, அதன்படி செய்வது என்பது ஒரு பழக்கமாக இருக்கிறது. அதை மாற்ற வேண்டாம். அது ஒரு நல்ல பழக்கம். அவர் உங்களுக்கு ராசிக்காரராகத் தெரிகிறது.

அதை மாற்ற வேண்டாம்—அவரிடமே போய் நாள் வைத்துக் கொண்டு வாருங்கள் என்றார் ஷண்முக ஸ்தபதியார்.

அதைக் கேட்ட எல்லோரும் "ஐயா சொல்லுவது சரிதான். அவர் நம் கோவிலுக்கு ராசிக்காரர் என்பது உண்மை. அவரிடமே போய் நாள் வைத்துக் கொண்டு வாருங்கள்" என்றார் ராமசாமி உடையார்.

மறுநாள் காலையில் ஐவரும் கோவிலுக்கு வந்து சாமி தரிசனம் செய்து புறப்பட்டார்கள். ஆவுடையார் கோவில் போய் கணபதி குருக்களிடம் விபரத்தைச் சொன்னார்கள்.

குருக்கள் சந்தோசப்பட்டு நீங்கள் திருவாவடுதுறை போனதாகக் கேள்விப்பட்டேன் என்றார் மருதமுத்து உடையார். ஆம் சுவாமி என்று அங்கு போனதையும் திரு சன்னிதானம் அவர் சொன்னவைகளையும் விபரமாக சொன்னார்.

குருக்கள் 'அப்படியா! உங்கள் முருகன் சாமானியப் பட்டவன் அல்ல. பிடித்தாலும் புளியங்கொம்பைப் பிடி என்பார்கள்.

அதைப்போல ஒரு பெரிய ஆதீனகர்த்தாவையே உங்கள் பக்கம் திருப்பிவிட்டான். உங்களைக் காப்பதற் காகவே வலிய வந்தவனல்லவா? யார் யாரைத் தூண்டி னால் என்னென்ன காரியங்கள் பின்னால் நடக்கும் என்பதில் கைதேர்ந்தவன் உங்கள் முருகன்.

எதையும் செய்ய வல்லமை உடையவர்களை நமது ஆளாக மாற்றிவிட்டால் காரியங்கள் சுலபமாக நடக்கும். அதைச் செய்திருக்கிறேன். இது உங்களுக்கும் பெரிய நற்பயனை அளிக்கும்.

முன்னால் காசிநாத தம்பிரான் களஞ்சியத்தில் இருந்த விக்கிரகத்தை உங்களுக்குக் கொடுத்து, தானே அங்கு வந்து அதைப் பிரதிஷ்டை செய்துவிட்டு வந்த பிறகு அவருக்கு ஓர் பயம் தோன்றி என்னை அழைத்து என்ன ஐயா, முன் யோசனை இல்லாமல் ஒரு வேலையைச் செய்து விட்டோம் என்றார்.

என்ன என்று நான் கேட்டேன்; அவர் சொன்னார்: சன்னிதானத்திடம் அனுமதி பெறாமல் களஞ்சியத்தில் இருந்து சிலையை அம்பலவாணனேந்தலுக்குக் கொடுத்து அங்கு அதைப் பிரதிஷ்டை செய்து விட்டோம். இது அவருக்குத் தெரிந்தால் என் அனுமதி இல்லாமல் எப்படி சிலையை இன்னொருவருக்குக் கொடுத்தாய் ஆவுடையார் கோவில் தேவஸ்தானம் உன்னுடைய சொந்த சொத்தா என்று கேட்டால் என்னாவது என்றார்.

அதற்கு "நீங்கள் ஒரு பெரிய குடும்பத்தில் பிறந்து நல்ல முறையில் தமிழைப் பயின்று தன்னுடைய சிறுவயதில் தாய் தந்தையர் மரணமானதால் விவாகம் செய்து கொள்ளாமல், சன்னியாசம் பெற்று 26 வது வயது முதல் மடத்தில் சேர்ந்து பணியாளாக வேலை பார்த்து 40வது வயதில் தம்பிரானாக பதவி ஏற்று 22 ஆண்டுகள் தம்பிரானாகவும் பணியாற்றி விட்டீர்கள்.

உங்கள் படிப்பு, சன்னியாசம், அனுபவம்—இவைகளுக்கு சம்பந்தமில்லாமல் உங்கள் மனம் இருக்கிறது. இப்போது பார்த்தால் நீங்கள் உங்களுடைய மனதை அடக்கித் தன் வசப்படுத்தவில்லை என்பது புலனாகிறது. மனம் இன்னும் அதன் போக்கில்தான் போகிறது என்று சொல்லி நான் பேச்சை நிறுத்தினேன்.

நாம் என்ன சொல்லுவது, என்ன இருந்தாலும் அவரிடம் பணிபுரியும் ஏவல் ஆள்தானே, அவருடைய கோபத்திற்கு ஆளாகிவிட்டோமே என்று இரண்டு தினங்

களாக என் மனம் ரொம்ப குழப்பமடைகிறது. அதைப் பற்றி நீங்களும் அப்போது ஒன்றும் சொல்லவில்லை; சரி என்று என்னோடு ஒத்துழைத்தீர்கள் என்றார்.

நான் பார்த்தேன். இவர் மிகப் பயந்து மனதைக் குழப்பிக் கொள்கிறார்—இவர் சொல்லுவது ஒரு வகையில் சரிதான். இருந்தாலும் காரியம் நடந்து விட்டது. அதற்கு தகுந்த முறையில் இவருக்கு பதிலும் தைரியமும் சொல்ல வேண்டும்;

என்று யோசித்து உங்களுக்கு வயது என்ன என்றேன் 62 நடக்கிறது என்றார்—நீங்கள் எத்தனை வயதில் தம்பிரானாக பொறுப்பு ஏற்றீர்கள் என்றேன்; 40 வயதில் என்றார்.

அவர் திகைத்துப் போய் என்ன இப்படிச் சொல்லு கிறீர்கள் என்றார்.

நான் ஆரம்பித்தேன். பிறகு எப்படிச் சொல்லுவது. உங்கள் பள்ளிப் பருவத்திற்குப் பிறகு தெய்வ காரியங் களில் ஈடுபடுவதும் செய்வதுமாக இருக்கிறீர்கள். இருந்தும் தெய்வத்தின் சக்தியைந் பற்றி இன்னும் சரியாகப் புரிந்து கொள்ளவில்லையே. உலகத்தில் நடக்கும் நல்லது, கெட்டது, தர்மம், அதர்மம், உற்பத்தி, மறைவு என்று சொல்லும் எல்லாவற்றையும் நடத்துபவன் அந்த இறைவன்தானே! நம்மால் என்ன முடியும்? நம்முடைய பகுத்தறிவைக் கொண்டு தீயவற்றை ஒதுக்கி நல்லவற்றைச் செய்யவேண்டும்.

நாம் செய்த காரியம் நல்லதா கெட்டதா? மிக நல்லது. எப்படி? நமது ஆதீன கர்த்தா பெரும் முயற்சியோடும் மன ஆசையோடும் செய்த அந்த முருகப் பெருமானின் சிலை களஞ்சியத்தில் குப்புறக் கிடந்ததை-

அருள் வழங்கும் ஓர் உன்னதமான ஆலயத்தில் பிரதிஷ்டை செய்து தினம், பூசைக்கும், பலர் வணக்கத் திற்கும் உரியதாக நியமித்தது குற்றமா? அப்படிச்

செய்தது குற்றம் என்று நமக்கொருவர் தண்டனை கொடுத்தால்-அதை ஏற்க இந்த மனம் ஏன் தயங்குகிறது? குழம்புகிறது. அதனால்தான் சொன்னேன், நீங்கள் மனதைத் தன் வசப்படுத்தவில்லை என்று.

"எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவம் என்பது இழுக்கு"

என்று இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே வள்ளுவப் பெருந்தகை கூறி இருக்கிறார். அதற்கு என்ன அர்த்தம் என்று சொல்லி அவர் முகத்தைக் கூர்ந்து பார்த்தேன்.

அவர் மனதில் இருந்த குழப்பம் மறைந்து பெரும் தைரியமும்-சந்தோசக் களையும் தோன்றின. நான் சற்று பேசாமல் இருந்தேன்.

காசினாத தம்பிரானும் கொஞ்ச நேரம் மௌனமாக இருந்து பிறகு சொன்னார்:

"ஐயா முன்னால் சொன்னார்களே, சுருதியுக்தி அனுபவம் என்று, அது முற்றிலும் உண்மை—நீங்கள் சொல்லியபடி எல்லாம் நான் தெரிந்திருந்தாலும் என்னைவிட தாங்கள் எவ்வளவோ வயதில் முதியவர்.

உங்கள் அனுபவத்தாலும் கூர்மையான அறிவுத் திறனாலும், நீங்கள் இப்போது சொல்லியவற்றைக் கேட்டதும், என்னுடைய மனக்குழப்பம் எங்கோ பறந்து விட்டது; நாம் செய்தது நற்காரியம்; அதற்காக எது வந்தாலும் ஏற்கலாம் என்ற திட நம்பிக்கை வந்து விட்டது. இப்போது நீங்கள் அருமையான விளக்கம் சொல்லித் தெளிவு படுத்தாவிட்டால் அதிக குழப்ப மடைந்து என்ன செய்வது என்று புரியாமல் தவித்துப் போயிருப்பேன்" என்றார்.

நான் மேலும் "குழப்பம் தீர்ந்ததோடு இருந்துவிடக் கூடாது—நீங்கள் சொல்லியதைப் போல் ஒருநிலை வராமல்

தடுக்கவேண்டும். வெள்ளம் வருமுன் அணை போட வேண்டும் என்பார்கள் அல்லவா? அதைப் போல இதற்கு நான் ஒரு யோசனை சொல்லுகிறேன். அதன்படி செய்யுங்கள்;

இப்போது நீங்கள் திருவாவடுதுறைக்குப் போகப் போகிறீர்கள். அப்போது சுமார் ஒரு மாத காலமாவது தங்க நேரும். அப்போது சன்னிதானம் சந்தோசமாக உங்களோடு பரஸ்பரம் கலந்துரையாட ஓர் சூழ்நிலையை உருவாக்குங்கள். சூழ்நிலை தானே அமைவதும் உண்டு. சிலசமயம் உன்னுடைய புத்தி கூர்மையால் சூழ்நிலையை உருவாக்கி காரியத்தை சாதிப்பதும் உண்டு. அப்படி இல்லாமல், அவருடன் நெருங்கி பல காரியங்களைப் பேச ஆரம்பித்தாலே அவரும் மனம் விட்டுப் பேச ஆரம்பிப்பார். அப்படி அவர் பேசும் போது, அம்பலவாணனேந்தலில் முருகன் கோவில் உற்பத்தியாகி இருப்பதை ஆரம்பம் முதல் விரிவாக எடுத்துச் சொல்லுங்கள்.

இப்படியும் உண்டா என்று ஆச்சரியப்படுவார்; அப்போது நீங்கள் அங்கு கிராமம் பார்க்கப் போயிருந்ததையும் அவர்கள் சொல்லியதையும் சொல்லி-அப்படியானால், நம் களஞ்சியத்தில் ஓர் விக்கிரகம் சும்மா கிடக்கிறதே, அதைக் கொடுத்தால், பூஜை நெய்வேத்தியத்தோடு விளங்குமே—கோவிலும் நம் கிராமத்தில் தானே இருக்கிறது என்று அதைக் கொடுத்து அங்கே பிரதிஷ்டை செய்து வைத்ததாகச் சொல்லுங்கள். அவர் சந்தோஷப்படுவாரே தவிர ஏன் அப்படிச் செய்தாய் என்று கேட்கமாட்டார். அவர் நல்ல குணமும் எண்ணமும் உடையவர் என்றேன்.

தம்பிரான்—நீங்கள் சொல்லுவது சரியான யோசனை; நாமே முந்தி சொல்லி விட்டால் குற்றத்தின் அளவு குறைந்து விடும்; அப்படியே செய்கிறேன் என்றார்.

பிறகு அவர் திருவாவடுதுறைக்குப் போய் இரண்டு மாதம் அங்கு தங்கி இருந்து இங்கு வந்தார்.

மறுநாள் அவரைப் பார்க்கப் போனேன். என்னைக் கண்டதும் சிரித்த முகத்தோடு வரவேற்று அமரச் சொன்னார்; அமர்ந்தேன்.

ஐயா! நல்ல சமயத்தில் ஆண்டவன் போல் வந்து என் மனக்குழப்பத்தைப் போக்கி இனிமேல் எப்படி நடக்க வேண்டும்என்று அறிவுரைபுகட்டி எனக்கு பெரும் பாராட்டு கிடைக்க வழியும் சொன்னீர்கள்; அன்று முதல் தங்களை என்னுடைய குருவாக மனதில் மதித்து இருக்கிறேன்.

நான் சிறுபிள்ளையாகப் பள்ளியில் படிக்கும் போது கொண்டு வந்தால் தந்தை—கொண்டு வந்தாலும் வரா விட்டாலும் தாய்; சீர் கொடுத்தால் சகோதரி, கொலையும் செய்வாள் பத்தினி, உயிர் காப்பான் தோழன்—என்ற கதையைச் சொல்லி உலகில் யாவரும் தன்னைவிட அறிவாளி ஒருவனை உற்ற நண்பனாக வைத்துக்கொள்ள வேண்டும், தனக்குத் தெரியாததையும் தனக்கு ஏதேனும் சிக்கல்—குழப்பம் ஏற்படும் போதும் நண்பனிடம் சொன்னால் அதற்கு வழியும் சொல்லி உதவியும் செய்வான் என்று 45 ஆண்டுகளுக்கு முன்னால்—என் தந்தையார் சொன்னது முற்றிலும் உண்மை என்பதை நான் நேரில் அனுபவித்த பிறகுதான் தெரிகிறது.

அன்று தங்களை நான் அழைக்காமல் இருந்திருந்தால் என் நிலைமை என்ன ஆகி இருக்கும் என்பது எனக்கே தெரியாது—யாரால் நமக்குப் பெரும் இடைஞ்சல் வருமென்று கலங்கிக் குழம்பினேனோ அவர் வாயால் பல ஆசிகளையும் அறிவுரைகளையும் பாராட்டுக்களையும் பெற்று விட்டேன் உங்கள் தயவால் என்றார்.

நான் சொன்னேன்—முன்னமே உங்களுக்குச் சொல்லி இருக்கிறேன்; தெய்வசக்திகளை நீங்கள் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை என்று.

அவர் சற்று அதிர்ச்சியடைந்து என்ன அப்படிச் சொல்லுகிறீர்கள் என்றார்.

உங்கள் தந்தையார் சொன்னது முற்றிலும் உண்மை, ஆனால் இப்போது நடந்தது என் தயவால் என்று சொன்னீர்களே அது தவறு. என்னால் எதுவும் நடக்க வில்லை;

பழனியிலிருந்து அம்பலவாணனேந்தலுக்கு வந்திருக்கிறானே அந்த முருகன், அவன் தனக்கு முழுமனதோடு தொண்டு செய்த ஒருவன் மனக் குழப்பம் அடைகிறானே, அவன் குழப்பத்தைப் போக்கி—அவனுக்கு புகழும் பாராட்டும் வாங்கிக் கொடுக்க வேண்டுமென்று நினைத்து என்னுள் புகுந்து அதைச் செய்தான்.

அவன் ஒருவருக்கு உதவி செய்ய நினைத்தால் இன்னொருவர் மனதில் புகுந்துதான் செய்வது வழக்கம். அதை என் மூலமாக உங்களுக்குச் செய்தான். அதுதான் உண்மை: நீங்கள் நான் செய்ததாக நினைக்கிறீர்கள் என்றேன்.

அவர் நெடுநேரம் மௌனமாக இருந்துவிட்டுப் பிறகு சொன்னார். உங்களுக்கு ஓய்வு கிடைக்கும் போதெல்லாம் மடத்திற்கு வரவேண்டும். எனக்கு தெரியாததை எல்லாம் உங்களிடம் பேசி தெரிந்து கொள்ள ஆசைப்படுகிறேன் என்றார். அதற்கென்ன, அப்படியே செய்கிறேன் என்றேன்.

ஏன் இவ்வளவு நேரம் பேசுகிறோம் என்றால் ஒரு பெரிய ஆதீனகர்த்தா உங்கள் கோவிலுக்கு எங்களிடம் என்ன உதவி தேவைப்பட்டாலும் எந்த நேரத்திலும் நாங்கள் செய்ய தயாராக இருக்கிவோம் என்றால் அது சாமான்ய விஷயமல்ல.

ஒரு ஏழைக்கு பெரும் செல்வர் ஒருவர் அன்போடு எப்போது வேண்டுமானாலும் வா உனக்கு உதவி செய்யத் தயாராக இருக்கிறேன் என்றால் அதைவிட அவனுக்கு வேறு என்ன வேண்டும்.

நீங்களோ உழவுத் தொழில் செய்து பிழைக்கும் குடியானவர்கள். நீங்கள் ஓர் சிவஸ்தலத்தை வைத்து பராமறிப்பது சின்னக் காரியமல்ல.

'சில சமயம் ஏதாவது ஒரு சிரமம் வந்தால் உதவிசெய்ய ஒரு பொருத்தமான ஆள் இருக்கிறது, உங்களுக்கும் பெரிய பலம்—இதை எல்லாம் யார் செய்கிறார். எதையும் செய்ய வல்லமை பொருந்தியவன் செய்கிறான்-அவன் இன்னும் அங்கு என்னென்ன செய்ய நினைத்திருக்கிறானோ யாருக்குத் தெரியும் என்று சொல்லி முடித்தார் கணபதி குருக்கள்.

அவர் மேலும்-சரி நீண்டநேரம் பேசிக் கொண்டே இருந்து விட்டோம். இப்போது விக்கிரகம் வார்க்க நாள் பார்க்க வேண்டும் என்றார். ஆம் சாமி என்றார் சுப்பையா உடையார்.

குருக்கள் பஞ்சாங்கத்தை நன்கு பார்த்து-வைகாசி 21ல் ஓர் நாள் இருக்கிறது. அதை தாண்டினால் ஆவணி 11-ம்தேதி ஓர் உயர்வான நாள் இருக்கிறது. ஆனால் ஆவணி வரையிலும் ஸ்தபதியார் காத்திருக்க முடியாது; அதனால்"

வைகாசி21ம் நாள் வெள்ளிக்கிழமை உதயாதிக்கு மேல் ஆரம்பித்து,11.1—4இராகுகாலத்திற்குள் முடித்து விடுங்கள் என்று சிட்டை எழுதி மருதமுத்து உடையார் கையில் கொடுத்தார்.

அவரும் எழுந்து ஆண்டவனைப் பிரார்த்தனை செய்து சிட்டையைப் பெற்றுக்கொண்டார். பிறகு ஐயரிடம் விடை பெற்றுக் கொண்டு ஊர் வந்தார்கள்.

மறுநாள் காலையில் ஊர்ப் பெரியவர்களையும் ஸ்தபதியாரையும் அழைத்து-நாள் வைத்திருக்கும் சிட்டையைக் கொடுத்தார்கள்.

ஸ்தபதியார் 'சரி, இந்த முகூர்த்த நாளில் செய்து விடுவோமென்றார். அதற்குத் தேவையான சாமான்களைச் சிட்டையில் எழுதிக் கொடுங்கள் என்றார்கள். அதன்படி அன்று தேவையான சாமான்களுக்குச் சிட்டை எழுதிக் கொடுத்தார் ஸ்தபதியார்.

20-ம் தேதி மாலை - ஸ்தபதியாரை அழைத்து சிட்டைப்படி சாமான்களை சரிபார்த்து மேலும் நாங்கள் என்ன செய்ய வேண்டும் என்பதைச் சொல்லுங்கள் என்றார்கள்.

ஸ்தபதியார்-ஊரில் எல்லோரையும் அதிகாலையில் கோவிலுக்கு வரும்படி தகவல் சொல்லுங்கள்-கோவிலுக்கு உள்ள சாமான்களை இப்போதே கொடுத்து சர்க்கரைப் பொங்கல் நெய்வேத்தியம் போட்டு அதிகாலையில் சாமிக்கு நல்ல அபிஷேக ஆராதனை செய்து எல்லோரும் சாமி தரிசனம் செய்யவேண்டும்.

பிறகு உலையடியில் மஞ்சள் பிள்ளையார் வைத்து தேங்காய் பழம் படைத்து சாமி கும்பிட்டு குகையில் எல்லோரும் மஞ்சள் குங்குமம் பொட்டு வைத்து பிறகு உலையை ஆரம்பிக்க வேண்டியதுதான் என்றார்.

நாளைக்கு வார்த்தால் சிலையை எப்போது நாங்கள் பார்க்கலாம் என்றார் ராமசாமி உடையார்.

வார்த்தபிறகு ஒன்றும் சுணக்கமில்லை. நாளை மாலையில் மேல் பாகத்தைச் சுத்தம் செய்து அப்போதே பார்க்கலாம் என்றார் ஸ்தபதியார்.

சிங்காரவேலவரின் உருவத்தைப் பார்க்க வேண்டுமென்ற பேராவல் எல்லோர் மனதிலும் துடித்துக் கொண்டிருந்தது.

அதிகாலையில் ஆண் பெண் குழந்தைகள் அனைவரும் கோவிலுக்கு வந்தார்கள். சாமிக்கு விசேட அபிஷேக ஆராதனை நடந்தது. எல்லோரும் சாமி தரிசனம் செய்து

ஸ்தபதியார் ஆரம்பித்திருக்கும் உலையருகில் மஞ்சள் பிள்ளையார் வைத்து, தேங்காய் உடைத்து ஆராதனை செய்தார் ஸ்தபதியார்.

எல்லோரும் தரிசனம் செய்து அங்கிருந்த குகையில் மஞ்சள் குங்குமம் பொட்டு வைத்து அருகில் இருந்த உலோகத் துண்டுகளில் ஒன்றை எடுத்துக் குகையில் வைத்தார்கள். வயது முதிர்ந்த-பெரியவர்கள்-பெண்கள்-குழந்தைகள் எல்லோரும் முகூர்த்தம் செய்து முடிந்தவுடன் குகையை உலையில் ஏற்றி கையாட்களைக் கொண்டு உருக்கினார் ஸ்தபதியார்.

உருகிய பஞ்சலோகத்தைக் கருவில் பாய்ச்சி இராகு காலத்திற்கு முன் வேலை முடிந்ததில் எல்லோருக்கும் திருப்தி.

மதியம் உணவருந்திய பின் மாலையில் எம்பெருமான் சிங்காரவேலவரின் உருவத்தைப் பார்க்கப் போகிறோம் என்ற பேரவாவில் ஊர்மக்களும் பக்கத்து கிராமத்தில் உள்ள பொதுமக்களும் திரளாக வந்து கூடினார்கள்.

ஸ்தபதியார் கூட்டத்தைப் பார்த்த உடன் ஆண்டவன் மேல் இப்பகுதி மக்களுக்கு உள்ள ஆர்வத்தைத் தெளிவாகப் புரிந்து கொண்டார்.

மாலையில் அவர் வேலையை ஆரம்பித்து கருவின் மேல்பகுதியில்-தண்ணீரைத் தெளித்து மண்ணை அகற்றி சுத்தம் செய்தார். எல்லோரும் ஆவலோடு அருகாமையில் நெருங்கிப் பார்த்தார்கள்.

அங்கே ஒரு பெரும்அதிர்ச்சி—வார்க்கப்பட்ட சிலையில் ஒரு கை உலோகம் பாயாமல் இருப்பதைக் கண்ட ஸ்தபதியார் அப்படியே பிரமித்துப் போய் விட்டார்.

வந்திருந்த மக்களெல்லாம் இப்படி ஆகிவிட்டதே என்ன செய்வது என்று மன அதிர்ச்சி அடைந்து கண் கலங்கி நின்றார்கள்.

தலையை நிமிர்ந்து எல்லோர் முகங்களையும் பார்த்த ஸ்தபதியார் தன் மனதைத் தேற்றிக் கொண்டு தன் திறமையால் முகத்தில் சிரிப்பை ஏற்படுத்திச் சிரித்த முகத்தோடு ''ஏன் இப்படி எல்லோரும் கவலைப்பட்டுக்கண் கலங்கி நிற்கிறீர்கள்—வார்ப்பட வேலையில் இது சகஜம்; ஒவ்வொரு இடத்தில்—மூன்று நான்கு முறைகூடத் திருப்பித் திருப்பி வார்ப்பது வழக்கம்;

ஒரே தடவையில்—அமையவும் கூடாது; இப்படி இருந்தால்தான் எந்தெந்த இடங்களில் திருத்தம் செய்ய வேண்டும் என்று அதன்படி திருத்தமாகச் செய்யலாம்;

நீங்கள் யாரும் கவலைப்பட வேண்டாம். இன்னும் முப்பது நாளில் இதைவிட உன்னதமாக அமைத்துத் தருகிறேன்'' என்று சொல்லி எல்லோரையும் சந்தோசப் படுத்தி விட்டார் அவருடைய சொல் வன்மையால்.

இருந்த பெரியவர்களெல்லாம் ஆறுதல் அடைந்து; ''சரியய்யா! அடுத்து நாங்கள் என்ன செய்ய வேண்டு மெ''ன்றார் மருதமுத்து உடையார்.

ஸ்தபதியார் நீங்கள் ஒன்றும் கவலைப்பட வேண்டாம்; இந்தச் சிலையைக் கொண்டு போய்ப் பாதுகாப்பான வீட்டில் பத்திரமாக வையுங்கள். நான் கொஞ்சம் ஓய் வெடுத்துக் கொண்டு பிறகு என் வேலையை ஆரம்பிக் கிறேன், சீக்கிரம் மறுபடி செய்து முடிப்போம் என்றார்.

ராமசாமி உடையார் பகவானுடைய உருவச் சிலையை வீட்டில் வைக்கக் கூடாது. கோவிலிலே வைத்து இரவு கதவைப் பூட்டிவிட்டு நாம் காவலுக்கு அங்கே படுத்துக் கொள்வோம் என்றார்.

அதுதான் நல்ல வேலை. யோசனை முடித்த பிறகு கோவிலில்தானே வைக்கப் போகிறோம். ஆகையால் அப்படியே செய்வோமென்று சிலையை எடுத்துப் போய் கோவிலில் வைத்தார்கள்.

ஸ்தபதியார் தன்னுடைய திறமையால் எல்லோர் மனதையும் சமாதானப்படுத்தி விட்டார்; அவர் மனதைத் தேற்ற அவரால் முடியவில்லை—இரவு சாப்பிடாமலே படுத்தார். உறக்கம் வரவில்லை.

நாம் ஸ்தபதியாரிடம் தொழிலைக் கற்றுத் தனிமையில் சிலை வார்ப்பிக்க ஆரம்பித்து இது வரையிலும் எத்தனையோ விக்கிரகங்கள் வார்த்திருக்கிறோம்; அதில் குறை ஏற்பட்டதும் இல்லை. இரண்டாவது முறை அதைச் செய்ததுமில்லையே. இப்போது இப்படி நடத்திருக்கிறதே என்று பலவாறாய் சிந்தித்து பெரும் கவலைக்குள்ளானார். பாதி இரவுக்கு மேல் மூன்றாவது சாமத்தில் சற்று அயர்ந்தார்.

அப்போது ஓர் கனவு தோன்றியது—பெரிய கல்யாணப் பந்தலில் மணவறையில் ஒரு மாப்பிள்ளை இரு பக்கங்களிலும் இரண்டு பெண்களை வைத்து திருமணக் கோலத்துடன் இருப்பதாகவும் ஐயர் ஓமம் வளர்த்து மந்திரம் ஜெபித்து மாங்கல்யத்தை, மாப்பிள்ளை கையில் கொடுக்க அவர் இருவருக்கும் அணிவிக்கும் போது சபையில் இருந்தவர்கள் கைதட்ட, தூங்கியவர் தானும் கையைத் தட்டி விழித்துக் கொண்டார். என்ன இப்படி கனவு தட்டி இருக்கிறதே என்று பலவாறு யோசித்துக் கொண்டு இருந்தார்.

விக்கிரகத்தை எடுத்துப் போய்க் கோவிலில் வைத்து விட்டு எல்லோரும் இரவு உணவருந்தச் சென்றார்கள். மருதமுத்து உடையார் மட்டும் உணவுக்குப் போகாமல் கோவிலிலே இருந்தார். அவர் மனதைக்கவலை வாட்டியது. நாம் இவ்வளவு பாடுபட்டுச் செய்த காரியம் இப்படி ஆகி விட்டதே என்று பலவாறு யோசித்ததால் தூக்கம் வராமல் ஆண்டவனைப் பிரார்த்தனை செய்து கொண்டு இருந்து பிறகு அயர்ந்தார்.

முருகப்பெருமான் அவர் கனவில் வள்ளி தெய்வயானை சமேதராகத் தோன்றி, மருதமுத்து நாம் இவ்வளவு கஷ்டப் பட்டு செய்த வேலை முழுமை பெறாமல் போய் விட்டதே

என்று கவலைப்படுகிறாய் — உள்ளன்போடு எனக்குத் தொண்டு செய்பவர்களை நான் கைவிட மாட்டேன். அவர்களுக்கு வரும் இன்னலைப் போக்கி அருள் வழங்கவும் தவற மாட்டேன்.

நீங்கள் எல்லோரும் இல்லறத்தோடு குடும்பம் நடத்து பவர்கள். என்னைத் தனியே வைத்து வணங்க வேண்டாம். அம்பாளோடு சேர்த்து வணங்கத்தான் இதைச் செய்தேன். அம்பாளையும் சேர்த்துச் செய்யுங்கள்; நல்ல முறையில் அமையும் என்று சொல்லி மறைந்தார்.

இந்தக் கனவைக் கண்ட மருதமுத்து உடையார் விழித்து எழுந்து பகவான் இப்படி வள்ளி தெய்வயானை யோடு காட்சி கொடுத்து தன்னிடம் சொல்லியவற்றை நினைத்து ஆனந்தமடைந்து தூக்கமில்லாமல் முருகப் பெருமானைத் தியானம் செய்து கொண்டிருந்தார்.

அப்போது அங்கே படுத்திருந்த முத்துச்சாமி உடையார் விழித்து எழுந்தார்; அவர் "ஏன் மருதமுத்து தூக்கம் வரவில்லையா? இரவு பூராவும் இப்படியே இருந்தால் விக்கிரகம் சரியாகி விடுமோ? நம் கடமையைச் சரியாகத் தான் செய்தோம்; என்ன முறையோ இப்படி ஆகிவிட்டது; அதைத்தான் திருப்பி நல்ல முறையில் செய்துவிடுவோமாக. இரவு பூராவும் இப்படியே இருக்கிறாயே" என்றார்.

அதற்கு உள்ள விபரம் தெரிந்து விட்டது; எல்லோரை யும் எழுப்பு என்றார் மருதமுத்து உடையார்.

எல்லோரும் எழுந்து குளத்தில் முகம் கைகால்களைக் கழுவிக் கொண்டு வந்து கோவிலில் அமர்ந்தார்கள்.

அப்போது மருதமுத்து உடையார் தான் கண்ட கனவை விபரமாகச் சொன்னார்.

அதைக் கேட்ட அனைவரும், சரி அவர் சொல்லிய படியே செய்வோம் என்றார்கள்.

ஸ்தபதியார் தான் கண்ட கனவைப் பற்றி பலவாறு யோசித்து நாம் செய்த விக்கிரகம் இப்படி குறையாக நின்று விட்டதே என்று கவலையோடு படுத்திருந்தோம். இரு பெண்களை தனக்கு இரண்டு பக்கத்திலும் வைத்து திருமணம் நடப்பதாகக் கனவில் பார்த்தோம். நாம் செய்தது முருகப்பெருமான் சிலை. அவருக்குத்தான் வள்ளி தெய்வயானை என்று இரண்டு மனைவியர்கள். ஆகையால் இரண்டு அம்பாளோடு செய் என்பதுதான் அர்த்தம் என்று முடிவு செய்தார்; கோவிலுக்கு வந்தார்.

அங்கே பேசிக் கொண்டிருந்தவர்களில் —ராமசாமி உடையார் வாங்கய்யா உட்காருங்கள்— என்ன இந்நேரத்தில் எழுந்து கோவிலுக்கு வந்திருக்கிறீர்கள் என்றார்.

ஸ்தபதியார் — ஐயா! நேற்று நடந்த காரியத்தில் உங்களை எல்லாம் சமாதானப்படுத்தி அனுப்பிவிட்டேன்; என் மனதை ஆற்றமுடியவில்லை - ஏன் நான் இந்தத் தொழிலைச் செய்யஆரம்பித்தது முதல்இம்மாதிரி நடந்ததே இல்லை—எத்தனை முறை வேண்டுமானாலும் வார்க்கலாம் -அதைப்பற்றி நான் கவலைப்படவில்லை.

நாம் செய்ததில் இரண்டாவது முறை செய்த பழக்கம் இல்லையே, இதற்கு என்ன காரணம் என்று என் மனம் ரொம்பக் குழம்பி இரவு தூக்கமே இல்லாமல்-சற்று முன்னால்தான் அயர்ந்தேன். அப்போது தான் கண்ட கனவை சொல்லி இதற்கு ஒன்றும் அர்த்தம் புரியவில்லை. விழித்துக் கொண்டே இருந்தவன் கோவில் பக்கம் போவோம் என்று வந்தேன். இங்கு நீங்களும் தூங்காமல் பேசிக் கொண்டிருக்கிறீர்கள் என்றார் ஸ்திபதியார்.

என்ன ஐயா, உங்களுக்கே அதனுடைய அர்த்தம் புரிய வில்லை என்றால் எங்களுக்கு என்ன தெரியும் என்றார் முத்துச்சாமி உடையார்?

ஐயா உங்கள் பெருமானின் திருவிளையாடலை யாரால் கண்டு பிடிக்க முடியும்? என்றார் ஸ்தபதியார்,

ஐயா, நீங்கள் முழுமனதோடு செய்தீர்கள். அது சரியாக அமையவில்லை என்று கவலையுற்று இருக்கும் போது— கல்யாணக் காட்சியைக் காண்பித்திருப்பது – தனியே இல்லாமல்-அம்பாளோடு செய் என்பதுதானே அதனுடைய அர்த்தம் என்றார் மருதமுத்து உடையார்; அதுவும் சரிதானய்யா என்றார் ஸ்தபதியார்.

ஐயா, உங்களுக்குக் காண்பித்த அதே நேரத்தில் என் கனவிலும்-வள்ளி தெய்வயானையோடு அவருடைய மயில் வாகனத்தில் வந்து காட்சி கொடுத்தார்-நான் கைகூப்பித் தரிசனம் செய்தேன்-மருதமுத்து நடந்ததை நினைத்துக் கவலைப்படாதே. நீங்கள் இல்லறம் நடத்தும் குடும்பஸ்தர்கள். அதனால் . அம்பாளோடு செய்யுங்கள்-பூர்த்தியாகும் என்று சொல்லி மறைந்தார் என்று சொன்னார் மருதுமுத்து உடையார்,

ஸ்தபதியார்-கொஞ்ச நேரம் மௌனமாகச் சிந்தித்து– இந்த ஆண்டவனின் பெருமையை-யார்தான் கண்டுபிடிக்க முடியும்? இதை முன்னாலே சொன்னால் எல்லாம் செய்ய நம்மால் முடியாது என்று கலங்கி விடுவார்கள்-என்று ஆரம்பித்து செய்து விடுவோம் என்ற தைரியம் வந்த பிறகு அம்பாளையும் சேர்த்துச் செய்யுங்கள் என்கிறார்;

அதையும் நம்மிடம் சொல்லியதோடு இருந்தால் அவர்கள் களைப்பார்கள் என்று அங்கே முதலிலும்- நம்மிடம் சூசகமாக இரண்டாவதாகவும் சொல்லி இருக்கிறார்-நம்முடைய கவலை விட்டது-அவர்கள் என்ன சொல்லப் போகிறார்களோ என்று பயந்தோம்; இனிமேல் அவர்களே முயற்சி எடுப்பார்கள் என்று மனதிற்குள் முடிவு செய்து கொண்டு,

ஐயா, நீங்கள் பெரும்பாக்கியம் பெற்றவர்கள்; அந்த முருகப்பெருமான் உங்களுக்கு நேரில்-காட்சி கொடுத்து- அவருடைய திருவாயால்-மருதமுத்து என்று அழைத்து விபரம் சொன்னார் என்றால் இது யாருக்கு ஐயா கிடைக்கும்?

எத்தனையோ ஆண்டுகள் தவம் செய்த முனிவர்களைக் கூட நேரில் வந்து பேர் சொல்லி அழைத்ததாகத் தெரிய வில்லை.

ஆனால்-அவர் உங்களுக்கெல்லாம் அருள் வழங்கத் தான்-பழநியை விட்டு-வலியவந்து இங்கு தங்கி இருக்கிறார். முழுமனதோடு தொண்டு செய்பவர்களுக்கு மிக எளிதில் இங்கு அருள் வழங்குவார் என்பதற்கு இதுவே ஒரு எடுத்துக் காட்டு.

ஐயா-எனக்குத் திருமணக் காட்சியை காண்பித்தார்-அதுவும் உலக மக்களைப் போல, என்னிடம் ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லை. உங்களிடம்- நமக்கெல்லாம் புரியும் படி விபரமாகச் சொல்லி இருக்கிறார். ஆகையால் நாளை எல்லோருமாக இருந்து அதற்கான ஏற்பாட்டைச் செய் யுங்கள் என்றார் ஸ்தபதியார்.

பொழுது நன்றாகப் புலர்ந்து விட்டது. சரி இரவு எல்லோரையும் அழைத்துப் பேசுவோம் என்று சொல்லி வீடுகளுக்குப் போனார்கள்.

அன்று இரவு ஊரில் எல்லோரையும் அழைத்துக் கோவிலில் கூடி நேற்றைய தினம் விக்கிரகம் வார்த்ததில் ஏற்பட்ட குறையையும் இரவு—ஸ்தபதியார், மருதமுத்து உடையார் இவர்கள் இருவரும் கனவு கண்டு எல்லோரும் கோவிலில் பேசியதையும் விபரமாக ராமசாமி உடையார் சொன்னார்.

பிறகு எல்லோரும் கலந்து பேசினார்கள். அம்பா ளோடு சேர்த்துச் செய்வதில் யாருக்கும் ஆட்சேபணை இல்லை. இதற்குப் பொருள் சேர்க்கவே பல இடங் களுக்குப் போனோம். கடைசியில் ஆதீனம் அவர்கள் பெரும் பொறுப்பை ஏற்றுக் கொண்டதால் இது முடிந்தது.

இன்னும் இரண்டு விக்கிரகம் செய்வது என்றால் எப்படிப் பொருள் சேர்ப்பது என்பதுதான் தெரியவில்லை என்றார் சுப்பையா உடையார்.

ஐயர் பெரியவர்களே! தங்கம், வெள்ளி இவை இரண்டும் இப்போது கிடைத்திருப்பது போதும். பாக்கியுள்ள வெண்கலம், செம்பு, பித்தளை இவை மூன்றும் தயார் செய்யுங்கள். இதையே மூன்றிலும் நிரவி செய்து விடுவோம் என்றார் ஸ்தபதியார்.

ஐயா, ஒரு விக்கிரகத்திற்கு தயார் செய்தது மூன்றுக்கும் போதும் என்கிறீர்களே என்றார்.

ஐயா, நாம் சேர்த்திருந்தது அதிகம்: அது ஒரே விக்கிரமாக அமைந்திருந்தால் முழு தங்க விக்கிரகம் போல் ஜொலிக்கும். அப்படி அமையவில்லை. இப்போது மேலும் நம்மால் முடியாமைக்கு இதை வைத்தே செய்து விடுவோம். இருந்தால் எவ்வளவும் சேர்க்கலாம்; முழுத் தங்கத்திலே வேண்டுமானாலும் செய்யலாம். என்ன செய்வது? உங்களிடம் இல்லாத குறை. உங்களிடம் மனமிருக்கிறது; பொருள் இல்லை. பொருள் நிறைய இருக்கும்; அங்கே மனமிருக்காது. இது இரண்டையும் ஓரிடத்தில் வைப்பதில்லை ஆண்டவன். ஆகையால் இந்த மூன்று உலோகங்களையும் சேருங்கள். அதற்குள் நான் கருவை அமைக்கிறேன். அதற்கும் இரண்டு மாதங்கள் பிடிக்கும். அதற்குள் தேவையானதை உங்கள்கூட இருந்து சேர்த்து விடுவான், அம்பாளோடு செய்யுங்கள், எளிதில் முடியும் என்று ஐயாவிடமே சொல்லி இருக்கிறார். அப்படிச் சொன்னவர் சும்மாவா இருப்பார்? என்றார் ஸ்தபதியார்.

சரி, அப்படியே செய்வோம். எல்லா விபரங்களையும் தான் நீங்களே சொல்லிவிட்டீர்கள், நம்மால் என்ன நடக்கிறது, அவன் அபிப்பிராயப்படி நடக்கட்டும் என்றார் முத்துசாமி உடையார்.

மறு நாள் காலையில் மருதமுத்து உடையார், சுப்பையா உடையார், முத்துச்சாமி உடையார், வெள்ளச்சாமி உடையார், ராமசாமி உடையார் இவர்கள் ஐவரும்

கோவிலுக்கு வந்து ஸ்தபதியாரை அழைத்து அம்மன் விக்கிரகம் இரண்டிற்கும் எவ்வளவு உலோகப் பொருள் தேவை, அதற்கு என்ன ரூபாய் வரும் என்பதை ஒரு சிட்டையில் எழுதிக் கொடுங்கள். அதை எப்படிச் சேர்ப்பது என்பதை நாங்கள் யோசிக்கிறோம் என்றார்கள்.

அவர் சிட்டை எழுதிக் கொடுத்தார் :

| | | | | |
|---|---|---|---|---|
| வெண்கலம் | சேர். 80, | ரூ. 25 | 00 |
| செம்புசேர் | ,, 30 | ,, 6 | 00 |
| பித்தளை | ,, 10 | ,, 2 | 00 |
| | 120 | 33 | 00 |

ஐவரும் சிட்டையை வாங்கிப் பார்த்தார்கள். மொத்த ரூபாய் முப்பத்து மூன்று எழுதி இருக்கிறார். இந்த ரூபாயை நாம் எப்படிச் சேர்ப்பது என்று யோசித்தார்கள். இனி மேல் ஊரில் எவ்வித வரியும் போட முடியாது; வெளியூர்களுக்குப் போய்த்தான் வசூல் செய்து சேர்க்க வேண்டும் என்றார் மருதமுத்து உடையார்.

ராமசாமி உடையார், தெற்கே ராமனாதபுரம் ஜில்லாவில் நம் இனத்தவர்கள் நிறைய இருக்கிறார்கள். அங்கு சென்றால், நல்ல முறையில் பொருள் சேரும் என்றார். சரி அப்படியே செய்வோம். ஆனி முதல் தேதி புறப்படுவதென்று முடிவு செய்தார்கள்.

ஆனி மாதம் முதல் தேதியன்று, ஐவரும் கோவிலுக்கு வந்து சாமி தரிசனம் செய்து புறப்பட்டார்கள். இராமனாதபுரம் ஜில்லாவில் தங்களுக்குத் தெரிந்த ஊர்களுக்கும் சொந்தம் உள்ள ஊர்களுக்கும் போய் விபரத்தைச் சொன்னார்கள்.

அங்கங்கே உள்ள பெரியவர்கள் தெய்வகாரியம், வெகு தொலைவில் இருந்து வந்திருக்கிறார்கள். நல்ல முறையில் நாம் கொடுத்து அனுப்ப வேண்டுமென்று பேசி

அவர்களே பொறுப்பெடுத்துக் கொண்டு வசூல் செய்து கொடுத்தார்கள். ஆனி மாதம் 30 தேதிக்குள் ரூபாய் தொண்ணூற்று ஆறும் முப்பது சேர் முறியும் சேர்ந்தது. அவைகளை எடுத்துக் கொண்டு ஊர் வந்தார்கள்.

மறு நாள்—ஐவரும் ஸ்தபதியாரை அழைத்து உங்கள் வேலை எந்த அளவு நடந்திருக்கிறது என்றார்கள்.

ஸ்தபதியார், சுப்பிரமணியர் வேலை முழுதும் முடிந்து விட்டது. அம்மன் வேலை ஒரு வாரமாகப் பார்க்கிறேன் என்றார். முழு வேலையும் எப்போது முடியும் என்றார்கள். ஆடிமாதம் முப்பதாம் தேதிக்குள் பூர்த்தி யாகிவிடும் என்றார்.

அப்படியானால்,ஆவணி மாதம் 11ஆம் தேதி முகூர்த்த நாளில் வார்க்கலாமா என்றார்கள். தாராளமாகச் செய்யலாம் என்றார் ஸ்தபதியார்.

தாங்கள் போன காரியம் எப்படி என்று ஸ்தபதியார் கேட்டார்.

நல்ல முறையில் கிடைத்திருக்கிறது, தொண்ணூற்று ஆறு ரூபாயும் முப்பது சேர் முறியும் கிடைத்தது என்றார் மருதமுத்து உடையார்.

அப்படியா? நாம் எதிர்பார்த்ததுதான். தங்கம் வெள்ளி பாக்கியுள்ள முறி செம்பு பித்தளை இவைகளை வாங்கி வாருங்கள். நல்ல முறையில் செய்து முடிப்போம் என்றார் ஸ்தபதியார்.

ஆடி மாதத்தில் ஆவுடையார் கோவிலில் இருந்து காசினாத தம்பிரான் சேவகரை அனுப்பி மருதமுத்து உடையாரை அழைத்து வரும்படி அனுப்பினார். சேவகர் வந்து தகவலைச் சொன்னார்.

மறுநாளே மருதமுத்து உடையாரும் சுப்பையா உடையாரும் ஆவுடையார் கோவிலுக்குப் போய்த்

தம்பிரான் அவர்களைப் பார்த்து வணக்கம் செலுத்தினார்கள். அவரும் ஆசீர்வதித்து விபூதி கொடுத்து அமரச் சொன்னார். பிறகு கோவில் விக்கிரக சம்பந்தமாகக் கேட்டார். நடந்த விபரங்களைச் சொன்னார்கள்.

இதுதான் மிகவும் நல்லது. இப்படித்தான் இருக்க வேண்டும். இதை அப்போதே குருக்கள் சொன்னார்- இல்லறத்தான் வணங்கும் தெய்வம் அம்பாளோடு இருப்பது தான் நல்லது. அப்படிச் செய்தால் இரண்டு அம்பாள் செய்யவேண்டும். அப்படிச் செய்ய அவர்களால் இப்போது முடியாது என்று பேசினோம்.

ஆதீனம் அவர்கள் என்னை அங்கு வந்து விக்கிரகத்தையும் உங்களையும் பார்த்து வரச் சொன்னார்; இங்கு நான் விசாரித்ததில் நடப்பு தெரிந்தது. அதனால்தான் ஆள் அனுப்பினேன். ஆதீனம் அவர்கள் உங்கள் வேலை முடிந்து, ஓய்வு கிடைக்கும் போது, உங்கள் இருவரையும் அங்கு திருவாவடுதுறைக்கு வரச் சொன்னார் என்றார்.

எங்களை அங்கு வரச் சொல்லிய விபரம் என்ன சாமி என்று மருதமுத்து உடையார் கேட்டார்.

விபரம் எதுவும் சொல்லவில்லை. அம்பலவாணனேந்தலுக்குப் போய்க் கோவில் விக்கிரகத்தைப் பார்த்து விட்டு ஓய்வு கிடைக்கும்போது அவர்கள் இருவரையும் ஒரு முறை நான் இங்கு வரச் சொன்னதாகச் சொல்லி வாருங்கள் என்றார். வேறு எந்த விபரமும் சொல்லவில்லை. ஆனால் உங்கள் கோவில் மேல் நல்ல பிரியமாக இருக்கிறார் என்றார்.

சரி, நல்லதுதான், ஆதீனம் அவர்கள் உத்தரவுப்படி இந்த வேலை முடிந்த பிறகு வருவதாகச் சொல்லுங்கள் என்றார் சுப்பையா உடையார்.

இருவரும் தம்பிரானுக்கு வணக்கம் சொல்லி விடை பெற்றுக் கொண்டு கணபதி குருக்கள் வீட்டிற்குப் போனார்கள்.

ஐயர் இருவரையும் வரவேற்று அமரச் சொன்னார்; பிறகு விபரங்களைக் கேட்டார்.

நடந்தவைகளைச் சொன்னார் மருதமுத்து உடையார்.

ஐயர் ''அங்கு நடக்க வேண்டியதைத் தெரிந்தவன்; நடத்துகிறான், நடக்கட்டும்; அம்பாளுக்குத் தேவையான பொருள் கிடைத்து விட்ட வரையிலும் திருப்தி. இதை முன்னாலே தம்பிரானும் நானும் கலந்து பேசினோம், என்ன செய்வது; உங்களிடம் பொருள் பலம் இல்லையே என்று யோசித்து அதைச் சொல்லவில்லை.

எப்படி இருந்தால் பின்னால் நன்மை என்பதைத் தெரிந்தவனும், அதை எளிதில் முடிக்கும் திறன் உள்ள வனும் அங்கு இருக்கும்போது நாம் ஏன் கவலைப் படவேண்டும்'' என்றார் கணபதி குருக்கள்.

சாமி இப்போது சிலை வார்க்க ஓர் நாள் பாருங்கள் என்றார்.

ஐயர் பஞ்சாங்கத்தை நன்கு பார்த்து ஆவணி மாதம் 11ந் தேதி புதன்கிழமை ஓர் உயர்வான நாள் இருக்கிறது; அன்று உதயத்திற்கு ஆரம்பித்துச் செய்யுங்கள்; அமோர்க மாக இருக்கும்: எந்தக் குறையுமில்லாமல் நல்ல அமைப் போடும் சக்தியோடும் விளங்கும் என்று சொல்லி அதன்படி சிட்டை எழுதிக் கொடுத்தார்.

சிட்டையைப் பெற்றுக் கொண்டு தம்பிரான் தங்களுக்கு ஆள் அனுப்பியதையும் நாங்கள் இங்கு வந்து தம்பிரானைப் பார்த்ததும் அவர் கோவில் விபரங்களைக் கேட்டபின் திருவாவடுதுறையில் சன்னிதானம் தங்கள் இருவரையும் வரும்படி சொல்லியனுப்பிய விபரங்களையும் மருதமுத்து உடையார் சொன்னார்.

அவைகளைக் கேட்ட ஐயர், உங்களை அங்கு வரும்படி சொல்லி இருக்கிறது. ஏதோ உங்களுக்கு லாபமான

காரியமாகத்தான் இருக்கும். ஏனென்றால் அவருக்கு உங்கள் கோவிலின் மேல் அதிகப் பற்றுதல் ஏற்பட்டிருக் கிறது. அதனால் இந்த வேலை முடிந்த உடன் அவசியம் போய் வாருங்கள் என்றார்.

சாமி எதுவாக இருந்தாலும் அவர் எங்களுக்கு. எஜமான், அவர் அழைப்பை மறுக்க முடியாது. அவசியம் போய் வருகிறோம் என்று சொல்லி ஐயரிடம் விடை பெற்றுக் கொண்டு ஊர் வந்து சேர்ந்தார்கள்.

1836ம் வருஷம் ஆவணி மாதம் 10ம் தேதி மாலை முன் போல முகூர்த்தத்திற்கு வேண்டிய சாமான்களெல்லாம் சேகரம் செய்து கோவிலில் வைத்து—அதிகாலை சூரிய உதயத்திற்கு முன் கோவிலுக்கு வரும்படி ஊர் மக்கள் எல்லோருக்கும் தகவல் சொல்லி, பெரியவர்கள் கோவிலில் தங்கி இருந்து அதிகாலையில், சுவாமிக்கு அபிஷேக ஆராதனை நடத்தி எல்லோரும் தரிசனம் செய்து— ஸ்தபதியார் உலைமுகத்தில், மஞ்சள் பிள்ளையார் வைத்து தேங்காய் பழம் படைத்து தீபஆராதனை செய்தார். எல்லோரும் தரிசனம் செய்து குகையில் மஞ்சள் குங்குமம் பொட்டு வைத்து முடித்தார்கள்.

ஸ்தபதியார்-குகையை உலையில் ஏற்றி உதவி ஆட் களைக் கொண்டு வேலை ஆரம்பித்தார், வேகமாக வேலை நடந்தது.

குருக்கள்-கொடுத்த சிட்டையில் உதயம் தொடங்கி- மூன்றே முக்கால் நாழிகைக்குள் குகையை உலையில் ஏற்றி ஆரம்பித்து பதினொன்றேகால் நாழிகைக்குள் கருவில், பாய்ச்சி முடிக்க வேண்டுமென்று எழுதி இருந்தார். அதன் படி ஸ்தபதியார் சுறுசுறுப்பாகப் பார்த்துப் பத்தே முக்கால் நாழிகைக்குள் கருவில் பாய்ச்சி முடித்து விட்டார்.

அங்கே கூடி இருந்த மக்கள் அனைவரும்—அவரவர் ளுக்குத் தெரிந்த முறையில் இறைவனைப் பிரார்த்தனை

செய்து—நன்றாக அமையவேண்டும் — முருகா— முருகா என்று சொல்லிக் கொண்டே நின்றார்கள்.

ஆவணி 9ஆம் தேதி புலவர் ஆறுமுகம் தற்செயலாக வந்தார். அவர் கோவிலில் சாமி தரிசனம் செய்து—ஸ்தபதி யார் வேலை பார்க்கும் இடத்தை அணுகி விசாரித்தார். ஸ்தபதியார் சிலை செய்யும் விபரத்தைச் சொல்லி 11ஆம் தேதி வார்க்கப் போவதாகச் சொன்னார்—புலவர் அந்தக் காட்சியைப் பார்க்க வேண்டுமென்று தங்கி இருந்தார்.

மாலையில் ஸ்தபதியார் கருவின் மேல்பகுதியில் தண்ணீரைத் தெளித்து, முதலில் சுப்பிரமணியர் சிலையைச் சுத்தம் செய்தார்-மிக அருமையாக அமைந்திருந்தது. பிறகு அம்பாள் சிலைகளைச் சுத்தம் செய்தார். கூடி இருந்த மக்கள்எல்லாம் ஆவலோடு நெருங்கி நின்று பார்த்தார்கள். இரண்டு சிலைகளும் அழகாக அமைந்திருந்தன. ஸ்தபதியார் மூன்று சிலைகளையும் தூக்கி வரிசையில் நிறுத்தினார். அனைவரும் கைகூப்பி வணங்கினார்கள்—புலவர் சிலையின் முன்னின்று திருப்புகழில் ஒரு பாடலைப் பாடி வீழ்ந்து வணங்கினார்— எல்லோரும் அவரைப் பாராட்டி உணவுக்கு அழைத்துச் சென்றார்கள்.

மறுநாள் காலையிலிருந்து—ஸ்தபதியார் சிலைகளைச் சுத்தம் செய்யும் வேலையைப் பார்த்தார். மூன்று சிலை களையும் சுத்தம் செய்து நகாஸ் போட ஒரு மாதமாகி விட்டது.

சுவாமிக்கு ஆதாரபீடம், அலங்காரபீடம் இவைகளைச் செய்தார்,

மருதமுத்து உடையார் போன்ற பெரியவர்கள் ஸ்தபதி யாரை அழைத்து. "ஐயா உங்கள் வேலை எப்போது முடியும்" என்று கேட்டார்கள்.

ஐயா என்னுடைய வேலை புரட்டாசி முப்பதாம் தேதிக்குள் முடித்துவிடலாம் என்றார்—அடுத்து நாங்கள் என்ன செய்ய வேண்டுமென்று கேட்டார்கள்.

ஐயா! நீங்கள் ஓர் முகூர்த்த நாள் பார்த்து, மூன்று அல்லது ஐந்து பிராமணர்களை அழைத்து வந்து முகூர்த்த நாளுக்கு மூன்று தினங்கள் முன்பாக கடஸ்தாபனம் செய்து ஓமம் வளர்த்து—காலை மாலை மந்திர ஜெபங்கள் செய்து முகூர்த்த நாளில் - கும்பாபிஷேகம் போல சுவாமி சிரசில் குடத்தில் உள்ள நீரை விட்டு, பிறகு அபிஷேகங்கள் செய்து நெய்வேத்தியம் வைத்து ஆராதனை செய்து எல்லோரும் தரிசனம் செய்யவேண்டும்.

முடிந்தால் அன்றிரவு வீதி உலா தூக்கி வரலாம் என்றார்—அப்படியானால் அதற்குரிய நாளைப் பார்க்கலாமா என்றார்கள். தாரளமாக இப்போதே பார்த்து முடிவு செய்யுங்கள் என்று ஸ்தபதியார் சொன்னார்.

மறுநாள் காலையில் ஐவரும் கோவிலுக்கு வந்து சாமி தரிசனம் செய்து ஆவுடையார் கோவில் போய்—கணபதி குருக்களை பார்த்தார்கள்—குருக்கள் எல்லோரையும் இன்முகத்தோடு வரவேற்று அமரச் சொன்னார். நாள் பார்த்தார்கள்.

கணபதி குருக்கள் பஞ்சாங்கத்தை எடுத்து நாள் பார்த்து—ஐப்பசி மாதம் 16ம் தேதி வெள்ளிக்கிழமை ஓர் அற்புதமான நாள் இருக்கிறது. அதிலும் ஓர் பெரிய விசேஷம்; அன்று கந்தர் சஷ்டி—அதில் செய்யலாம் என்றார்.

சரி, அதற்குத் தேவையான சாமான்களுக்கு சிட்டை எழுதிக் கொடுங்கள்—நாங்கள் சாமான்களைத் தயார் செய்கிறோம். அதற்கு வேண்டிய ஆட்களை அழைத்துக் கொண்டு நீங்கள் வந்திருந்து அந்தக் காரியத்தை நல்ல முறையில் செய்து வைக்க வேண்டும் என்றார் மருதமுத்து உடையார்.

அப்படியே செய்கிறேன்: மந்திரம் நன்றாகப் படித்து நான்கு பிராமணர்களை அழைத்துக் கொண்டு ஆறாந் தேதி மாலையில் அங்கு வந்து விடுகிறேன்,

கடஸ்தாபனம் செய்து யாகம் வளர்க்க கோவிலின் முன்புறம் ஒரு கொட்டகையும் சமையலுக்கு ஒரு சிறிய கொட்டகையும் அமைத்து வையுங்கள்—அன்று இரவு சுவாமியை வீதி உலாத் தூக்கிவர—ஒரு கேடயமும் தூக்கு வோரையும் ஏற்படுத்துக என்றார்.

அதற்குத்தான் என்ன செய்வது என்று புரியவில்லை என்றார் சுப்பையா உடையார்.

அங்கே பக்கத்தில் பெரிய கோவில் இல்லை—இங்கே கோவிலில் வாங்கலாம்; எப்படி கொண்டு போவது என்றார் ஐயர்.

''சாமி வைத்துத் தூக்குவது போல் கேடயத்தில் வாரையை கட்டி இங்கிருந்து நாங்களே தூக்கிக் கொண்டு போய்த் திரும்பிக் கொண்டு வந்து கொடுக்கிறோம்'' என்றார் ராமசாமி உடையார்.

ஐயர் சற்று நேரம் யோசித்து பிறகு, ''வாருங்கள்; இப்போதே, கோவில் சம்புருதியிடம் கேட்போம்'' என்று போனார்கள். ஐயர் சம்புருதியிடம் விபரத்தைச் சொல்லிப் பெரிய கேடயமும் தூக்கு வாரையும் கேட்க வந்திருக்கிறார் கள் என்றார்.

விபரத்தைக் கேட்ட சம்புருதி தாராளமாக எடுத்துப் போங்கள். பத்திரமாகக் கொண்டு வரவேண்டும்; எப்படிக் கொண்டு போவீர்கள்? என்றார்.

இங்கேயே வாரையைக் கட்டி—நாங்களே தூக்கிப் போகிறோம் என்றார்கள்.

சம்புருதி சற்று திகைத்துப் போய்—ஐயரைப் பார்த்து ''என்ன சாமி—நமது ஆட்கள் இந்த நாலு வீதியும் தூக்கி வரவே—ரொம்ப அலுத்துக் கொள்கிறார்கள்—இவர்கள் இந்த ஏழுகல் தூரமும், இந்த ஆட்களே தூக்கிப் போவதும் திருப்பித் தூக்கிவருவதும் சாமான்யமா?'' என்றார்.

ஐயர் "நீங்கள் இப்போது அதிர்ச்சியடைந்து என்னைக் கேட்கிறீர்கள் — என் வீட்டில் அவர்கள் சொன்ன போதே திகைத்துப் போனேன்—அந்தக் கிராமத்தில் உள்ளவர்களுடைய தெய்வத் தொண்டை மதிப்பிட நமக்கு அறிவு போதாது.

தனி ஆளே நடந்து செல்லச் சிரமப்படும் அந்தப் பாதையில்—வாகனத்தை ஆளே தூக்கி போவதும் திருப்பித் தூக்கி வருதும் சின்னக் காரியமா? அவர்கள் அந்த ஆண்டவன் மேல் வைத்திருக்கும் பாசத்தை நம்மால் கணக்கிட முடியாது" என்றார் கணபதி குருக்கள்.

சம்புருதியும், "உண்மைதான் சாமி! அவர்கள் சொன்ன உடன் திகைத்துப் போனேன், சரி நடக்கட்டும் வேண்டும் போது வந்து எடுத்துப் போங்கள்" என்றார், இவர்கள் விடை பெற்றுக் கொண்டு ஐயர் வீட்டுக்கு வந்தார்கள்.

ஐயர் தேவையான சாமான்களுக்கெல்லாம் சிட்டை எழுதி மருதமுத்து உடையார் கையில் கொடுத்தார்— சிட்டையைப் பெற்றுக் கொண்டு ஐயரிடம் விடைபெற்று ஊர் வந்தார்கள்.

ஊரில் சிட்டைப்படி சாமான்கள் தயார் செய்து இரண்டு கொட்டகையும் கட்டி முடித்தார்கள். ஸ்தபதி யாரும்—விக்கிரகம்—பீடம் எல்லா வேலைகளும் குறை யின்றி முடித்துத் தயார் நிலையில் வைத்திருந்தார்.

ஆறாம் தேதி மாலையில் தன்னுடன் நான்கு பிராமணர் களை அழைத்துக் கொண்டு கணபதி குருக்கள் வந்து சேர்த்தார். எல்லோரும் அவர்களை வரவேற்று அமரச் சொன்னார்கள்.

ஐயர் சிட்டைப்படி சாமான்களை ஒத்துப் பார்த்து முடித்தார். பிறகு எல்லோரையும் பார்த்துக் காலையில் மூன்றே முக்காலுக்கு மேல் யாகசாலை ஆரம்பிப்போம்—

இப்போதிருந்து மூன்று நாளைக்கும் இரவில்-கந்தபுராணம் —ஒரு ஜாம நேரத்திற்குச் சொல்லுவோமா என்று கேட்டார்.

மருதமுத்து உடையார் ''என்ன சாமி, கந்தபுராணம் சொல்லுவோமா என்று கேட்கிறீர்கள்? நாங்களெல்லாம்— அதிகம் படிப்பில்லாத முட்டாள்கள்.

முருகனை வைத்து கும்பிடுகிறோமே தவிர அவருடைய வரலாறே எங்களுக்குச் சரிவரத் தெரியாது. ஆகையால்— எங்கள் பெருமான் பிறப்பிலிருந்து வள்ளி தெய்வயானை திருமணம் வரை எங்களுக்குப் புரியும்படி சொல்லுங்கள் சாமி'' என்றார்.

சரி ஆரம்பிப்போம் என்று கோவிலில் காலத்தில் ஆராதனையை முடித்து பிறகு சுமார் ஒரு ஜாமநேரம் உபன்னியாசம் பண்ணினார்.

காலை மூன்றே முக்கால் நாழிகைக்கு மேல் யாகசாலை ஆரம்பித்து காலை—மாலை ஓமம் ஜெபம் இவைகளை முறைப்படி செய்து மூன்றாவது நாள்.

1836ம் வருஷம் ஐப்பசி மாதம் 16ஆம் தேதி வெள்ளிக் கிழமை ஏழே முக்கால் மேல் பதினோரு நாழிகைக்குள்— உற்சவ மூர்த்திக்கு அபிஷேகம் நடந்தது. ஊர் மக்களும்— சுற்றுப்புறக் கிராம மக்களும் பெரும் திரளாகக் கூடி பகவானைத் தரிசனம் செய்தார்கள்—மாலையில் பால், பன்னீர், பஞ்சாமிர்தம் போன்ற எல்லா அபிஷேகங்களும் குறைவின்றி நடந்தன.

இரவு வள்ளி தெய்வயானை சமேதராக சுப்பிரமணி யரை ஏராளமான புஷ்பங்களால் அலங்காரம் செய்து ஆராதனை செய்து முடிந்தவுடன்—மருதமுத்து உடையார் பெரிய மாலை ஒன்றை—ஸ்தபதியார் ஷண்முக ஆசாரிக்கு அணிவித்து அவரைக் கௌரவித்து தன் கையால் அவர் நெற்றியில் விபூதி பூசிக் குங்கும திலக மிட்டார்— எல்லோரும் ஸ்தபதியார் வாழ்க என்று ஆசி கூறினார்கள்.

பிறகு சுவாமியைக் கேடயத்தில் வைத்து மேளதாளம் முழங்க வீதி உலா வந்து சேர விடிந்துவிட்டது.

சாமி சேர்க்கையான உடன் எல்லோருக்கும் பிரசாதம் வழங்கினார்கள். அப்போது—கணபதி குருக்கள்-வந்திருந்த மக்களை பார்த்து காலை உணவருந்தியவுடன் எல்லோரும் கோவிலுக்கு வாருங்கள் என்று வேண்டுகோள் விடுத்தார்.

அவர் அழைப்பை ஏற்று ஏராளமான மக்கள் கோவிலில் வந்து கூடினார்கள்.

மருதமுத்து உடையார் ஊர் மக்களிடம் கூறியதாவது ! "இந்தக் காரியத்தை முடித்து தந்தவர் ஸ்தபதி ஷண்முக ஆசாரி அவர்கள்—அவர் தனக்கு எவ்விதக் கூலியும் வேண்டாம். என்று சொல்லி இருந்தாலும், ஏழுமாத காலம் நமக்காக உழைத்திருக்கிறார். அவரை நாம் சும்மா அனுப்புவது முறையல்ல?

அவருக்குக் கூலி என்று இல்லாவிட்டால் நமது காணிக்கை என்று சொல்லி ஏதாவது கொடுத்து அனுப்புவதுதான் நியாயம் என்று நினைக்கிறேன்" என்றார்.

"நீங்கள் சொல்லுவதுதான் முறை; அவருக்கு நாம் எதுவும் கொடுக்கா விட்டாலும் அவர் நம்மைக் கேட்க மாட்டார்; இதில் உள்ள நற்பலன் பூராவும் அவரைத் தான் சேரும்—ஆகையால் நிச்சயமாக நாம் காணிக்கை கொடுத்துத்தான் அனுப்ப வேண்டும். அதை எப்படிச் செய்வது என்பதை நீங்கள்தான் சொல்ல வேண்டும்" என்றார் சுப்பையா உடையார்.

"நாம் இதுவரையிலும்—பணம் சேர்த்து இந்தக் காரியத்தைச் செய்து முடித்ததில் செலவு போகப் பதினைந்து ரூபாய் மீதம் இருக்கிறது. அது போக இப்போது குடிக்கு ஒரு ரூபாய் வசூல் செய்தால் போதும்.

அவருக்கும் மனைவியும் ஒரு பெண் பிள்ளையும் தானாம். அவர்களுக்கு இரண்டு சேலை, இவருக்கு ஒரு

வேஷ்டி—துண்டு, இவைகள் வாங்கியது போக மீத மிருக்கும் ரூபாயைக் காணிக்கையாக வைத்து இதை சந்தோசமாக ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று எல்லோரு மாக இருந்து கொடுப்போம் என்றார்.

அப்படியே செய்வோமென்று எல்லோரும் ஒப்புக் கொண்டார்கள்.

ஐந்து தினங்களில் பூராவும் வசூல் ஆகிவிட்டது.

மருதமுத்து உடையாரும், சுப்பையா உடையாரும் சென்று-நல்ல சேலை வேஷ்டித்துண்டு இவைகளோடு சில சாமான்களும் வாங்கி வந்தார்கள்.

ஓர் திங்களன்று ஊரில் எல்லோரையும் கோவிலுக்கு அழைத்து. சுவாமிகளுக்கு பால், பன்னீர் இவைகளால் உயர்ந்த அபிஷேகங்கள் செய்து சர்க்கரைப் பொங்கல் நெய்வேத்தியம் படைத்து ஆராதனை செய்து எல்லோரும் சாமி தரிசனம் செய்து முடிந்த உடன் பெரிய மாலை ஒன்றை ஸ்தபதியாருக்கு அணிவித்து பட்டு வேட்டி துண்டு சேலை வெற்றிலை பாக்கு தேங்காய் மூடி. அத்துடன் முப்பது ரூபாய் பணத்தையும் ஓர் பெரிய தட்டில் வைத்து மருதமுத்து உடையார் ஸ்தபதியார் கையில் கொடுத்து அவர் காலைத் தொட்டு வணங்கி ஸ்தபதியார் வாழ்க என்று அவர் நெற்றியில் விபூதியை இட்டார்—கூடி நின்ற அனைவரும் ஸ்தபதியார் நோய் நொடி இல்லாமல் வாழ வேண்டும் முருகா என்று வாழ்த்திக் கைகூப்பி வணங்கி னார்கள். தட்டைப் பெற்றுக் கொண்டு. ஸ்தபதியார், "ஐயா நீங்கள் வயதில் முதியவர். என் காலைத் தொட்டு வணங்கலாமா?" என்று சொல்லித் தட்டில் இருந்த ரூபாயில் ஐந்து ரூபாயை எடுத்து வெற்றிலை பாக்குடன் மருதமுத்து உடையார் பாதத்தில் வைத்து வீழ்ந்து வணங்கி, "என் மனதில் இருந்த ஒரு பெரிய ஆசையை நிறைவேற்றத் தாங்களும் இந்த கிராம மக்களும் உதவி செய்துள்ளீர்கள். அதற்கு நன்றி" என்று கூறி ஸ்தபதியார் ஊருக்குப் புறப்பட்டார்.

# 9 நில மானியம்

சில தினங்களுக்குப் பிறகு ஊர்ப் பெரியவர்கள் எல்லாம் கோவிலில் கூடினார்கள். மருதுமுத்து உடையார்; ''இப்போது முயற்சி செய்த வேலை, ஆண்டவன் துணையில் நல்ல முறையில் முடிந்து விட்டது. நம் திருவாவடுதுறை பண்டார சன்னதி ஓய்வு கிடைக்கும் போது நம்மில் இருவரை அங்கு வரும்படி சொல்லியனுப்பியதாகத் தம்பிரான் சொன்னாரே. அதற்கென்ன செய்வோம் என்பதை யோசியுங்கள்'' என்றார்.

இராமசாமி உடையார், ''அண்ணா—நாமெல்லாம் சம்சாரி; நமக்கு ஓய்வு நாள் என்பது ஏது? சித்திரைக்கு மேல் கொஞ்சம் செல்லலாம். அது ரொம்ப நாள் இருக்கிறது- சொல்லியனுப்பியவர் பெரிய ஆதீன கர்த்தா அதிலும் நாம் அவர்கள் கிராமக்குடிகள்—சுணக்கினால் அலட்சியம் செய்வதாக நினைப்பார். குருக்களும் விக்கிரக வேலை முடிந்த உடன் சுணக்காமல் போய் வாருங்கள் என்றுதான் சொன்னார். ஆகையால் தாங்களும் சுப்பையா உடையாரும் இப்போதே போய் வருவதுதான் உத்தமம்'' என்றார்.

இருந்த அனைவரும் அப்படியே செய்யுங்கள். சுணங்க வேண்டாம் என்றார்கள்.

அதன்படி ஒரு நல்ல நாளன்று மருதமுத்து உடையாரும் சுப்பையா உடையாரும், கோவிலில் சாமி தரிசனம் செய்து திருவாவடுதுறைக்குப் புறப்பட்டார்கள். அங்கு போய்ச் சேர்ந்து மடத்தில் தம்பிரானைப் பார்த்து விபரத்தைத் தெரிந்து கொள்வோமென்று மடத்திற்குப் போனார்கள். மடத்தில் தம்பிரான் இல்லை.

அவர் எங்கே போயிருக்கிறார் என்று விசாரித்தார்கள்! அவர் போன இடம் தெரியவில்லை. இந்த திருவாவடு துறை ஆதீனத்திற்குப் பதினாலு தேவஸ்தானம் இருக் கிறது. எல்லாம் சிவஸ்தலம்.

தம்பிரான் வருஷம் ஒரு முறை எல்லாக் கோவில் களுக்கும் கணக்குகள் சரி பார்ப்பது வழக்கம்; அது சம்பந்த மாகத்தான் போயிருக்கிறார். ஆனால் எந்தக் கோவி லுக்குப் போயிருக்கிறார் என்பது சன்னிதானத்திற்குத் தான் தெரியும். நீங்கள் மடத்தில் சாப்பிட்டுத் தங்கி இருந்து காலையில் சன்னிதானத்தைப் பாருங்க ளென்றார்கள்.

இருவரும் மடத்தில் தங்கி இருந்து காலையில் எழுந்து காலைக் கடன்களை முடித்து உணவருந்திய பின்—சரி நாம் தான் முன்னாலே வந்து சன்னிதானத்திடம் பழகி இருக் கிறோமே. நேரில் போய்ப் பார்ப்போம். அவர் என்ன சொல்லுகிறார் என்பதைத் தெரிந்து பிறகு யோசிப் போம் என்றார் மருதமுத்து உடையார்—சரி என்று வெற்றிலைபாக்கு எலுமிச்சம்பழம், கற்கண்டு இவைகளை வாங்கி ஓர் தட்டில் எடுத்துக் கொண்டு மடத்திற்குப் போய்ச் சன்னிதானத்தின் முன்னால் வைத்து வணங் கினார்கள்.

அவர் முகமலர்ச்சியோடு இருவரையும் ஆசீர்வதித்து விபூதி கொடுத்து அமரச் சொன்னார். இருவரும் அமர்ந்தார்கள்.

பிறகு விக்கிரக வேலை பூர்த்தியாகி விட்டதா என்றார்

இருவரும் எழுந்து நின்று முடிந்து விட்டது என்றார் கள்—அமருங்கள்—அமர்ந்தார்கள்.

இரண்டு அம்பாளோடுதானே செய்திருக்கிறீர்கள் என்றார்? ஆமாம்; வள்ளி தெய்வயானையோடு தான் செய்திருக்கிறோம் என்றார்கள்; விக்கிரகம் நல்ல முறையில்

அமைந்திருக்குமே என்றார்? எங்களுக்கு என்ன தெரியும்—ரொம்ப நல்ல முறையில் அமைந்திருப்பதாக ஸ்தபதியார் சொன்னார் என்றார்கள்.

இப்போது உங்கள் கோவிலுக்கு எப்படிப் பூசை நடத்துகிறீர்கள்? என்னென்ன விழாக்கள் கொண்டாடுகிறீர்கள்? விபரமாகச் சொல்லுங்கள் என்றார் சன்னிதானம்.

மருதமுத்து உடையார்—கோவிலுக்குத் தினம் காலை-மாலை நெய்வேத்தியம் செய்து பூசை வைக்கிறோம்; தமிழ் வருஷப் பிறப்பு-சித்திரை பௌர்ணமி பிள்ளையார் சதுர்த்தி-ஆயுத பூஜை கார்த்திகை சோமவாரங்கள்-மாதக் கார்த்திகை-திருக்கார்த்திகைக்கு- சாமி வீதி உலா வந்து சொக்கப்பனை கொளுத்துவது - மார்கழியில் - தினம் அதிகாலையில் திருப்பள்ளி பூஜை-தைப் பொங்கல்-இவைகளுக்கு-விஷேடபூசை நடத்துகிறோம் - தைப்பூசத்திற்குக் காப்பு கட்டிப் பத்து நாள் திருவிழா செய்து சாமி வீதி உலா வந்து பூசத்தன்று குளத்தில் சாமி தீர்த்தம் கொடுப்பது-பங்குனிஉத்திரத்திற்குக் காப்புக் கட்டித் திருவிழா நடத்திக் கடைசி நாள் உத்திரத்தன்று காவடிகள் எடுத்துச் சாமி தீர்த்தம் கொடுத்து இரவு இடும்பன் பூசை நடத்தி வருகிறோம் என்றார்.

பெரிய க்ஷேத்திரங்களில் உள்ள சகல முறைகளையும் விடாமல் செய்கிறீர்கள்- இதற்கெல்லாம் செலவுக்கு என்ன செய்கிறீர்கள் என்றார் சன்னிதானம்.

அப்போதைக்கப்போது ஊரில் வசூல் செய்துதான் நடத்துகிறோம் என்றார்.

சில வருஷங்களில் மழை இல்லாமல் பஞ்சம் போய் விடுகிறதே அப்போது என்ன செய்வீர்கள் என்றார்.

அப்படி வரும்போது ரொம்ப கஷ்டம்தான்-விளைந்திருக்கும்சோழநாட்டுப் பகுதிக்கு வீட்டுக்கு ஒரு ஆள் வீதம்

போய் கூலிக்கு அறுவடை வேலை செய்து அந்த நெல்லைக் கொண்டு வந்து பூசைக்குக் கொடுப்பது வழக்கம் என்றார் மருதமுத்து உடையார்.

சன்னிதானம் வெகுநேரம் அமைதியாக இருந்து, பின்பு உங்கள் தெய்வபக்தியையும் தொண்டையும் மனமாரப் பாராட்டுகிறேன். இப்படியே காலம்பூராவும் செய்வது சாத்தியப்படாதே. பின்னால்,வரும் வாரிசுகளும் உங்களைப் போல் உழைத்துக் கோவில் காரியத்தை விடாமல் நடத்து வது சொல்ல முடியாத காரியம். எல்லா வைபவங்களையும் ஏற்படுத்தி விட்டீர்கள். தம்பிரான் சொல்லியதைப் போல், அந்த பகவான்தான் நடத்தவேண்டும்.

நடத்துவார், விடமாட்டார். இருந்தாலும் தினப் பூசைக்காகிலும் ஏதாவது சொத்து இருந்தால் நல்லது என்றார் சன்னிதானம்.

என்ன செய்வது - நாங்கள் உங்கள் கிராமக்குடிகள்- எங்கள் நிலை பூராவையும் அப்படியே படம் பிடித்தது போல் உங்களிடம் தம்பிரான் அவர்கள் சொல்லி இருக்கி றார்கள். நாங்கள் எப்படிச் சொத்து சேர்க்க முடியும் என்றார் சுப்பையா உடையார்.

நான் ஒரு யோசனை செய்தேன். அந்தக் கிராமத்திலே ஒரு பகுதியில் சேர்ந்தாற் போல ஒரு பத்து ஏக்கர் நஞ்செய் நிலத்தை அந்தக் கோவிலுக்கு விட்டு, அதில் வரும் மேல் வாரத்தைக் கோவிலுக்குச் சேர்த்துக் கொள்ளும்படி செய்யலாம் என்று யோசித்துத்தான் நான் உங்களை இங்கு வரச் சொன்னேன்-ஏன் உலகம் உள்ள அளவும் அந்தக் கோவிலில் விளக்கெரிய வேண்டும்.

காலப்போக்கில் எவ்வளவோ மாற்றங்கள் வரலாம். அப்போது தெய்வசக்திகளும் மாறும். அந்த நேரங்களில்- நாம் நடத்தும் வைபவங்கள், குறைந்தாலும், தீபம் குறையக் கூடாது-பச்சைத் தண்ணீரில் விளக்கெரிந்த

கோவில் எண்ணெய் தீபமாவது நிற்காமல் எரிய வேண்டுமே என்றுதான்-இப்படியொரு யோசனையைச் செய்தேன். தம்பிரானும் ஊரில் இல்லை இன்னும் இரண்டு தினங்களில் வந்து விடுவார். அவரையும் கலந்துபேசி முடிவு செய்வோம். அதுவரையிலும் மடத்தில் சாப்பிட்டுத்தங்குங்கள் என்றார்; சன்னிதானம்.

வெளியூருக்குச் சென்றிருந்த தம்பிரான்-அன்றிரவே திருவாவடுதுறைக்கு வந்து விட்டார்.

மடத்தில் படுத்திருந்த இருவரும் காலையில் எழுந்து—காலைக் கடன்களை முடித்துக் கொண்டு மடத்திற்கு வந்தார்கள் - இருவரும் தம்பிரான், அறைக்குப் போய்-அவரைப் பார்த்து வணங்கினார்கள்.

தம்பிரான்—சிரித்த முகத்தோடு இருவரையும் வர வேற்று விபூதி கொடுத்து அமரச் சொன்னார்,

மாலையில் மூவரும் சன்னிதானத்திடம் போனார்கள். சன்னிதானம் அவர்களை வரவேற்று அமரச் சொல்லி, முதல்நாள் தான் அவர்களுக்கு சொன்னதை விபரமாகத் தம்பிரானிடம் சொன்னார்.

அதைக் கேட்ட தம்பிரான்—"மிக சந்தோசம்—இதெல் லாம் நம் ஆத்மாவுக்கு சேர்க்கும் ஆஸ்திகள். இப்போது நீங்கள் கொடுக்கும்—இந்தச் சொத்திலிருந்து வரும் வருவாயில் அந்தக் கோவில் உள்ளவரை பூசைக்கும் தீபத் திற்கும் குறையில்லாமல் நடக்கும்—இப்படி தர்மங்கள் கிடைப்பது அரிது—கிடைக்கும் வாய்ப்பை விடாமல் பயன் படுத்துவதில் தாங்கள் கைதேர்ந்தவர்கள்—இங்குள்ள பெரிய ஆலயங்களுக்குச் செய்வதெல்லாம்—பணக்காரர் களை விருந்திற்கு அழைப்பது போல—இப்படிச் சிறு கோவில் களுக்குச் செய்வதுதான் உண்மையான தர்மம்.

ஆனால் அவர்கள் "கோயில் பராமரிப்பு ஊராரிடம் என்றும் இருக்க வேண்டும் என்று விரும்புகிறார்கள்" என்றார்.

சன்னிதானம்—அப்படியா! அவர்கள்! நினைப்பது ஒரு வகையில் சரிதான்—நாம் இவ்வளவு கஷ்டப்பட்டு உருவாக்கிய கோவில் நமக்குப் பாத்தியம் இல்லாமல் போய் விடுமோ என்று பயப்படுகிறார்கள்.

எந்தக் கோவிலை யார் முதலில் உருவாக்குகிறார் களோ—உலகமுள்ள அளவும் அந்தக் கோவில் உரிமை—அந்தப் பரம்பரையினருக்குத்தான்.

நமது ஆத்மனாதசாமி கோவிலை மாணிக்கவாசகர் கட்டியதாக வரலாறு; கோவில் பூராவையும் அவர் கட்ட வில்லையே. ஆத்மனாதருடையகர்ப்பக்கிரகம் மட்டும்தான் மாணிக்கவாசகர் கட்டினாராம். பிறகு சோழ மன்னன், பாண்டிய மன்னன் போன்றவர்கள் அதோடு இணைத்து இவ்வளவு பெரிய கோவிலைக் கட்டினார்களாம். பின்னால் வந்த பல்லவ மன்னர் தான் கட்டுவதற்குக் கோவிலுக்கு உள்ளே இடமில்லாமல் பெரிய இராஜகோபுரத்திற்கு முன்னால் உன்னதமாக மிகப் பெரிய ஆயிரக்கால் மண்டபத் தைக் கட்டி, நம் தமிழகத்திலே எந்த இடத்திலுமில்லாத ஓர் அற்புதக் கொடுங்கையை அதில் பொருத்தி,

ஆவுடையார் கோவில் அடங்கலுக்குப் புரத்தி என்ற பெரும்புகழை வாங்கிக் கொடுத்தவர்கள், பின்னால் கோவில் எங்களுக்குச் சொந்தம் என்றா சொன்னார்கள்? இது விபரம் உங்களுக்குத் தெரியாதா என்றார்.

தம்பிரான், "தெரியும்; இது பூராவும் நன்றாகத் தெரியும்; தெரிந்துதான், அங்கே மூலவிக்கிரகம் பிரதிஷ்டை செய்யும்போது கிடஸ்தாபனத்திற்கு என்னைக் கர்த்தா வாக கங்கணம் கட்டிக் கொள்ளும்படி—கணபதி குருக்கள் சொன்னார்.

நான்—ஐயா, எந்தக் கோவிலை யார் உற்பத்தி செய் கிறார்களோ, அந்தக் குலத்தவர்களுக்குத்தான் கங்கணம் கட்டிக் கொள்ளும் உரிமை; மற்றவர்கள் இந்த விக்கிரக மென்ன, எத்தனை கிராமத்தைத்தானமாக எழுதிக் கொடுத்

தாலும், அந்தக் கோவிலின் கர்த்தாவாகக் கங்கணம் கட்டிக் கொள்ளும் உரிமை யாருக்கும் கிடையாது.

அதிலும் இந்த முருகப்பெருமான்—இவர்கள் குலத்தில் பிறந்த ஒரு பக்தருக்காக இங்கு வந்து அமர்ந்தவர். ஆகை யால் அந்தக் குலத்தவர்கள்தான் வாரிசு பரம்பரையாக அதைச் செய்ய வேண்டும். ஆகையால் அவர்களில் ஒருவருடைய பேர் நாமத்திற்குப் பார்த்துச் சொல்லுங்கள் என்றேன். அதன்படி செய்தார்கள்—இப்போது சந்தேகம் வந்துவிட்டது. இனி நாம் சொன்னால் இவர்கள் மனம் ஏற்காது என்பதால்தான் இங்கு அழைத்து வந்தேன்— உங்கள் வாயில் இந்த விபரங்களைக் கேட்டவுடன் அவர்கள் மனம் நிம்மதி அடைந்து விட்டது என்றார் தம்பிரான்.

சன்னிதானம்—"பெரியவரே! ஆவுடையார் கோவில் ஆத்மானந்தசாமி கோவிலுக்கு சமீபத்தில் இராமனாதபுரம் ராஜா—புதுக்கோட்டை ராஜா இவர்கள் போன்று அனேகர் தமிழ்நாடு பூராவும் தானம் கொடுத்திருக்கிறார்கள்— உங்கள் கிராமத்தையும்—ஐயர்தான் தானமாக மடத்திற்கு எழுதி வைத்திருக்கிறார்கள்—ஆகையால் தானம் கொடுத்த சொத்திற்கும்— நன்கொடையாகக்கொடுக்கும்—ரொக்கத் திற்கும்—கணக்கு கேட்கும் உரிமைகூடக் கொடுத்தவர் களுக்கு இல்லை. அது தர்மத்தை சேர்ந்தது.

ஆவுடையார் கோவில் ஆத்மனாதசாமி கோவில் திருவிழாவில்—எத்தனையோ பேர் மண்டகப்படி நடத்து கிறார்கள், அதனால் அவர்கள் கோவிலில் பாத்தியம் உண்டு என்று கேட்க முடியுமா?

மார்கழித் திருவிழாவிற்கு அங்கு வரும்போது ஐயாவை அங்கு வந்து கிராமத்தைப் பார்த்து ஒரு பக்கத்தில் சேர்ந் தாற்போல உள்ள நிலத்தைக் காண்பிக்கச்சொல்லுகிறேன்; அந்த நிலத்தில் வரும் மேல்வாரத்தைக் கோவிலுக்குச் சேர்த்துக் கொள்ளுங்கள்.

பின்னால் இதில் எங்களுக்கு எவ்வித பாத்தியமும் இல்லை என்று எழுதித் தருகிறேன்.

நீங்கள் மடத்தில் தங்கி ஓய்வெடுத்துக் கொண்டு ஊருக்குப் போகலாம் என்றார் சன்னிதானம்.

சரி என்று விடை பெற்றுக்கொண்டு மடத்திற்கு வந்து சில தினங்கள் தங்கி பிறகு சன்னிதானத்திடமும் தம்பிரானிடமும் விடை பெற்று ஊர் வந்தார்கள்.

காசினாத தம்பிரான் மார்கழி திருவிழாவை முடித்துக் கொண்டு அம்பலவாணனேந்தலுக்கு வந்து சாமி தரிசனம் செய்து உற்சவமூர்த்தியைப் பார்த்து சந்தோசப்பட்டு, எங்களுக்குத் திருவாவடுதுறை ஆதீனத்திற்குப் பதினாறு சிவஸ்தலம் இருக்கிறது. எந்தக் கோவிலிலும் இந்த அமைப்பில் சுப்பிரமணியர் இல்லை. அவ்வளவு அழகாக அமைந்திருக்கிறது என்றார்.

ஊர்ப் பெரியவர்கள் எல்லோரும் வந்து தம்பிரானை வணங்கினார்கள். எல்லோரையும் ஆசீர்வதித்து அமரச் சொன்னார்.

மருதமுத்து உடையார் பெரியவர்களை அழைத்துக் கிராமத்தில் எந்தப் பக்கத்தில் சேர்ந்தால் போல் பத்து ஏக்கருக்கு குறையாமல் நிலம் தோதாக இருக்கிறது என்று கேட்டார்.

சுப்பையா உடையார்—நாங்கள் திருவாவடுதுறையிலிருந்து வந்த உடன் அங்கு சன்னிதானம் சொல்லியனுப்பியதை ஊர்ப் பெரியவர்கள் கலந்து யோசித்தோம். தெற்கே வேட்டைக்கார வயலில்தான் யாருடைய உழவடையிலும் இல்லாமல் தரிசாக இருக்கிறது—அதைக் கொடுத்தால் நாம் சீர் செய்து கொள்வோம்.

கிராமம் பூராவும் அவர்களுடைய நிலம்தான்—நாம் எந்த இடத்தில் கேட்டாலும் அதை கொடுக்கத் தயாராக

இருக்கிறார்கள். இருந்தாலும் உழவடையில் இருக்கும் நிலத்தைக் கேட்டால் அதை உழுதுகொண்டு இருப்பவர் களுக்கு வேறு நிலம் கிடையாது. அவர்கள் சிரமப்படு வார்கள். அதனால் வேட்டைக்காரன் வயலில் உள்ள தரிசு நிலத்தையே கேட்டுப் பெறுவோம், நாம் எல்லோரு மாக அதைச் சீர்திருத்தம் செய்து கொள்வோம் என்று முடிவு செய்திருக்கிறோம் என்றார்.

இது நல்ல முடிவுதான்; வாருங்கள் நிலத்தைப் போய் பார்ப்போம்; என்று புறப்பட்டார். எல்லோருமாகப் போய் நிலத்தை நேரில் பார்த்து சுமார் பத்து ஏக்கர் நிலத்திற்குத் தம்பிரான் அடையாளம் காட்டி இந்த நிலத்தைப் பண்படுத்திப் பயிர் செய்து இதில் வரும் வருவாயைக் கோவிலுக்குச் சேர்த்துக் கொள்ளுங்கள்-மடத்திற்கு எந்தப் பகுதியும் கொடுக்க வேண்டாம்—இது உங்கள் கோவி லுக்குச் சன்னிதானம் கொடுத்த மானியம் என்று சொன்னார்.

சரி என்று எல்லோரும் ஒப்புக் கொண்டார்கள். பிறகு தம்பிரான் அவர்கள் கோவிலில் வந்து இருந்து மாலையில் ஆவுடையார் கோவிலுக்குப் புறப்பட்டார்—வழக்கம்போல் வடக்கு எல்லை வரை ஊர்ப் பெரியவர்கள் போய் வழி அனுப்பினார்கள்.

அதன் பிறகு அந்த நிலத்தை வெட்டிச் சீர் செய்து ஊரில் எல்லோருமாகச் சேர்ந்து உழுது பண்ணை சாகுபடி செய்து அதில் வரும் வருவாய் பூராவையும் சேர்த்து வழக்கப்படி எல்லா விசேஷங்களையும் செய்து, தைபூசத் திற்குப் பத்து நாள் திருவிழாவும் செய்தார்கள்.

திருவிழாவிற்கு சாமி வீதி உலா வருவதற்கு—மயில் கேடயம் அன்னம் குதிரை போன்ற வாகனங்கள் செய்து எல்லா விசேஷங்களையும் முறைப்படி செய்து வந்தார்கள்,

## 10. தேர் செய்த வரலாறு

1863ஆம் வருடம்—பங்குனி மாதம் திருவிழா நடந்து கொண்டிருந்தது—காப்புக் கட்டிய மூன்றாவது நாள் ஒரு சாமியார் வந்தார்—அவர் கோவிலுக்கு வந்து சாமி தரிசனம் செய்து கோவிலில் தங்கி இருந்தார்.

உணவருந்தும் வேளைகளில் ஊருக்குள் சென்று தனக்குத் தேவையான சாதத்தை வாங்கி வந்து கோவிலின் பின்புறமுள்ள மருத மரத்தடியில் வைத்துச் சாப்பிடுவதும் மற்ற நேரங்களில்—பல பக்திப் பாடல்களைப் பாடிக் கொண்டு கோவிலிலே இருப்பதுமாக இருந்தார்.

திருவிழாக் கடைசி உத்திரத்தன்று பால் காவடி, இளநீர்க் காவடி, அக்கினிக் காவடி வருவதைப் பார்த்துத் தரிசனம் செய்தார். பிறகு சாமி வீதி உலா வந்து கோவில் பின்புறமுள்ள மருத மர நிழலில் சாமியை இறக்கி வைத்து, குளக்கரையில்—பழநியிலிருந்து வந்து வேலுக்கு அபிஷேகம் செய்தனர்.

நீண்ட நேரம் அபிஷேக ஆராதனைகள் நடக்கும்போது சாமியார் எல்லோர் மத்தியிலும் முருகன்மேல் பல பக்திப் பாடல்களை முறைப்படி பாடினார். அனைவரும் அரோகரா அரோகரா என்றார்கள்.

சாமியார் தினமும் ஊருக்குள் சென்று சாதம் வாங்கி வந்து பசியார கோவிலிலே தங்கி இருந்தார்.

ஊர்ப் பெரியவர்கள் மாலையில் கோவிலுக்கு வந்து—குளத்தில் கைகால் சுத்தம் செய்து சாமிதரிசனம் செய்வார்கள்—பெரியவர்களெல்லாம் முன் கொட்டகையில் அமைதியாக இருந்து நெடுநேரம் நல்ல பேச்சுக்களைப் பேசிப் பிறகு வீடுகளுக்குப் போவது வழக்கம்,

பல தினங்களுக்குப் பிறகு ஒரு நாள் மாலையில் அப்பாவு உடையார் துரைச்சாமி உடையார், முத்துச்சாமி உடையார் இன்னும் சில பெரியவர்கள் சாமி தரிசனம் செய்து முன் கொட்டகையில் அமர்ந்தார்கள்.

அப்போது சாமியார் அவர்கள் அருகில் வந்தார்— அமருங்கள் சாமி என்று அப்பாவு உடையார் அவரை அமரச் சொன்னார்.

சாமியாரும் அமர்ந்து பணிவோடு ஐயா உங்களிடம் சில வார்த்தைகள் சொல்ல நினைக்கிறேன் என்றார்.

சொல்லுங்கள் சாமி—நீங்களோ சாது! பல புண்ணிய க்ஷேத்திரங்கள் போயிருப்பீர்கள். அதிலும் வயது முதிர்ந்தவர்—பல அனுபவங்களும் தெரியும்—நாங்களோ இந்தக் கிராமத்திலே கிடப்பவர்கள்—இந்த முருகக் கடவுள் பேரில் நாலு பாடல்களை வல்லின மெல்லினத்தோடு பாடத் தெரியாமல் இருக்கிறோம்.

நீங்கள் வந்ததிலிருந்து காலை மாலை இந்தப் பெருமானின்—பெருமையை மனமுருகப் பாடுகிறீர்கள். அதை எங்கள் காது குளிரக் கேட்டு ஆனந்தமடைகிறோம். சாமியார் இங்கேயே இருந்து தினம் இப்படிப் பாடினால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று நானும் முத்துச்சாமியும் பேசிக் கொண்டோம், அப்படி இருக்க நீங்கள் நினைப்பதைத் தயங்காமல் சொல்லுங்கள் சாமி என்றார் அப்பாவு உடையார்.

ஐயா, நீங்கள் எல்லோரும் சேர்ந்து இந்த முருகன் ஆலயத்தை உற்பத்தி செய்து சாஸ்திர முறைப்படி எல்லாக் காரியங்களையும் செய்கிறீர்கள்—மேலும் வருஷம் இரண்டு முறை பத்து நாள் திருவிழாச் செய்து—ஆகம முறைப்படி அதற்கான வாகனங்கள் இன்னும் தேவையான சாமான்களெல்லாம் குறையின்றித் தயார் செய்து திருவிழா நடத்துகிறீர்கள்—இந்தச் சின்ன கிராமத்தில் வாழும் விவசாயிகளான நீங்கள் ஒருவர்க்கொருவர் சொல்லுவதைக் கேட்டு

ஒற்றுமையோடு தன்னலமற்றுத் தெய்வக் காரியம் செய்வதைப் பார்த்து எனக்கு மிகுந்த சந்தோசம்.

ஆனால் திருவிழா ஒன்பதாம் நாள் காலையில் முருகப் பெருமானை அலங்காரம் செய்து ஒரு தேரில் வைத்துப் பவனி வந்தால் எவ்வளவு அழகாக இருக்கும். அது ஒன்று தான் இங்கு பாக்கி உள்ளது. அதையும் எப்படியாவது சிரமப்பட்டுச் செய்துவிட்டீர்களானால் எல்லாம் பூர்த்தி யாகிவிடும். அதைத்தான் உங்களிடம் சொல்ல நினைத் தேன்" என்றார் சாமியார்.

"சாமி! நீங்கள் சொல்லுவது ரொம்ப நல்ல காரியம் தான்—எங்கள் நிலைமை பூராவையும் நீங்களே முன்னால் சொன்னீர்கள்—முன்னால் முக்தியடைந்த பக்தர் எங்கள் அருணாசல உடையாருக்காக முருகப்பெருமான் இங்கு எழுந்தருளினார் — அப்போதிருந்தவர்கள் எப்படியோ சிரமப்பட்டு இந்தக் கோவிலை அமைத்து இவைகளை எல்லாம் உண்டாக்கினார்கள் — அவ்வைகளை விடாமல் நடத்தவே நாங்கள் தடுமாறுகிறோம்.

அடிக்கடி மழை இல்லாமல் பஞ்சம் வந்து விடுகிறது; அப்போது சோழ நாட்டுப் பக்கம் விளைந்திருக்கும் ஊர் களில் போய்க் கூலி வேலை செய்து அதைக் கொண்டுவந்து எங்கள் குடும்பங்கள் பிழைக்க வேண்டும். கோவில் தினப் பூசைக்கும் நெல்கொடுக்க வேண்டும்; நாங்கள் எல்லோருமே பஞ்சைக் குடிகள்.

அப்படி இருக்க நாங்கள் வைரத் தேர் செய்வதென் றால் அதற்கு வேண்டிய உயர் ஜாதித் தேக்குமரங்கள் வாங்கி வந்து, அதைச் செய்யும் தொழிலாளிகளைத் தேடி அழைத்து வந்து, அவர்கள் கேட்கும் ஊதியம் கொடுத்து வைரத் தேர் செய்வதென்பது எங்களால் ஆகும் காரியம் அல்லவே என்று அப்பாவு உடையார் சொன்னார்.

ஐயா, நீங்கள் சொல்வது முழுதும் உண்மை. நான் இங்கு வந்து ஒருமாத காலத்திற்குள் உங்கள் நிலவரம் பூராவையும்

நன்கு தெரிந்து கொண்டேன். ஆனால் என் மனதில் உள்ள தைச் சொல்லுகிறேன், சற்று அமைதியாகக் கேளுங்கள்.

நான் பிறந்தது சோழநாடு-திருவாரூரில் நாங்கள் கம்மாளர் இனம்-எங்கள் குடும்பம் மூன்று தலைமுறையாகக் கோவில் பணி செய்யும் ஸ்தபதி தொழிலைச் செய்து வந்தார்கள். என் தந்தையாருக்கு நான் ஒரே பிள்ளை; என் பெயர் கந்தசாமி-என்னையும் ஸ்தபதி தொழிலுக்குப் படிக்க வைத்தார்-மரவேலையில் சாஸ்திர முறைப்படி சிற்பங்கள் செதுக்குவது, வாகனம், ரதம் தேர் இவை போன்ற மர வேலைகளைக் கற்பித்துத் தேர்ச்சி பெறச் செய்தார்.

பிறகு அதைச் செய்து அனுபவம் பெற சிதம்பரத்தில்-இந்தக் கலையில் பெரும் புகழ் பெற்ற வேலு ஸ்தபதியாரிடம் என்னை அனுப்பினார், என் தந்தையார்.

வேலு ஸ்தபதியாரிடம் இருந்து கலை நுணுக்கம் அனைத்தையும் கற்று-பெரிய தேர்கள்-ரதங்கள் வாகனம் இவைகளை நானே ஆள் வைத்து செய்யும் அனுபவம் பெற்று விட்டேன்.

வேலு ஸ்தபதியார் மிகுந்த தெய்வபக்தி உள்ளவர்; பற்றற்றவர்; அவருக்கு குழந்தை இல்லை; நான் அவர்கள் வீட்டில் தங்கிச் சாப்பிட்டுக் கொண்டு அவர்கள் பிள்ளையைப் போல் எப்போதும் கூடவே இருந்தேன்; அவர் மனைவி வள்ளியம்மையார். என்னைத் தன் பிள்ளையாகவே பாவித்து வந்தார்கள்.

வேலு ஸ்தபதியார் தினம் இரவு சாப்பாட்டிற்குப் பிறகு சுமார் ஐந்து நாழிகை நேரம்—பள்ளி நடத்துவது போல் என்னை உட்கார வைத்துப் பல உபதேசங்களைச் செய்வார்—ஒரு நாள் என் தந்தையார் வந்து என் குருநாதரிடம் பையனை அழைத்துப் போய்த் திருமணம் செய்ய வேண்டும். அவனுக்கு நல்லாசி கூறி அனுப்பி வையுங்கள் என்றார்,

என் குருநாதர் 'தம்பி முருகப்பா, பையனை அழைத்து போய்த் திருமணம் செய்ய வேண்டுமென்றாய் சரி; செய்ய வேண்டியதுதான்.

ஆமாம் நாமெல்லாம் திருமணம் செய்து என்ன அள்ளிக் கட்டிவிட்டோம்; குழந்தைகளைப் பெற்று அதனுடைய பராமரிப்புக்கும் அவர்களுக்கு ஆஸ்தி சேர்த்து வைக்க வேண்டுமென்றும் மனசாட்சிக்குப் புறம்பான-பாவகாரியங் களைச் செய்து பொருள் ஈட்டுகிறோம்: நாம் ஈட்டிய பொருள்கள் அனைத்தையும் இந்த உலகில் விட்டு விட்டு—அதன் மூலம் சேர்த்த பாபங்களை மூட்டையாக எடுத்துக் கொண்டு விண்ணுலகம் போகிறோம். அங்கே இறைவன் அந்தப் பாபத்திற்குத் தகுந்த தண்டனையை நமக்கு அளித்து அதை அனுபவிக்க இந்தப் பூமண்டலத்திற்கே அனுப்பிவிடுகிறான்; இதுதானே நடந்து கொண்டிருக்கிறது.

தம்பி முருகப்பா, கந்தசாமியின் ஜாதகத்தைப் பல முறை ஆராய்ச்சி செய்து பார்த்தேன். அவன் மீன லக்கனத்தில் பிறந்திருக்கிறான். இவனது ஜாதகத்தினு டைய கிரக அமைப்புக்கள் இவன் இல்லறம் நடத்திக் குழந்தைகளோடு வாழ்வான் என்பதற்கில்லை; இவன் சன்னியாசம் மேல்கொண்டு இறைப் பழத்தை நோக்கிப் போக ஏதுவாக இருக்கிறது என்பதாக எனக்குத் தோன்றுகிறது. நீயும் சாஸ்திர ஆராய்ச்சியுள்ளவன் தானே, உன் அனுபவத்திற்கு எப்படித் தோன்றுகிறது' என்று என் குருநாதர் வேலு ஸ்தபதியார் கேட்டார்.

'அண்ணா! என் அறிவுக்கும் நீங்கள் சொல்லிய பலன் தான் தோன்றுகிறது. அதனால்தான்—வயது முப்பத்து ஒன்று ஆகியும் இது வரையிலும் அதில் கவனம் செலுத் தாமல் இருந்தேன்—எனக்கு இவன் ஒரே பிள்ளை; இவன் தாய் இப்பிள்ளைக்குக் கல்யாணம் செய்து பார்க்க வேண்டுமென்று துடிக்கிறாள்.

நான் பல காரணங்களைச் சொன்னாலும் அவள் எனக்கு ஒரு பெண் பிள்ளை இருந்தாலும் உங்களை வற்புறுத்த மாட்டேன் என்று சொல்லி இதே ஏக்கத்தில் நோய் வாய்ப்படும் நிலையில் இருக்கிறாள்.

நான் இதை எல்லாம் யோசித்து இவனுடைய விதிப்படி நடக்கட்டும். இந்த ஏக்கத்தோடு, அவள் இறந்தால் அவளுடைய ஆத்மா சாந்தியடையாது. அதுவும் நமக்கு ஒரு பாபம்தானே. நாம் உலக வழக்கத் திற்கு மாறாக இந்தக் காரியத்தைச் செய்யவில்லை; அவன் விதி திருமணம் செய்து ஆகவேண்டுமென்று இருந்தால், அதை மாற்ற நாம் யார்—என்று இறைவன் மேல் பாரத்தை போட்டு இந்த முடிவுக்கு வந்தேன்' என்று என் தந்தை சொன்னார்.

அதையெல்லாம் செவி மடுத்துக் கேட்ட என் குரு நாதர், ''முருகப்பா, நீ சொல்லுவது ஒரு வகையில் நியாயம்தான்—நாமெல்லாம் ஆண் பிள்ளைகள். நன்கு கல்வி கற்றிருக்கிறோம்; சாஸ்திரம்-உலக அனுபவம் இவைகளை எல்லாம் பார்த்து இப்படி பேசுகிறோம்: அவள் பெண்! கல்வியே இல்லை. உலக அனுபவம் அறவே தெரியாது. ஆகையால், கடைசி நேரத்தில் அவள் மனதைப் புண்படுத்தவேண்டாம். பையனை அழைத்துப் போய்த் திருமணத்தைச் செய் என்றார்.

என் குருநாதர் சொல்லியதை எல்லாம் அமைதியாகக் கேட்ட என் தந்தையார் 'நான் பார்க்கும் பெண்ணின் ஜாதகத்தைத் தங்களிடம் கொண்டு வருகிறேன். தங்கள் சம்மதத்தின் பேரில் தான் கந்தசாமியின் திருமணம் நடக்கும்' என்று சொல்லி இரண்டு தினங்கள் அங்கு தங்கி நல்ல நாளன்று ஊருக்குப் புறப்பட்டோம். அப்போது, என் குருநாதரையும் அவர்கள் மனைவியையும் வீட்டின் முன்கூடத்தில் அமரச் செய்து அவர்கள் பாதத்தில் வீழ்ந்து வணங்கி, எனக்குத் திருமணம் நடந்தால் தாங்கள் இருவரும் வந்திருந்து நடத்தி வைக்க வேண்டுமென்று

கேட்டுக் கொண்டு பிரியா விடை பெற்று ஊர் வந்தோம்.

என் தந்தையார் பல இடங்களில் பெண் பார்த்துக் கடைசியில் ஒரு பெண்ணை முடிவு செய்து அந்த ஜாதகத்தை என் குருநாதரிடம் காண்பித்து அவர் சம்மதம் சொல்லி அவரும் வந்திருந்து என்னுடைய 32-ஆவது வயதில் திருமணம் நடந்தது. என் குருநாதர் சொல்லியது போல்-எனக்கு மனைவி அமைந்து இருவரும் மனமொத்துக் குடும்பம் நடத்தி வந்தோம்.

சில ஆண்டுகளில் என் தாய் தந்தையர் சிவபதம் அடைந்தார்கள்-எங்களுக்கு குழந்தை ஏற்படவில்லை. குழந்தை வேண்டுமென்று ஆசைப்படாமல் வாழ்ந்து வந்தோம். எனக்கு நற்பத்து, ஒராவது வயதில் என் மனைவி கர்ப்பவதியானாள்.

அப்போது என் குருநாதர் சொல்லியதை யோசித்தேன். அவர் சொல்லி இருந்தார்-உனக்குத் திருமணம் நடந்தாலும் குழந்தை இல்லை—கடைசி-சன்னியாசத்தில் தான் உன்னுடைய மரணம் என்று அவர் சொன்னது ஞாபகத்திற்கு வந்தது.

இப்போது கர்ப்பமாக இருக்கிறதே என்று பலவாறு யோசித்து, எல்லாம் விதிப்படி நடக்கும் என்று முடிவு செய்தேன்.

பிறகு என் கடமைகளைச் செய்ய எங்கெங்கோ கோவில்களுக்குச் சென்று ரதம்-தேர் போன்ற வேலைகளைச் செய்வது. அதில் நியாயமாகக் கிடைக்கும் ஊதியத்தை வைத்து இருவரும் அமைதியாகக் குடும்பம் நடத்திக் கொண்டிருந்தோம்.

என் மனைவிக்குப் பிரசவகாலம் வந்தது-பிரசவத்தில் அதிக சிரமம் ஏற்பட்டுக் குழந்தை பிறக்காமல் இறந்து விட்டாள். நான் அவளுக்குச் செய்ய வேண்டிய கிரியை

களை முடித்து விட்டு என்னுடைய 42வது வயதில் நான் சன்னியாசம் தரித்து வீட்டை விட்டுப் புறப்பட்டேன்— புறப்பட்டதில் இருந்து வடக்கே காசி வரையிலும் உள்ள பல புண்ணிய சேத்திரங்களெல்லாம் போய்ச் சாமி தரிசனம் செய்து திரும்பி தெற்கே கன்னியாகுமரி வரை சென்றேன்; அதிலிருந்து ராமேஸ்வரம் வந்து அந்த ராமலிங்கத்தையும் தரிசனம் செய்து வடக்கு நோக்கி வந்து அங்கங்கே உள்ள சேத்திரங்களில் தரிசனம் செய்து வந்து கொண்டிருக்கும் போது. திருப்பெருந்துறை வந்து வணங்கி னேன்; அங்கு இக்கோவிலின் சிறப்புப் பற்றி அறிந்தேன்.

அதைக் கேட்ட மறு நாளே இங்கு வந்தேன்; வந்த உடன் குளத்தில் குளித்து சுவாமியை தரிசனம் செய்தேன். என்னையறியாமல் என்னுடைய உள்ளுணர்வு-பகவான் முருகப் பெருமானை நேரில் காண்பது போல் தோன்று கிறது. இங்கே தங்கிவிட்டேன். தினமும் விழாவில் நடக்கும், அபிஷேக் ஆராதனைகளை-என் கண்குளிரப் பார்த்து ஆனந்தமடைந்தேன்.

இதுவரையிலும் நான் போன—புனிதக்ஷேத்திரங்கள் என்று சொல்லப்பட்ட எதிலும் காணாத மன அமைதியும்-இறையுணர்வும் எனக்கு இங்கே கிடைக்கிறது. அதிலிருந்து நான் ஓர் முடிவு எடுத்திருக்கிறேன்.

பெரியவர்கள் எல்லாம் தயவு செய்து என்மீது கருணை காட்டித் தாங்கள் எல்லோரும் ஏற்றுக் கொண்டு அதை நிறைவேற்றி வைத்து என்னுடைய இந்தக் கடைசி ஆசையைப் பூர்த்தி செய்து இந்த பகவானின் அருள் எனக்குக் கிட்ட உதவவேண்டுமாறு கேட்டுக்கொள்கிறேன்'' என்று இருகரம் கூப்பி வணங்கினார் சாமியார்.

அப்பாவு உடையார் திடீரென்று சாமியாருடைய இருகைகளையும்-பிடித்துக் கொண்டு, ''என்ன சாமி இது? நீங்களோ சாது-அதிலும் வயது முதிர்ந்தவர்-காசி

முதல் கன்னியாகுமரி வரையிலுள்ள ஷேத்திரங்களுக்கெல்லாம் போய்ப் பகவானைத் தரிசனம் செய்த பெரும் புண்ணியவான்.

உங்கள் காலில் வீழ்ந்து வணங்கினால் நாங்கள் செய்த பாவம் தொலையும் மாறாக எங்களைக் கும்பிடுகிறீர்கள்? நாங்கள் இந்தப் பாபத்தை எங்கே போய்க் கழிப்பது என்று சொல்லி எல்லோரும் அவரைக் கைகூப்பி வணங்கினார்கள்

''சாமி! உங்கள் பேரில் இந்தக் கிராமத்தில் உள்ள அனைவரும்-அன்பும் பாசமும் வைத்திருக்கிறார்கள். அதனால் எங்களால் முடிந்த காரியத்தைச் சொல்லுங்கள் தடை இன்றி நிறைவேற்றி வைக்கிறோம்'' என்றார். அப்பாவு உடையார்.

ஐயா பெரியவர்களே-நான் பகவானின் அருளைப் பெற நாடெல்லாம் அலைந்து கொண்டிருக்கிறேன்: நீங்களோ இருந்த இடத்திலே கள்ளங்கபடமற்று அவனுக்குத் தொண்டு செய்து அவனுடைய அருளைப் பெற்றுக் கொண்டிருக்கிறீர்கள்; உங்களை வணங்கினால் அந்த பகவானை வணங்குவதற்கு சமம் என்று நான் நினைக்கிறேன்.

இப்போது நான் உங்களை வேண்டி விரும்பிக் கேட்பது, திருவிழா ஒன்பதாம் நாள் இந்த முருகப் பெருமானைத் தேரில் வைத்து, நாமெல்லாம் கைநோக இழுத்து வீதி வலம் வரவேண்டும். அது ஒன்றுதான் பாக்கி இருக்கிறது என்று சொன்னேன்;

நீங்கள் உங்களுடைய பொருளாதார நிலையைச் சொல்லி, அதற்கு வேண்டிய உயர் ஜாதி மரங்கள் வாங்கி வந்து சேர்த்து, அதை செய்யும் தொழிலாளியை அழைத்து வந்து ஊதியம் கொடுத்து வைரத் தேர் செய்வது எங்களால் முடியாத காரியம் என்றீர்கள்.

அதைப் பற்றி தீர ஆலோசித்து ஓர் முடிவு எடுத்தேன். நீங்கள் சொல்லுவது முற்றிலும் உண்மை. இந்தக் காரியத்தைச் செய்து முடிக்க வேறு வழியில் நான் யோசித்திருக்கிறேன்.

அதாவது தேர் செய்வதற்கு வேண்டிய விளைந்த கருவேல மரங்கள் இங்கே ஏராளமாக இருக்கின்றன. அதில் தேவையானதை வெட்டி எடுத்துக் கொள்ளலாம்; இதில் நுணுக்கமான கலைகளைத்தான் செய்ய முடியாது கலை நுணுக்கம் வேண்டாம். சாதா வேலையாகச் செய்வோம்—அதைச் செய்யும் திறனும் அனுபவமும் நம்மிடம் இருக்கிறது. நாமே செய்வோம்.

வேண்டிய சாமான்களைக் கொல்லுப் பட்டறையில் தயார் செய்து கொள்ளலாம்; உதவிக்குச் சாதாரணத் தச்சு தொழில் தெரிந்த ஒரு சிலரை இங்கு அழைத்துக் கொண்டு தேரைச் செய்து விடுவோம்-இங்கு அழைக்கும் தச்சு தொழிலாளிக்கு, தினம் ஒன்றரை பணம் சம்பளம்— கொஞ்சம் இரும்பு வகையரா தேவை. அதற்கு அதிகப் பணம் தேவைப்படாது. இதை மட்டும் நீங்கள் தயார் செய்து கொடுத்தால் நம் கையால் இந்தத் தேரைச் செய்து வைத்து இந்த பகவான் அருளைப் பெறலாம். அதற்குத் தான் உங்களிடம் அப்படிக் கேட்டேன்.

நானோ ஊரில் சாதம் வாங்கிச் சாப்பிட்டுக் கொள்வேன்-வேறு எதுவும் எனக்குத் தேவையில்லை. என்னுடைய சன்னியாசத்தை மாற்றிக் கொண்டு ஆயுதம் எடுத்து வேலை செய்ய என் மனம் துடிக்கிறது;

தயைகூர்ந்து ஊர்ப் பெரியவர்கள் கலந்து ஆலோசனை செய்து இந்த வாய்ப்பை எனக்கு நல்குமாறு கேட்டுக் கொள்கிறேன்" என்று சாமியார் பணிவோடு சொன்னார்.

சாமி, இங்கே தேர விளைந்து கருவேல் மரம் ஏராளமா இருக்கிறது.

இந்த கிராமம் ஆவுடையார்கோவில் மடத்திற்குச் சொந்தமானது.

நாங்கள் இந்த கிராமத்தில் குடி இருக்கிறோம்; நிலத்தை உழுது பயிர் செய்து அறுவடையில் மடத்திற்குச் சேர வேண்டிய பகுதியைக் கொடுத்து விட்டு மீதத்தை வைத்து நாங்கள் ஜீவியம் செய்ய வேண்டும்—மரங்களை நாங்கள் வைத்து வளர்த்தாலும்-எங்கள் தேவைக்கு வெட்டி உபயோகிக்கும் உரிமை எங்களுக்குக் கிடையாது.

இருந்தாலும்-ஊரில் நாங்கள் எல்லோரும் கலந்து யோசித்து ஒரு முடிவு செய்கிறோம். நீங்கள் கோவிலிலே இருங்கள் என்றார்—அப்பாவு உடையார்.

சரி அப்படியே செய்கிறேன்—இது பெரிய காரிய மென்று பயப்பட வேண்டாம்—மிகக் குறைந்த செலவில் நம்முடைய உழைப்பால்—இதைச் செய்து முடிப்போம் என்றார் சாமியார்.

மறுநாள்-அப்பாவு உடையார்—கருப்பையா உடையார் போன்ற பெரியவர்களை அழைத்து—என்னப்பா, சாமியார்-இப்படிச் சொல்லுகிறாரே. இதற்கு என்ன யோசனை செய்வது என்றார் அப்பாவு உடையார்.

நமது கோவில் உற்பத்தி முதல் இன்று வரை நடந் திருக்கும் காரியங்கள் எல்லாம் இப்படித்தானே நடந்து வருகிறது. நம்முடைய செயலாலும் நம்முடைய பொரு ளாலும்—எந்த வேலையைச் செய்திருக்கிறோம்; அந்தந்த நேரத்திற்கு ஒவ்வொருவர் மனதில் புகுந்து அவர்களை அழைத்து வந்துதான் அவன் வேலையை முடித்துக் கொள்கிறான் நமது முருகப் பெருமான்.

அதைப் போலவே இப்போது தேர் செய்ய ஆளை அழைத்து வந்திருக்கிறான்-அந்த நேரம் வந்து விட்டது. அதற்கான ஆள் வந்து நம்மிடம் மன்றாடிக் கேட்கிறார்.

அவருடைய வரலாற்றைக் கேட்கும் போது நமக்கே ஆச்சரியமாக இருக்கிறது. இல்லறத்தை வெறுத்து துற வறம் பூண்டு இருபத்தைந்து ஆண்டு காலம் சன்னியாச வாழ்வில் இருப்பவருக்கு நம் கோவிலுக்குத் தேர் செய்ய வேண்டுமென்பதில் ஏன் இவ்வளவு அக்கறை? நாட்டில் நமது கோவில் மட்டும்தானா இருக்கிறது.

நம் நாட்டில் பிரசித்தி பெற்ற ஆலயங்கள் ஆயிரக் கணக்காக இருக்கிறது. நம்முடைய கோவில் நாலு முழ சதுரத்தில், மண் சுவரை வைத்து அறுபது ஆண்டுகளுக்கு முன்னால் கட்டிய கூரையை மாற்றி ஒடு போடக்கூட நம்மால் முடியவில்லை. வைரத் தேர் செய்ய ஆளை அழைத்து வந்திருக்கிறார் முருகன்.

உற்சவ மூர்த்தி செய்ய ஷண்முக ஸ்தபதியார்கூட சாப்பாடு மட்டும் போடுங்கள். எனக்கு வேறு எந்த ஊதியமும் வேண்டாம் என்று சொன்னாராம்.

இவர் அதுவும் வேண்டாம்; நான் ஊரில் சாதம் எடுத்துச் சாப்பிடுகிறேன் என்கிறார். இதெல்லாம் என்ன அதிசயம்? அவனுடைய திருவிளையாடலை யார் கண்டுபிடிக்க முடியும்? நம்மால் முடியாது என்பது தெரிந்து முருகன் எப்படி ஆள் பிடித்திருக்கிறார். இனி மேல் நாம் யோசிப்பதற்கு ஒன்றுமில்லை. வேலையைத் துவங்க ஏற்பாடு செய்ய வேண்டியதுதான் என்றார். சுப்பையா உடையார்.

உன் பேச்செல்லாம் வேடிக்கையாகத்தான் இருக்கும். சரி வேலையை ஆரம்பிக்க ஓர் வழியைச் சொல்லு என்றார். அப்பாவு உடையார்.

முருகன் தேரில் பவனி வரவேண்டுமென்று ஆசை வந்து விட்டது. அதற்கான ஆளை அழைத்து வந்து விட்டார்; நாம் ஆரம்பித்தால் அதற்குத் தேவையான உதவியையும் அவரே செய்வார். இதை நம் ஊரார்

சொப்பனத்திலும் நினைக்கவில்லை, சாமியார் வலிய வந்து வற்புறுத்துகிறார்.

ஆகையால் ஊரில் எல்லோரையும் அழைத்து-விபரத்தைச் சொல்லிக் கலந்து யோசிப்போம் என்றார் சுப்பையா உடையார்.

அப்பாவு உடையார்-சுப்பையா சொல்லுவதுதான் சரி ஓர் நல்ல நாளன்று கூட்டத்தை ஏற்படுத்தி முடிவு செய்வோம் என்றார்.

1863ஆம் வருஷம் சித்திரை மாதம் 21 ந் தேதி வெள்ளிக்கிழமை எல்லோரையும் அழைத்துக் கோவிலில் கூடினார்கள். அப்பாவு உடையார் தேர் செய்வது சம்பந்தமாக—சாமியார் சொன்ன விபரங்களை எல்லோர் மத்தியிலும் விபரமாகச் சொன்னார்—இந்த விபரம் முன்னாலே எல்லோருக்கும் தெரிந்திருந்ததால்.

சின்னத் தம்பி உடையார்—ஊரில் வயதில் பெரியவர்களும் முக்கியமானவர்களுமான-அப்பாவு உடையார், கருப்பையா உடையார், முத்துச்சாமி உடையார், ஷண்முக உடையார், சுப்பையா உடையார்—நீங்கள் ஐவரும் யோசனை செய்து அதற்கான ஏற்பாட்டைச் செய்யுங்கள்-தேர் செய்வதில் நீங்கள் சொல்லுவதை நாங்கள் தட்டாமல் கேட்கிறோம் என்றார் சின்னத்தம்பி உடையார்.

அப்படியே செய்வோம். தேர் செய்வதற்கு முக்கியமான சாமான் மரம்தான்—மரம் கிடைத்து விட்டால் வேலை முடிந்ததற்குச் சமம்—இங்கு இருக்கும் கருவேல் மரத்தில் செய்யலாம் என்கிறார். ஆகையால் நாம் பத்துப் பேர் ஆவுடையார் கோவில் போய் மடம் கண்ணப்ப தம்பிரானிடம் விபரத்தைச் சொல்லிக் கேட்போம்—முன்னால் உள்ள காசினாத தம்பிரானைப் போல் இவரும் நமது கோவில் பேரில் நல்ல பற்றுதல் உள்ளவர்தான். நமக்கு வேண்டிய மரத்திற்கு இவரே அனுமதி கொடுத்தால்

நல்லது; இல்லையானால் திருவாவடுதுறைக்குப் போய்ச் சன்னிதானத்திடம் அனுமதி பெற்று வந்து வேலையை ஆரம்பிப்போம் என்றார் அப்பாவு உடையார்.

இது நல்ல யோசனை—ஓர் நல்ல நாளன்று ஆவுடையார் கோவில் போவதென்று முடிவு செய்தார்கள்.

அன்று இரவே முருகப் பெருமான், கண்ணப்ப தம்பிரான் கனவில் தோன்றி தாடி முடியுடன் வயது முதிர்ந்த சன்னியாசியைப் போல் காட்சியளித்து—கண்ணப்பா! எனக்குக் கொஞ்சம் மரங்கள் தேவைப்படுகின்றன. ஆள் வரச் சொல்லுகிறேன். அவர்களிடம் அனுமதி கொடுத்து அனுப்பு என்றாராம்.

சாமி 'நீங்களோ-சன்னியாசி' உங்களுக்கு ஏன் மரம், என்றாராம் தம்பிரான் சாமியார். நான் சன்னியாசியா குடும்பஸ்தானா என்பதை உன்னிடம் கேட்க வரவில்லை—முடியும்—முடியாது என்பதைச் சொல் என்றாராம்.

அதைக் கேட்ட தம்பிரான்—சாமி கோபப்பட வேண்டாம்—தங்களுக்குத் தேவையான மரத்தைத் தடை இன்றித் தருகிறேன் என்று சொன்னதோடு விழித்துக் கொண்டு—தம்பிரான் நாம் இப்படி கனவு கண்டிருக்கிறோமே; இதற்கு என்ன அர்த்தம் என்று பலவாறு யோசித்து ஒன்றும் புரியாமல் பிறகு பகவானைப் பிரார்த்தித்து நித்திரை செய்தார்.

காலையில் எழுந்து காலைக் கடன்களை முடித்துக் கொண்டு—ஆத்மனாத நம்பியாரை அழைத்துத் தான்? கண்ட கனவைச் சொன்னார். நம்பியார் நெடு நேரம் யோசித்து சன்னியாச ரூபத்தில் வருவது முருகப் பெருமான் தான், அதில் சந்தேகமில்லை. ஆனால் மரம் கேட்டது தான் புரியவில்லை. சரி சீக்கிரம் இதற்கு விபரம் தெரியும், நீங்கள் குழம்பவேண்டாம்—அவரிடமே வேண்டியதைத் தருகிறேன் என்று சொல்லி விட்டீர்கள். உங்கள் மேல்

தவறில்லை. நீங்கள் அமைதியாக இருங்கள் என்றார். ஆத்மநாத நம்பியார்—சரி எல்லாம் அந்த ஆண்டவனின் அருள்படி நடக்கட்டும் என்று தம்பிரானும் அமைதி யடைந்தார்.

நல்ல நாள் பார்த்து சித்திரை மாதம் 27ந் தேதி ஊர்ப் பெரியவர்கள் பத்துப் பேர் கோவிலுக்கு வந்து சாமி தரிசனம்செய்து ஆவுடையார் கோவிலுக்குப் போனார்கள்: அங்கு போய் வெற்றிலை பாக்கு—கற்கண்டு எலுமிச்சம் பழம் இவைகளை வாங்கி ஓர் தட்டில் வைத்துக் கொண்டு மடத்திற்குப் போய்த் தம்பிரான் முன் வைத்து வணக்கம் செலுத்தினார்கள். அவர் எல்லோரையும் ஆசீர்வதித்து அமரச் சொன்னார்.

அப்பாவு உடையார் தேர் செய்வது சம்பந்தமான விபரம் பூராவையும் சொல்லி இதற்கு எங்கள் கிராமத்தில் உள்ள மரங்களில் அதற்குத் தேவையான மரத்தைத் தாங்கள் கொடுத்து உதவ்வேண்டும் என்றார்.

அதைக் கேட்ட கண்ணப்ப தம்பிரான் 'அப்பாவு, இதை ஒருவாரத்திற்கு முன்பே உங்கள் முருகப் பெருமான் வந்து எனக்கு மரம் வேண்டும், கொடு, ஆள் அனுப்பு கிறேன் என்று சொல்லிவிட்டார்.

நீங்கள் வைத்து வளர்த்த மரமாக இருந்தாலும் என்னிடம் கேட்டுச் செய்ய வேண்டியதிருப்பதால், நான் மறுப்பு சொல்லுவேனோ என்று முன்கூட்டியே எச்சரிக்கை செய்து உண்டா இல்லையா என்று கேட்டார்.

அதைச் சொல்லும்போது உடம்பெல்லாம் புல்லரிக் கிறது அங்கு அமர்ந்திருக்கும் முருகப்பெருமான் சாமான் யப்பட்டவர் அல்ல. தேர் செய்ய ஆள் கொண்டு வந்திருப் பதைப் பார்த்தால் நம் அறிவுக்கு ஒன்றுமே புலனாக வில்லை. அவனுடைய சக்தியையும் ஆற்றலையும் கண்டு பிடிக்கும் திறன் நமக்கு ஏது?

மண் சுவராலான கூரைக் கட்டிடத்தில் கோவில் இருக்கிறது; வைரத்தேர் செய்ய ஆள் கொண்டு வந்திருக்கிறார்—பல இடங்களில் பெரிய கோவிகளில் கூடத் தேர் இல்லாமல் ஓர் சட்டத் தேரில் சாமியை வைத்து இழுக்கிறார்கள். மனித வாழ்க்கையில்கூட இரண்டு ரகம். ஒரு சாரார் தன்னிடம் உள்ள பொருள் சக்தி எல்லாவற்றையும் செலவழித்துப் பற்றாக்குறைக்குக் கடனும் வாங்கிப் பெரிய வீட்டை முதலில் கட்டுவார்கள்: ஆனால் வீடு அழகாக இருக்கும்; பின்னால் வாழ்க்கையில் ரொம்ப சிரமப் படுவார்கள் இன்னொரு சாரார்.

குடும்பத்திற்குத் தேவையான சின்ன காரியங்கள் பூராவையும் முடித்து கடைசியில் தன்னுடைய தேவைக் கேற்பக் கட்டிக் கொண்டு சுகமாக வாழ்வார்கள்—இதில் இரண்டாவது சாரார் முறைதான் நல்லது என்று நான் நினைக்கிறேன். அதைப் போலத்தான் உங்கள் கோவிலை நடத்துகிறார் அந்த முருகப்பெருமான்.

கோவிலை எப்போது கட்டப் போகிறாரோ இன்னும் என்னென்ன வேலைகள் பாக்கி இருக்கிறதோ நமக்கு என்ன தெரியும்? ஆகையால் உங்களுக்குத் தேவையான மரத்தை வெட்டித் தேரைச் செய்யுங்கள். மேலும் ஏதேனும் என்னுடைய உதவி தேவைப்பட்டாலும் தடையின்றி நான் செய்யக் கடமைப்பட்டிருக்கிறேன். அன்று என் கனவில் உண்டா இல்லையா என்று அதட்டி கேட்டதை என் ஆயுள் பரியந்தம் மறக்க மாட்டேன்—இந்தப் புண்ணிய காரியத்தைச் சாமியாரைக் கொண்டு சுணக்காமல் செய்து முடியுங்கள். எல்லோரும் மடத்திற்குப் போய் சாப்பாட்டை முடித்துக் கொண்டு மாலையில் ஊருக்குப் போய் சேருங்கள் என்று விடை கொடுத்தார் கண்ணப்பதம்பிரான். அனைவரும் தம்பிரானுக்கு வணக்கம் செலுத்தி மடத்திற்கு வந்து சாப்பிட்டு மாலையில் ஊர் வந்தார்கள்.

மறுநாள் எல்லோரையும் அழைத்துத் தாங்கள் ஆவுடையார் கோவில் போய்த் தம்பிரான் சாமியிடம்

கேட்டு வந்த தகவலை விபரமாக ஷண்முக உடையார் சொன்னார்.

பிறகு சாமியாரிடம், 'சாமி நமக்குத் தேவையான மரங்களை வெட்டிக் கொள்ளும்படி தம்பிரான் உத்தரவு கொடுத்து விட்டார். இனி நாம் என்ன செய்ய வேண்டு மென்பதைச் சொல்லுங்களென்றார் அப்பாவு உடையார்.

சாமியார் "ஐயா, நமது வேலைக்குத் தேவையான மரங்களை நான் பார்த்துச் சொல்லுகிறேன்; முதலில் அவை களை வெட்டித் தேவைக்கேற்ப அறுத்து வைக்க வேண்டும்- சுமார் இரண்டு மாத காலங்களில் அதில் உள்ள ஈரம் உலர்ந்து விடும்.

பின்பு நாம் வேலையை ஆரம்பித்து சுணக்காமல் தொடர்ந்து பார்க்கலாம். நாளையே ஊரைச் சுற்றிப் பார்த்துத் தேவையுள்ள மரங்களை அடையாளம் செய் வோம். பின்பு ஓர் நாள் பார்த்து அமாவாசைக்கு முன் வளர்பிறையில் மரத்தை வெட்டி விடுவோம். தேவையான மரம் பூராவும் வந்து விட்டால் வேலை முடிந்த மாதிரி என்றார் சாமியார்.

சரி அப்படியே செய்வோமென்று பஞ்சாங்க ஐயரிடம் போய் விபரத்தைச் சொல்லி நாள் பார்க்கச் சொன்னார் கள், அதைக் கேட்ட ஐயர் மிக சந்தோசப்பட்டு உங்கள் சக்திக்கு மீறிய மிகப் பெரிய காரியம்—அவர்தான் உங்கள் கூட இருந்து முடித்து வைக்க வேண்டும். அவர்தான் இப்போதே நம் போன்ற முட்டாள்களுக்குப் புரியும்படி காண்பித்திருக்கிறாரே, தம்பிரானிடம் போய் சொல்லி எளிதில் காரியத்தைத் துவக்கிவிட்டார்.

வைகாசி மாதம் மூன்றாம் தேதி அருமையான நாளாக இருக்கிறது—காலை பத்து நாழிகைக்கு மேல்-பதினாறு நாழிகைக்குள் முகூர்த்தம் செய்து ஓர் மரத்தை வெட்டி விடுங்கள் என்றார்,

அதன்படி வைகாசி மாதம் மூன்றாம் தேதி பத்து நாழிகைக்கு ஊரில் எல்லோரும் போய் ஓர் மரத்தடியில் வெற்றிலைபாக்கு, பழம் வைத்து தேங்காய் உடைத்து பத்தி கொளுத்தி சாம்பிராணி போட்டு எல்லோரும்—முருகக் கடவுளைத் தியானம் செய்து, முதலில் அப்பாவு உடையார் கோடரியால் மூன்று வெட்டுகள் வெட்ட எல்லோரும் மூன்று வெட்டு கோடரியால் வெட்டி முகூர்த்தம் செய்து அந்த மரத்தை வெட்டினார்கள்...மரம் சாய்ந்த உடன் பிரசாதம் காப்பரிசி எல்லோருக்கும் வழங்கினார்கள்.

மறுநாள் முதல் ஊரில் ஆண்கள் அனைவரும் இரவு பகலாக வேலை செய்து தேருக்கு வேண்டிய கருவேல் மரங்கள் பூராவும் வெட்டி வண்டிகளில் ஏற்றி வந்து ஓரிடத்தில் சேர்த்தார்கள்.

சாமியார்—''ஐயா! நமக்குத் தேவையான மரங்கள் பூராவும் வந்து விட்டது—இவைகளைக் கணக்குப்படி—அறுப்பதற்கு அறுவைகார மலையாளத்து ஆட்கள் இரண்டு ஜோடியைய அழைத்து வந்து மரங்களை அறுத்து வைத்தால் தான் சீக்கிரம் உலரும்; ஆவணியில் நாம் வேலை ஆரம்பிக்கலாம் என்றார்.

அதைக் கேட்டவுடன் அப்பாவு உடையார்— அதற்கு முதலில் ஆள் அனுப்புவோம் என்று—முத்துச்சாமிஉடையார், ஷண்முக உடையார் இருவரையும் அழைத்து—நீங்கள் இருவரும் மரம் அறுப்பவர்கள்—எங்கு வேலை செய்கிறார்கள் என்பதை விசாரித்து இரண்டு ஜோடி ஆட்கள் அழைத்து வாருங்கள் என்றார். அவர்களும் சரி என்று ஒப்புக் கொண்டார்கள்.

மரக் குவியலுக்குப் பக்கத்தில் ஊர்ப் பெரியவர்களெல்லாம் நின்றார்கள். அப்போது—சாமியார் — அப்பாவு உடையாரைப் பார்த்து—நமக்கு வேண்டிய மரங்களெல்லாம் வந்துவிட்டது. இருந்தாலும் இன்னும் கொஞ்சம்

முயற்சி செய்து அந்த முறையில் செய்து விட்டால் கவலையே இல்லை என்றார்.

என்ன சாமி! அதையும் சொல்லுங்கள் என்றார் அப்பாவு உடையார்.

நாலு சக்கரத்தையும் சுத்தமான வாகை வைரத்தில் செய்து விட்டோமானால் நீண்ட காலத்திற்கு உழைக்கும் சக்கரம்தான் மேலே உள்ள சகல பாரத்தையும் தாங்கி உருள வேண்டும் என்றார் சாமியார்.

அப்படியானால் அதற்கு எப்படி மரம் வேண்டுமென் பதை சொல்லுங்கள், முயற்சி செய்வோம் என்றார் அப்பாவு உடையார்.

ஐயா அதற்குத் தச்சு 2½ முழுநீளம் அரை முழு சதுரம் வாகைமரத்தில்—சுத்தமான வைரமாக இருக்க வேண்டும்; வெள்ளாடை என்பது சிறிதும் இல்லாமல் கிடைத்து, செய்து விட்டால் நல்லது என்றார் சாமியார்.

அப்படியானால் சாப்பாட்டிற்கு மேல் புறப்பட்டு நம் ஊரில் உள்ள மரங்களைப் பார்ப்போம் என்றார் அப்பாவு உடையார்.

உணவருந்தியவுடன் எல்லோரும் புறப்பட்டு ஊரில் உள்ள மரங்களைப் பார்த்தார்கள்.

அந்த அளவுக்குள்ள மரம் ஒன்றுதான் இருந்தது; இதில் இரண்டு சக்கரத்திற்கு எடுக்கலாம்—இதைப் போல் இன்னும் ஒரு மரம் கிடைத்தால் போதும் என்றார் சாமியார்.

எல்லோரும் கோவிலுக்கு வந்துஅமர்ந்தார்கள்; இதற்கு என்ன யோசனை செய்வது என்றார் அப்பாவு உடையார்; இன்னும் ஒருமரம் போதும் என்று சாமியார் சொல்வதால் சிரமப்பட்டாவது தயார் செய்து விட வேண்டும்—இதை விடக் கூட சற்று பெரிதாக — காட்டுப்பிராமணவயல்

கிராமத்தில் இருக்கிறது நான் பார்த்திருக்கிறேன்; அங்கு இருப்பவர்களெல்லாம்; நம் குலத்தவர்கள்; அவர்களைக் கேட்டால் கொடுப்பார்கள்: கேட்பதும் நமக்கல்ல; இந்த ஆண்டவனுக்குத் தேர் செய்ய; அந்தத் தேரிலும் முக்கிய மான சக்கரத்திற்கு, அதைக் கொடுப்பவர்களுக்குப் பெரும் புண்ணியம்; போய் கேட்போம். கேட்பது நம் கடமை; கொடுத்தாலும் இல்லை என்றாலும் அவனைச் சேர்ந்தது என்றார் முத்துச்சாமி உடையார்.

இது சரியான யோசனை; மாலையில்—சாமியாரை யும் அழைத்துக் கொண்டு போய் முதலில் மரத்தைப் பார்த்துப் பிறகு யோசிப்போம் என்றார் அப்பாவு உடையார்.

அதன்படி மாலையில், சாமியார் அப்பாவுஉடையார் முத்துச்சாமி உடையார் இன்னும் சில பெரியவர்கள்—காட்டுப் பிராமணவயலுக்குப் போய்—மரத்தைப் பார்த் தார்கள்; பார்த்தவுடன் சாமியார்—அதைவிட இதுரொம்ப நல்ல மரம் வயது கூடுதலாக உள்ளது. நிறைய வைரம் இருக்கும் என்றார்.

மரம் யாருடையது என்பதைப் பக்கத்தில் நின்று பெரியவரிடம் விசாரித்தார்கள்—அவர் இந்த மரத்திற்கு உடையவன்—தெற்குக் கடைசி வீடு பெயர்—பொதிய உடையார் என்றார்.

எல்லோரும் அவர் வீட்டுக்குப் போனார்கள்; எல்லோ ரையும் வரவேற்று அமரச்சொன்னார் பொதிய உடையார். எல்லோரும் அமர்ந்தார்கள்—தாங்கள் வந்த வேலையை விபரமாகச் சொன்னார் அப்பாவு உடையார்.

அந்த விபரங்களைக் கேட்டவுடன்—பொதிய உடை யாருக்கு சற்று முகம் கருத்து விட்டது. அவர் மனதை அடக்கி அமைதியாக, ஏனைய்யா உங்களுக்கு வேறு வேலை இல்லையா?

ஒரு கோவிலை வைத்துக் கொண்டு—வருஷா வருஷம் அதைச் செய்கிறோம்—இதைச் செய்கிறோம் என்று பக்கத்தில் உள்ளவர்களையும் பிராணனை வாங்குகிறீர்கள். இப்படி எல்லாம் எங்கள் உயிரை வாங்கியா வேலை செய்யச் சொல்லுகிறார் உங்கள் ஆண்டவன்?—தங்களால் முடிந்ததைச் செய்ய வேண்டும்—முடியாததை விட்டுவிட வேண்டும்—ஆசைக்கு ஓர் அளவில்லை. உங்கள் கோவிலுக்கு வைரத் தேர் தேவையா?—எவ்வளவோ பெரிய கோவிலி லெல்லாம் சட்டத் தேர்தான் இருக்கிறது. இந்தக் குட்டிக் கோவிலுக்கு வைரத்தேர் செய்ய ஆரம்பித்து விட்டீர்கள்—அதற்கு நாங்களா கிடைத்தோம்? இரண்டு சோடி மாட்டிற்கு—ஆறு மாதத்திற்குத் தழை வெட்டிப் போடும் மரத்தை—நாவு கூசாமல் கேட்க இத்தனை பேர் வந்து விட்டீர்கள்?'' என்றார் பொதிய உடையார்.

அப்பாவுஉடையார் அமைதியாக—''பொதியா! இந்தப் புண்ணியத்தை எங்கள் மூலமாகப் பெறுவதற்கு உனக்கு பிராப்தம் இல்லை என்றால், எங்களை உதாசீனப்படுத் தாதே உன்னைப் போன்றவர்கள் உதாசீனப்படுத்துவதும் உயர்ந்தவர்கள் பாராட்டுவதும் எங்களுக்கு இரண்டும் ஒன்றுதான்—ஏன் இது இரண்டுமே எங்களைச் சேர்ந்ததல்ல—எங்கள் ஆண்டவனைச் சேர்ந்தது. அவன் எங்கள். மனதி னுள் இருந்து இயக்குகிறபடியே நாங்கள் இயங்குகிறோம்—லாப நஷ்டம் எங்களுக்கல்ல என்று சொல்லி—ஊருக்குப் புறப்பட்டார்கள்.

வழியில் நடந்து வரும்போது—சாமியார் என்ன ஐயா அங்கு இருப்பவர்கள் எல்லோரும் நம் குலத்தவர்கள்; இல்லை என்னாது கொடுப்பார்கள் என்றீர்கள்—இல்லை என்று ஒரு வார்த்தையில் சொல்லி இருக்கலாம்-மாறாக எல்லோர் மனதையும் புண்படுத்தி விட்டார்—அதையும் பொறுத்துக் கொண்டு—ஐயா அவர்கள் இகழும் புகழும்—எங்களைச் சேர்ந்ததல்ல; இரண்டும் அவனைச் சேர்ந்தது என்றார்கள்—இது பெரிய தத்துவம்—ஞானிகள் கடைப்

பிடிக்கும் முறை; நீங்களெல்லாம் இல்லறம் நடத்தும் விவசாயிகள் - உங்களிடம் இவ்வளவு பெரிய பொறுமையை யும்—தெய்வ நம்பிக்கையையும் கொடுத்திருக்கிறான்.

உலகில் பலர் புகழை விரும்பி சில காரியங்களை செய் வார்கள்—அதை பலர் புகழ்வார்கள்—அது புண்ணிய காரிய மாக இருந்தாலும்—புகழ் கிடைத்தால் புண்ணியம் அறவே கிடைக்காது என்றுதான் சாஸ்திரம் கூறுகிறது.

புண்ணிய காரியத்தில் பலர் இகழ்ந்தால்—நிச்சயம் பலன் கிடைத்து விட்டது. ஆண்டவன் அவர்களை தன் னுடைய அருள் பார்வையால் நோக்குகிறான் என்பது பொருள்.

அதைப்போல இவருடைய இகழ்—உங்களை ஆண்டவன் அருள் பாலிக்கிறான் என்பது தெளிவாகப் புரிந்துவிட்டது. !

ஆனாலும் உங்கள் குட்டிக் கோவிலுக்கு வைரத்தேர் தேவையா என்கிறாரே அதுதான் தாங்க முடியாத துயரம்; அந்த ஆண்டவன்—எனக்கு வைரத்தேர் தேவையில்லை— உனக்கு இந்த மரமும்-அதைக் கொண்டு வளர்க்கும் மாடும் தேவையா என்று நினைத்து விட்டால் இவரால் தப்ப முடியாதே என்றார் சாமியார்.

அப்போது இரண்டு ஊருக்கும் இடையில் உள்ள 4 பர் லாங்கும் கடந்து ஊரை அடைந்தார்கள்—சரி எல்லோரும் சென்று சாப்பிடுங்கள் காலையில் பேசிக் கொள்வோம் என்றார் அப்பாவு உடையார்.

மறுநாள் காலையில் எல்லோரும் கோவிலுக்கு வந்தார் கள்—அப்பாவு உடையார்—என்னப்பா நேற்று போனது தான் சரியாக வரவில்லை. இன்னும் ஒருமரம் வேண்டுமே என்ன செய்வோம் என்றார்.

முத்துசாமி உடையார்—இன்னும் நம் அருகாமையில் உள்ள ஊர்களில் சுற்றிப் பார்ப்போம்—நம் அளவுக்கு—

காணக்கூடிய மரம் கிடைத்தால்—கேட்டுக் கொண்டு வருவோம் என்றார்.

அப்பாவு உடையார் 'அதுவும் சரி; உன்னுடன் கூட இரண்டு ஆட்களை அழைத்துக் கொண்டு அருகாமையில் சுற்றிப் பார். ஆண்டவன் வழிவிடுவார். நான் பாக்கி ஆட்களை கொண்டு இந்த மரத்தை வெட்டுகிறோம் என்று சொல்லி சாப்பாட்டுக்கு மேல் எல்லோரும்—கோடரியுடன் வாருங்கள்; உள்ளூரில் பார்த்த மரத்தை வெட்டவேண்டும் என்றார்.

அதன்படி சென்று மரத்தை வெட்டினார்கள். இரண்டு தினங்கள் சென்றன. மூன்றாவது நாளிலிருந்து பொதிய உடையாருடைய வாகை மரத்தில் உள்ள இலைகள் பழுத்துக் காம்போடு உதிர ஆரம்பித்தது. மேலும் மூன்றாவது நாள் அவருடைய வண்டிமாட்டில் ஒன்று, கட்டி இருந்த இடத்தில் திடீரென்று விழுந்து காலை வெட்டிக் கொண்டு வெகு சீக்கிரம் இறந்து விட்டது. வாயிலும் மூக்கிலும் ரத்தம் கொட்டியது. எல்லோரும் ஓடிவந்து பார்த்தார்கள் —இது என்ன ஆச்சரியம்—சற்று நேரத்திற்கு முன்னால் தானே, அசை போட்டுக் கொண்டு படுத்திருந்தது. ஏதோ விஷம் தீண்டி இருக்கிறது; அதனால்தான் இவ்வளவு சீக்கிரம் முடிந்துவிட்டது. அதற்குத்தான் வாய் மூக்கில் ரத்தம் கசியும் என்று பேசி முடித்தார்கள்.

ஒருவாரத்தில் மரத்தில் இருந்த தழைகள் பூராவும் கொட்டி மரத்தடியில் போராகக் குவிந்து விட்டது: பழுத்து விழும் இலையை ஒன்று 'விடாமல் மாடுகள் தின்று விடுவது வழக்கம்—இந்த இலையை மாடுகள் முகர்ந்து கூடப் பார்க்க வில்லை— ஊர் ஜனங்கள் ஆச்சரியமாகத் தினந்தோறும் சென்று பார்த்தார்கள்—அதைக் கேள்விப்பட்ட—எண்பது வயதிற்கு மேலுள்ள பெரியவர் துரைச்சாமி உடையார் தடியை ஊன்றிக் கொண்டு போய்ப் பார்த்து—ரொம்ப நேரம்யோசித்தார்,

உடையவரை அழைத்து—ஏன்டா பொதியா—ஏன் இப்படிப் பத்து தினத்திற்குள் இலைகள் பூராவும் உதிர்ந் திருக்கிறது - இப்போது இலையுதிர் காலமல்லவே— நன்றாகத் துளிர்விட்டு இருக்கிறது, ஏன் இப்படி? என்றார்.

"என்னமோ தெரியவில்லை பெரியப்பா! அந்த சண்டாளர்கள் அன்று வந்து வாய் வைத்துக் கேட்டுப் போனார்கள்—மூன்றாவது நாளிலிருந்து இப்படி ஆகி விட்டது" என்றார்.

யாரடா கேட்டது? என்ன கேட்டார்கள்? விபரமாகச் சொல்லு என்றார் துரைச்சாமி உடையார்.

பொதிய உடையார்—பத்து தினங்களுக்கு முன்னால் அம்பலவாணனேந்தலில் இருந்து ஐந்தாறு ஆட்களும் ஒரு சாமியாரும்—வந்து எங்கள் கோவிலுக்கு வைரத்தேர் செய்கிறோம்—அதற்கு வேண்டிய கருவேல் மரங்கள் பூராவும் எங்கள் ஊரில் வெட்டிச் சேர்த்து விட்டோம். சக்கரம் மட்டும் வாகை வைரத்தில் செய்ய வேண்டுமாம்; இந்த சாமியார்தான் செய்கிறார்கள்—அதற்கு தேவையான மரம் எங்கள் ஊரில் ஒன்று தான் இருந்தது. இன்னும் ஒன்று தேவைப்படுகிறது. அதற்கு வேண்டிய அளவுப்படி உங்கள் மரம் இருக்கிறது, இதைக் கொடுங்கள் என்றார்கள்.

அதைக் கேட்டவுடன் எனக்குக் கோபம் வந்துவிட்டது. உங்களுக்கு வேறு வேலை இல்லை. ஒரு கோவிலை வைத்துக் கொண்டு பக்கத்தில் உள்ளவர்கள் உயிரை வாங்குகிறீர்கள் என்று கன்னாபின்னா என்று திட்டிவிட்டேன். அத்துடன் மூச்சு விடாமல் போய் விட்டார்கள் என்றார்.

அதைக் கேட்ட துரைச்சாமி உடையார்—அடா! அறிவு கெட்டவனே! உன் குடும்பத்திற்கே அழிவைத் தேடி விட்டாயடா; அவர்கள் கேட்டது யாருக்கு?

நீ அவர்களையா உதாசினப்படுத்தினாய்-நீ உதாசினப் படுத்தியதெல்லாம் அந்த ஆண்டவனை - அவனாலே பொறுக்க முடியவில்லை-மரத்தைப் பட வைத்தான்; அந்தத் தழையை போட்டு வளர்த்த மாட்டையும் கொன்று விட்டான்-இனி எந்த மரத்தில் தழை வெட்டி ஆறுமாதத் திற்குப் போடுவாய்-இனி இருப்பது இந்தக் குழந்தை குட்டிகள்—அதையும் என்ன செய்யப் போகிறாரோ.

மரியதையாக இப்போதே ஓடிப் போய் அவர்கள் காலில் விழுந்து—நான் தெரியாமல் சொல்லி விட்டேன்— மரத்தை வெட்டிக் கொள்ளுங்கள் என்று மன்னிப்புக் கேட்டு அவர்கள் கையால் விபூதி வாங்கவில்லையேல் உன் குடும்பமே அழிந்து போகும் என்றார் துரைச்சாமி உடையார்.

பொதியர்—பெரியப்பா, நான் முட்டாள்தான், எனக்கு இவ்வளவு தெரியவில்லை—மரத்தின் மேல் உள்ள ஆசை யால் அறிவு கெட்டுப்போய் அவர்களைத் திட்டிவிட்டேன்.

இப்போது நான் மட்டும் போனால் என்னை அவர்கள் மன்னிப்பார்களா என்பது சந்தேகம்; அந்த அளவுக்குக் கொடுஞ் சொற்களால் அவர்களைத் திட்டிவிட்டேன்; ஆகையால் நீங்களும் வாருங்கள் என்றார். இருவரும் போனார்கள்.

பொதியா, ஊருக்குள் போய் அப்பாவு, சுப்பையா, முத்துச்சாமி இன்னும் பெரியவர்களை எல்லாம் கோவிலுக்கு அழைத்துவா என்றார். அதன்படி ஊருக்குள் போய் முக்கியப்பட்ட பெரியவர்களை எல்லாம் தேடிக் கோவிலுக்கு அழைத்து வந்தார். எல்லோரும் வந்த உடன் துரைச்சாமி உடையாரை வரவேற்று அமர்ந்தார்கள்.

எல்லோரையும் முன்னால் வைத்து இருவரும் வீழ்ந்து கும்பிட்டார்கள்; அதைப் பார்த்த உடன் திடுக்கிட்டு எல்லோரும் எழுந்து துரைச்சாமி உடையாரை இரண்டு

கையையும் பிடித்துக்கொண்டு என்ன செய்தீர்கள்; உங்கள் வயதென்ன எங்களைக் கும்பிடலாமா என்று சொன்னார்கள்.

அப்பா வயத்திற்கு—உருவத்திற்கு மாமரியாதை—புத்திமான் பலவான்—அன்று முன்னாலே சொல்லி இருக்கிறார்கள்.

அன்று நீங்கள் எங்கள் ஊருக்கு வந்து—இந்த மடையனிடம் தேர் செய்வதற்கு மரம் கேட்டிருக்கிறீர்கள்; உருவத்தில் எருமையைப் போல் இருக்கும் இந்த முட்டாள் என்ன சொன்னான்; உங்களை உதாசீனப்படுத்தி அனுப்பினான்; நீங்கள் பொறுமையோடு வந்து உங்கள் வேலையைச் சுணக்காமல் பார்க்கிறீர்கள்.

ஆனால் இந்த ஆண்டவன் பொறுக்கவில்லையே; பொறுக்கமாட்டான்—ஏன் தன்னைத் தீயவார்த்தைகளால் திட்டினாலும் — உதாசீனப்படுத்தினாலும் பொறுத்துக் கொள்வான் — தன்னுடைய உண்மையான தொண்டனையோ — பக்தனையோ — உதாசீனப்படுத்தினாலும் துன்புறுத்தினாலும்—கணநேரம் பொறுக்க மாட்டான்; உடனே அவர்களைத் தண்டிப்பான் என்பதை நான் புராணங்களில் படித்திருக்கிறேன்.

'அதை நிரூபித்துக் காண்பித்து விட்டார் இந்த முருகப் பெருமான் — உங்களைத் திட்டியனுப்பிய மூன்றாவது நாளே மரத்தில் உள்ள இலைகள் பூராவும் உதிர்ந்து பட ஆரம்பித்து விட்டது. அந்தத் தழையை ஆறு மாதத்திற்குப் போட்டு மாடு வளர்க்கிறேன் என்று சொன்னானே அந்த மாடும் செத்துவிட்டது—மாடு இருந்தால்தானே தழை தேவைப்படும் என்று செய்து விட்டார்.

நீங்களெல்லாம் அவனை மன்னித்து விடுங்கள். இருக்கும் பிள்ளை குட்டிகளாவது மிஞ்சட்டும்; நீங்கள் கேட்டபடி அந்த மரத்தை வெட்டி வந்து இந்தப் பெருமானுக்குத் தேர் செய்யுங்கள் என்று இருகரம் கூப்பி வணங்கினார் துரைச்சாமி உளையார்.

அப்பாவு உடையார்—"அண்ணா! இந்த ஆண்டவன் பொருட்டுப் பல இடங்களுக்குச் சென்று யாசிப்பது எங்களுக்கு வழக்கமாகி விட்டது. நாங்களாக—அவரை மன்னிக்கவோ—மரத்தை வெட்டி வரவோ அருகதை உள்ளவர்கள் அல்ல.

ஆனால் ஒன்று செய்வோம்-அவரை நீ மன்னிக்கிறாயா, அந்த மரத்தை வெட்டி வந்து தேர் செய்யவா? அப்படி என்றால்-இன்ன நிறம் உள்ள பூ கொடு-இல்லை அவரை மன்னிக்க மாட்டேன். அந்த மரம் வேண்டாம் என்றால் இன்னநிறம் உள்ள பூக் கொடு என்று இரண்டு வகைப் பூவை கட்டி அவர் பாதத்தில் வைத்து-எல்லோரும் வீழ்ந்து வணங்கி-பண்டாரம் கையில் ஒரு பொட்டலத்தை எடுத்து வரச்சொல்லிப் பார்ப்போம்; அவர் என்ன உத்தரவு கொடுக்கிறாரோ அதன்படி நடப்போம் என்றார் அப்பாவு உடையார்.

கொஞ்சநேரம் எல்லோரும் அமைதியாக இருந்தார்கள்; முத்துச்சாமி உடையார்—அப்பாவு உடையார் சொல்லுவதுதான் சிறந்த வழி—நாங்களாக எதையும் சொல்ல முடியாது என்றார்.

சரி குற்றத்தை உணர்ந்து திருந்தியவர்களை உடனே மன்னிப்பதுதான் ஆண்டவனுடைய இயல்பு. கடவுளும் மன்னிக்கமாட்டான் என்ற அளவுக்கு குற்றம் செய்த அருணாகிரி தான் செய்தது முழுமையும் குற்றம் என்று உணர்ந்த உடனே அவரை மன்னித்துக் காப்பாற்றிய முருகன்தான் இவன். அப்படியே செய்யுங்கள் என்றார் துரைச்சாமி உடையார். இந்த பேச்சை கேட்ட ஊர் மக்கள் கோவிலில் கூடிவிட்டார்கள்.

உடன் வெள்ளி சிவப்பு இரண்டு நிறமுள்ள பூக்களை பறித்து வந்து மன்னித்துவிட்டேன், மரத்தை வெட்டி வா என்றால் வெள்ளை நிறப் பூக்கொடு மன்னிக்கவில்லை. மரம் வேண்டாம் என்றால், சிவப்பு நிறப் பூக்கொடு என்று

எல்லோருக்கும் தெரியும்படி—பச்சை இலையில் தனித் தனியே ஒரே மாதிரியாக இரண்டு பொட்டலங்கள் கட்டி பண்டாரத்தை அழைத்து—இதை சுவாமி பாதத்தில் வைத்து கற்பூர ஆராதனை செய்து ஒரு பொட்டலத்தை எடுத்து வா என்றார் அப்பாவு உடையார்.

அதன்படி பண்டாரம் பொட்டலங்களை சுவாமி பாதத்தில் வைத்து கற்பூர ஆரத்தி காண்பித்து ஒரு பொட்டலத்தை எடுத்து வரும்போது சுவாமி அருள் வந்து பெரும் அலர் போட்டு பொதிய உடையார் தலையில் ஓர் அடி அடித்து என்னை யாரென்று நினைத்தாய்?

உங்கள் குட்டிக் கோவிலுக்கு வைரத் தேர் தேவையா— என்று என் மக்களை உதாசீனப்படுத்தினாய் அல்லவா? புரிந்துகொள். உன்னை மன்னித்து விட்டேன். ஐந்து ரூபாய் அபாரதம் கட்டி மரத்தையும் உன் கையால் வெட்டிக் கொடு என்று சொல்லிப் பொட்டலத்தை அப்பாவு உடையார் கையில் கொடுத்தார் பண்டாரம்.

எல்லோர் மத்தியிலும் பொட்டலத்தை விரித்தார் அப்பாவு உடையார் வெள்ளைப்பூ. இருந்தது. எல்லோரும் சாமியை வீழ்ந்து வணங்கினார்கள்.

துரைச்சாமி உடையார்—பொதியா, சாமி சொன்னது புரிந்ததா என்றார்:

பெரியப்பா, புரிந்து கொண்டேன். பத்து ரூபாய் அபராதமும் ரொக்கமாக செலுத்தி—மரத்தையும் என் கையால் வெட்டிக் கொடுத்து இதிலிருந்து ஐந்து வருடங் களுக்கு உத்திரத்திற்கு பால்காவடி எடுக்கிறேன்—நான் அறியாமல் செய்த பிழைக்காக என்னை மன்னித்து என் பிள்ளைகுட்டிகளுக்கு நோய் நொடிவராமல் பாதுகாக்க வேண்டும், இந்த ஆண்டவன் என்று சொல்லி வீழ்ந்து சுவாமியை வணங்கினார் பொதிய உடையார்.

"புரிந்ததா? இந்த ஆண்டவன் அம்பலவாணனேந்தல் மக்களுக்கு மட்டும் இல்லையடா!—அந்த வட்டாரத்தில் உள்ள நம் குலமக்கள் அனைவரையும் காக்கும் கருணைக் கடலாகிய முருகன் என்பதை இனிமேலாவது புரிந்து கொள்ளுங்கள்; நாம் அனைவரும் இந்தக் கோவிலுக்கு அடிமைப்பட்டவர்கள், மனதில் வைத்துக்கொண்டு நடங்கள் என்றார் துரைச்சாமி உடையார்.

பிறகு எல்லோரிடமும் விடை பெற்றுக் கொண்டு இருவரும் ஊருக்குப் புறப்பட்டார்கள்.

மறுநாளே ஆட்களைக் கொண்டு மரத்தை வெட்டி முடித்து, பத்து ரூபாய் அபராதத்துடன் வந்து, அப்பாவு உடையாரை அழைத்து வந்து அவர் முன்னிலையில் ரூபாயை உண்டியலில் போட்டு, அவர் கையால் விபூதி வாங்கி அணிந்து கொண்டு, மரம் வெட்டி முடிந்த தகவலை யும் சொல்லிப் போனார் பொதிய உடையார்.

மரம் அறுப்பு தொழிலாளியை அழைக்கப் போன வர்கள் இரண்டு ஜோடி ஆட்களை அழைத்து வந்தார்கள்—அவர்கள் சொல்லியபடி இரண்டு ரம்பக் குழிகள் வெட்டி அதற்கு வேண்டியதெல்லாம் தயார் செய்து கொடுத்து,

சாமியார் அளவு சொல்ல அதன்படி—முன்னால் வேலைக்கு வேண்டிய மரங்களை அறுத்து அப்போதைக்கப் போதும்—ஈரம் உலர்வதற்குள்ள முறைப்படி அடுக்கி னார்கள்.

ஆடிமாதம் 30ம் தேதிக்குள் முன் தேவைக்குள்ள மரங்கள் பூராவும் அறுத்து முடித்து—காட்டுப் பிராமண வயலில் உள்ள மரம் வண்டியில் கொண்டுவர முடியாததால் —அதை அங்கேயே அறுக்க ஏற்பாடு செய்து அதையும் கொண்டு வந்து சேர்த்தார்கள்.

சாமியார்— அப்பாவு உடையாரிடம் ஐயா மரம் அறுவை வேலைகள் முடிந்து விட்டது; ஆவணியில் ஓர் நல்ல

நாள் பாருங்கள்—முகூர்த்தம் செய்து சிறுக ஆளைவைத்துக் கொண்டு வேலையை ஆரம்பிப்போம் என்றார்.

அப்பாவு உடையார், சரி சாமி, இன்று இரவு எல்லோரையும் அழைத்துப் பேசுவோம் என்று சொல்லி.

இரவு எல்லோரையும் கோவிலுக்கு அழைத்து சாமியார் சொன்ன விபரத்தைச் சொன்னார்.

முத்துச்சாமி உடையார் "சாமி நீங்கள் சொல்லியபடி இந்த ஆவணியில் நல்லநாள் பார்த்து வேலையை ஆரம்பிப் போம்-நமக்குத் தேர் செய்து முடிக்க எவ்வளவு பணம் தேவைப்படும்—என்பதை—ஒரு தோராயமாகக் கண்டு சொன்னீர்களேயானால் — அதற்குள்ள ஏற்பாட்டை இப்போதிருந்தே நாங்கள் செய்ய ஏதுவாக இருக்கும் என்றார்.

ஐயா—என்னுடன் இங்குள்ள தச்சு வேலை ஆட்கள் இரண்டைச் சேர்த்துக் கொண்டு வேலையைத் துவங்கினால்-கயார் ஆறுமாதத்தில் தச்சுவேலை-சகலத்தையும் செய்து முடித்து விடலாம். இங்கு தச்சு ஒன்றுக்கு இரண்டு பணம் சம்பளம் நடக்கிறதாம்; அதன்படி

| | | |
|---|---|---|
| தச்சு கூலிக்கு | ரு. | 100 00 |
| இரும்பு வகையரா | | 25 00 |
| கூலி வகையரா | | 20 00 |
| உளிச்சாமான் வகையில் | | 15 00 |
| கூடுதல் | | 160 00 |

மொத்தம் ஒரு நூற்றி அறுபது ரூபாய் தேவைப்படும் எப்படியாவது கஷ்டத்தைப் பார்க்காமல் இந்த ரூபாயைச் சேகரியுங்கள்; ஆவணிமாதக் கடைசியில் வேலையை ஆரம்பிப்போம். நாம் வேலை பார்ப்பதற்கும் மரம் உலர்வதற்கும் சரியாக இருக்கும் என்றார் சாமியார்.

அப்பாவு உடையார், சாமி, ஆவணியில் வேலையை ஆரம்பித்தால் வரும் பங்குனியில் திருவிழாவிற்குள் வேலை முடிந்துவிடுமா என்றார்,

சாமியார் திருவிழாவிற்கு ஒரு மாதம் முன்னாலே வேலையை முடித்துப் பங்குனித் திருவிழாவில் தேரை ஓட்டி விடுவோம் என்றார்,

அதைக் கேட்ட எல்லோரும் ஆனந்தமடைந்து சாமி நாங்கள் எப்படி கஷ்டப்பட்டாவது பணம் சேர்த்து விடுகிறோம். நீங்கள் உங்கள் சிரமத்தைப் பார்க்காமல் வேலையைத் துரிதமாகச் செய்து இந்தப் பங்குனித் திருவிழாவிற்கு ஓட்டி விடுவார்கள் என்றார்கள்.

அதன் பிறகு ஊரில் குடி ஒன்றுக்கு மூன்று ரூபாய் வரிப் போட்டும் பாக்கி ரூபாய்க்கு பல இடங்களுக்குப் போய்க் கூலி வேலை செய்தும் பணம் சேர்த்தார்கள்.

ஆவணி மாதம் 26ஆம் தேதி நாள் பார்த்து தச்சு செய்து-தேவைக்கேற்ப ஆட்களை வைத்துக் கொண்டு வேலையைத் துரிதமாகப் பார்த்தார் சாமியார்-வேலை வேகமாக நடந்து கொண்டிருந்தது. சாமியார் பொறுப்பாளர் இவரையும் அழைத்து, ஐய்யா இப்போது பெரும் வேலைகள் முடிந்து விட்டது. சில்லறை வேலைகள்தான் பாக்கி,மேல் சோடனைக்குள்ளகால், ஷிசட்டம் இவைகள் பனைமரத்தில் தயார் செய்ய வேண்டும். அதற்கான பனைமரத்தை இந்தக் கார்த்திகைமாத குறைக்குள் வெட்டி விடுங்கள்; இப்போதே அதையும் ஆரம்பித்தால் தான் மரம் உலந்து நம் தோதுக்கு வேலை செய்யலாம் என்றார்-அவர் கணக்குப்படி பனைமரங்களைக் கொண்டு வந்தார்கள்.

தைமாதம் 20 ஆம் தேதியோடு தேர் வேலையை முடித்து—மேல் சோதனைக்குள். குத்துக் கால் சட்டம் போன்ற வேலைகளை ஆரம்பித்த சாமியார் பொறுப்பாளர்களை அழைத்து ஐயா மேலே கட்டும் தேர்ச் சேலை வாசமாலை அசஞ்சாடி மாலை போன்ற அலங்காரச் சாமான்களைத் தயார் செய்யுங்கள்! மேலும் தேரை இழுப்பதற்கு; வடம் வேண்டும் என்றார்.

அதைக் கேட்ட பெரியவர்கள் அலங்காரச் சாமான்களை, அதற்குரிய ஆளை அழைத்து வந்து தயார் செய்து விடுவோம்; இழுப்பதற்கு வடம் வேண்டுமே என்றார்கள்.

அப்பாவு உடையார், அப்பா எல்லாவற்றையும் நாம் ஒரே வருஷத்தில் தயார் செய்து விட முடியாது. முடிந்த வரையில் அலங்காரச் சாமானைத் தயார் செய்வோம். பாக்கிபடுவதையும் வடமும்; ஆவுடையார் கோவில், தம்பிரானிடம் கேட்டு வாங்கிவருவோம்; அவர்தான் நாம் மரம் கேட்க போனபோதே வேறு உதவி தேவைப்பட்டாலும் செய்யத் தயாராக இருக்கிறேன் என்றார்; அதன்படி செய்து கொள்ளுவோம் என்றார்.

அதன்படி செய்வோமென்று—துணி வேலை செய்யும் ஆளை அழைத்து வந்து செய்தார்கள்; தேருக்கு உரிய சகல வேலைகளும் மாசி மாதம் 29 ஆம் தேதியுடன் முடிந்தது. வடம் மட்டும் ஆவுடையார் கோவில் மடம் கண்ணப்ப தம்பிரானிடம் போய் விபரத்தை சொல்லி அங்குள்ள கின்னத் தேர்வடத்தை வாங்கி வந்து

1864 ஆம் வருஷம் பங்குனி மாதம் திருவிழா, ஒன்பதாம் நாள் உன்னமாக அலங்கரிக்கப்பட்ட தேரில் வள்ளி தெய்வயானை சமேதராக முருகப் பெருமானை வைத்துக் காலை பதினோரு நாழிகைக்கு வடம் பிடிக்கும் போது சாமியாருக்குக் காவி கோடி வேட்டி துண்டு கட்டி, பெரிய மாலை ஒன்று சூட்டி, எல்லோரும். அவர் பாதத்தைத் தொட்டு வணங்கிப் பூமாரி பொழிந்து வடத்தை பிடித்து இழுத்து தேர் நிலையடி வரும்வரை சாமியார் வடத்தை பிடித்து இழுத்தபடியே வந்தார். தேரோட்டம் முருகக் கடவுளின் கிருபையால் நல்ல முறையில் நிலையடியில் வந்து நின்றது. தேரோட்டத்தையே பார்த்திராத கிராமப் புறமக்கள் புதிதாகத் தேர் செய்து ஓடுவதைப் பார்க்க வேண்டுமென்று ஆவலோடு வந்து பெரும் திரளாகத்

கூடித் தேரில் பவனி வந்த எம்பெருமான் முருகக் கடவுளைத் தரிசனம் செய்து அவனருளைப் பெற்றுச் சென்றார்கள்.

மாலை சுமார் 25 நாழிகைக்கு தேரில் இருந்த சாமியை இறக்கி கோவிலை வலம் வந்து முன் கொட்டகையில் வைத்து கூடி இருந்த மக்கள் அனைவரையும் அமரச் செய்து–

சாமியார்—முருகப் பெருமான் மீது அனேக பாடல்களைப் பாடினார். திரளாக கூடி இருந்த மக்கள் அனைவரும் அந்தப் பாடல்களின் பொருளையும் இனிமையையும் மெய் மறந்து கேட்டார்கள்; இரவு ஐந்து நாழிகைக்கு சாமியார் பாட்டை நிறுத்தினார்.

சாமிக்கு ஆராதனை நடந்தது எல்லோரும் தரிசனம் செய்து கொண்டார்கள். மறு நாள் காலையில் அக்கினி வளர்த்து சுமார் பத்து நாழிகையிலிருந்து ஏராளமான காவடிகள் வந்தது. மதியம் சாது வீதிவலம் வந்து தீர்த்தம் கொடுத்தார்கள்—இரவு இடும்பன் பூஜை மிகசிறப்பாக கொண்டாடி தரிசனம் செய்தார்கள்.

சாமியார் சில மாதங்கள் தங்கி இருந்து ஓர் நாள் எல்லோரையும் கோவிலுக்கு அழைத்து ஐயா இந்த ஊர்ப் பெரியவர்களுக்கும் தாய்மார்களுக்கும் நான் நன்றி செல்லுகிறேன். என்னுடைய வேண்டுகோளுக்குச் செவி சாய்த்து என் கோரிக்கையை நிறைவேற்றி வைத்தீர்கள். எந்த நேரம் போனாலும் முகம் கோணாமல் என் தாயைப் போல் உணவளித்து என்னைக் காப்பாற்றினீர்கள். பதினைந்து மாத காலம் இந்த ஆண்டவன் வாசலில் இருந்து அவனை என் மனம் குளிரப் பாடிச் தரிசனம் செய்தேன்.

நானோ சன்னியாசம் தரித்தவன்; ஒரே இடத்தில் இருப்பது சரியல்ல; இன்னும் பல க்ஷேத்திரங்களைத் தரிசனம் செய்யவிரும்புகிறேன் எனக்கு விடை கொடுங்கள்,

நீங்கள் அனைவரும் நோய் நொடி இல்லாமல் வாழ்ந்து உங்களுக்கு ஏற்படும் பின் வாரிசுகளும் தெய்வ பக்தி உடையவர்களாக பிறந்து இந்த கோவிலைக் கற்கோவிலாக அமைத்து இது ஓர் புனித க்ஷேத்திரமாக விளங்க வேண்டுமென்று இந்த பகவானை என் மனமாரப் பிரார்த்தனை செய்கிறேன் என்று சொன்னார்; எல்லோரும் அவருக்கு வணக்கம் சொன்னார்கள்—பிரியாவிடை பெற்றுப் புறப்பட்டார் சாமியார் கந்தசாமி.

# 11. திருஆபரணம்

1865 ஆம் வருடம் கார்த்திகை மாதம் 11 ஆம் அப்பாவு உடையார். ஊர்ப் பெரியவர்களை எல்லாம் கோவிலுக்கு அழைத்து கோவிலில் கூடி நாம் இது வரையிலும். நம் கோவிலுக்கு வருஷம் இரண்டு முறை திருவிழாச் செய்து வந்தோம். இப்போது புதிதாகத் தேர் செய்து நடந்து பங்குனி திருவிழா ஒன்பதாம் நாள் தேர் ஓட்டினோம். இப்போது தையில் திருவிழாச் செய்யவேண்டியதிருக்கிறது தைப்பூசத் திருவிழாவிற்கும் தேர் ஓட்டுவதா எப்படி செய்வது என்பதை நாம் இப்போதே யோசனை செய்து முடிவெடுக்கவேண்டும் என்றார் அப்பாவு உடையார்.

சுப்பையா உடையார்—இரண்டு திருவிழாவிற்கு தேர் ஓட்டி திருவிழா செய்வது அய்தீகப்படி உள்ளது அப்படிச் செய்தால் நமக்கும் பெறாமைதான்; ஆனால், நம் கிராமம் களிமண் பாங்கான பூமி அமைப்பு உள்ளது. இப்போது மழைக்காலம் முடிந்தும் முடியாமலும் இருக்கிறது. இப்போது தேர் ஓட்டி. வீதி மூலைகளில் திருப்பி கொண்டு வருவது மிகவும் சிரமப்படும். ஆகையால் தை மாதத் திருவிழாவை வழக்கம் போல் செய்வோம். பங்குனியில் கோடை வந்து விடும், அப்போது. தேருக்குப் பாக்கி உள்ள சாமான்களையும் தயார் செய்து பங்குனித் திருவிழாவைச் சிறப்பாகச் செய்வோம் என்றார்.

ஷண்முக உடையார், சுப்பையா சொல்லுவதுதான் சரி. அதுதான் நமக்கு ஒத்துவரும். இவ்வருஷம் மட்டுமல்ல: எப்போதும் இதே முறையில்தான் திருவிழா செய்வதென்று வைத்துக் கொள்ளலாம் என்று நினைக்கிறேன். எல்லோருடைய அபிப்பிராயத்தையும் தெரிவியுங்கள் என்றார்,

முத்துச்சாமி உடையார்-நீங்கள் இப்போது சொன்னது சரி-இனிமேல்-ஊரில் உள்ள எல்லோருடைய—சம்மதத்திலும்- முயற்சியிலும் கோவில் காரியங்கள் செய்வதென்றால், ஒரு காரியமும் நடக்காது. இருவர் முகத்தை ஒன்று போல் படைக்காத இறைவன்-இருவர் எண்ணத்தையும் குணத்தையும் ஒன்று போல் படைக்கவில்லை. அதனால் ஆளுக்கொருகருத்தைச் சொல்லுவார்கள்.

கோவில் காரியங்கள் தடைப்பட்டுப் போகும் வளர்ச்சி குன்றி நாளடைவில் சீரழிந்து விடும். ஆகையால் கோவிலின் வளர்ச்சிக்கு பாடுபடக் கூடியவர்கள் வயதில் பெரியவர்களோ சிறியவர்களோ அவர்கள் சொல்லுவதை எல்லோரும் கேட்டு நடப்பது என்று முடிவு செய்து இந்த ஆண்டவன் வாசலில் உறுதி எடுத்துக் கொள்வோம் என்றார் முத்துச்சாமி உடையார்.

அப்பாவு உடையார்-முத்துச்சாமி இப்போது சொல்லிய கருத்து இலேசானதல்ல; இந்தக் கோவிலின் அடிப்படைச் சொத்தே, இது தான்-ஒரு தொண்டரின் சொல்படி நாமெல்லோரும் கட்டுப்பட்டு நடந்தால்தான் கோவிலை நல்ல முறையில் நடத்தி மேன்மைக்குக் கொண்டுவர முடியும் என்றார்.

இருந்த எல்லோரும் நீங்கள் சொல்லியபடி செய்வோம் என்றார்கள்.

இப்போது நீங்கள் கொடுக்கும் சம்மதம் சாதாரணமானதல்ல; இந்த ஆண்டவன் முன்னால் எடுத்துக் கொள்ளும் பிரமாண உறுதி மொழி என்று அப்பாவு உடையார் சொல்லி எனக்கோ வயதாகிவிட்டது. இது முதல் முத்துச்சாமி வேலு சண்முகம். கருப்பையா வெள்ளைச்சாமி இந்த ஐவரும் இந்த கோவிலின் பொறுப்பாளராக இருந்து கோவில் காரியங்களைப் பாருங்கள்,

ஆனால் உங்களுக்குள் எந்தவித மனபேதமும் இருக்கக்கூடாது. நீங்கள் அடிக்கடி கலந்து பேசிக் கோவிலை மேன்மைக்குக் கொண்டுவர வேண்டியது. உங்கள் பொறுப்பு கோவில் வளர்ச்சிக்காக நீங்கள் முடிவு செய்து சொல்லுவந்த ஊரில் உள்ள நாங்கள் எல்லோரும் மறுக்காமல் செய்கிறோம்.

திருவிழாச் செய்வதை இப்போது நாம் பேசிக் கொண்டபடி தைபூசத் திருவிழாவை வழக்கம் போல் செய்து. பங்குனித் திருவிழாவில் தேரை ஓட்டியும் சிறப் பாக செய்வோம் என்றார் அப்பாவு உடையார்.

அப்படியே செய்வதென்று எல்லோரும் ஒப்புக் கொண்டார்கள். அதன்படி வருஷம் இரு முறை திருவிழா செய்து இடையில் வரும் விசேடங்களை நல்ல முறையில் கொண்டாடியும் பராமரித்து வருவார்கள்.

கோவில் பொறுப்பாளர்கள் ஐவரில் இருவர் சிவபதம் அடைந்து விட்டார்கள்; மூவர் இருந்தனர். சண்முக உடையார் இருவரையும் அழைத்து. நாம் ஐவரில் இருவர் இப்போது இல்லை நமக்கும் வயதாகி விட்டது. ஆகையால், புதிதாக இளவயதுள்ள ஐயரை நியமித்துக் கோவில் பொறுப்பைப் பார்க்கச் சொல்லுவோம் என்றார். அதன்படியே செய்வோமென்று ஊரில் எல்லோரையும் அழைத்துக் கோவிலில் கூடினார்கள்

சண்முக உடையார் முன்னால் உள்ள பெரியவர்கள் எங்கள் ஐவரை நியமித்து இந்தக் கோவிலில் பொறுப்பை எங்களிடம் ஒப்படைத்தார்கள். இது வரையிலும் பார்த்து வந்தோம்; இப்போது இருவர் இல்லை. எங்களுக்கும் வயதாகி விட்டது. இன் இளவயதுள்ள. ஐந்து பேர் இந்தப் பொறுப்பை ஏற்று பாடுபட்டு கோவிலை மேன்மைக்குக் கொண்டு வாருங்கள் என்றார்.

சின்னத்தம்பி உடையார்—சரி நீங்கள் சொல்லிய படியே செய்கிறோம். ஆனால் சுமார் 40 ஆண்டுக்காலம் இந்தக் கோவிலைப் பராமரித்து வந்திருக்கிறீர்கள்; உங்களுக்கு இங்குள்ள எல்லோருடைய குணமும் தெரியும்;

ஆகையால்—உங்களைப் போல் தன்னலமற்று இந்தக் கோவிலை நன்கு பாதுகாத்து மேன்மைக்கு கொண்டுவரக் கூடிய திறமையும் ஆர்வமும் பொறுமையும் யார் யாரிடம் இருக்கிறது என்பதைத் தெரிந்திருப்பீர்கள். அவர்கள் சிறுபிள்ளையாக இருந்தாலும் பரவாயில்லை; அவர்களின் பெயரை உங்கள் வாயால் சொல்லுங்கள் என்றார்.

சின்னத்தம்பி பொறுப்பை என்னிடமே கொடுத்து விட்டாய், அதுவும் நியாயம்தான் நான் சொல்லுகிறேன்—மெய்யப்பன், சுப்பையா, முத்துச்சாமி, பொன்னையா, முத்துப்புடையான் நீங்கள் ஐவரும் கோவில் பொறுப்பை ஏற்று நல்லமுறையில் நடத்திக் கோவிலின் வளர்ச்சிக்குப் பாடுபடுங்கள்; பாக்கி உள்ளவர்கள் நீங்கள் சொல்லுவதைக் கேட்டு நடப்பார்கள் என்றார் ஷண்முக உடையார்.

நீங்கள் சொல்லியபடியே செய்கிறோம் என்று 1903 ம் வரும் அந்த ஐவரும் பொறுப்பை ஏற்று நல்லமுறையில் பராமரித்து வந்தார்கள்.

1905ம் வருஷம் பொறுப்பாளர் ஐவரும் கோவிலில் இருந்து பேசும் போது—சுப்பையா உடையார் நாம் திருவிழாக் காலங்களில் சுவாமி அலங்காரத்திற்கு—காலஸ்தம் கையஸ்தம் இவைகள் மரத்தால் செய்ததை வைத்து அலங்காரம் செய்து சாமியை வீதிவலம் தூக்கி வருகிறோம். அதைத் தங்கத்தில் செய்ய நம்மால் முடியவில்லை.

இப்போது நமது ஊரில் சிலர் பக்கத்து ஊரில் பலர் நம்மவர்கள் பர்மா நாட்டிற்குப் போய் விவசாயம் செய்து கொஞ்சம் வசதியாக இருக்கிறார்கள். நாம் இருவர் அங்கு சென்று எல்லோரிடமும் விபரத்தைச் சொல்லிக் கேட்டால் தெய்வகாரியத்திற்குத் தாராளமாக உதவி செய்வார்கள்,

அப்படி வசூல் செய்து—கால ஸ்தம் கையால் தம் கிரீடம் இவை மூன்றும் சுவாமிக்கு மட்டும் செய்தாலும் போதும் என்று நினைக்கிறேன். உங்கள் அபிப்பிராயத்தைச் சொல்லுங்கள் என்றார்.

இருந்த நால்வரும்—நீங்கள் பர்மா நாட்டில் இருந்து இப்போதுதான் வந்திருக்கிறீர்கள். அங்குள்ள நிலவரம் உங்களுக்குத்தான் புரியும் — எங்களுக்கு அதைபற்றித் தெரியாது. அப்படிச் செய்யலாம் என்று நீங்கள் கருதினால் பர்மாவுக்கு நீங்கள் போகும்போது சின்னப் பொன்னையா வையும் கூட அழைத்துப் போய் அந்த ஏற்பாட்டைச் செய்யுங்கள் என்றார்கள்,

சில மாதங்களுக்குப் பிறகு—சுப்பையா உடையார் பர்மாவுக்குப் புறப்பட்டார். அப்போது பொன்னையா உடையாரையும் கூட அழைத்துப் போனார். இருவரும் பர்மா போய்ச் சேர்ந்து சில தினங்களுக்கு பிறகு சுப்பையா உடையார், பொன்னையா உடையார், மருதைமேஸ்திரி மூவரும் அங்குள்ள பல கடைகளுக்குப் போய் அறிமுகப்பட்ட செல்வர்களிடம் விபரத்தைச் சொல்லி யாசகம் வாங்கிப் பணம் சேர்த்தார்கள்—பல இடங்களுக்குப் போய் வந்ததில் ஒரு வருஷம் ஆகிவிட்டது.

பிறகு சேர்ந்த பணத்திற்கு ஒரு பவுன் தங்கம், பத்தேகால் ரூபாய் வீதம் தங்கத்தை வாங்கிக் கொண்டு 1907-ஆம் வருஷம் —சுப்பையா உடையார் பொன்னையா உடையார் இருவரும் ஊருக்கு வந்தார்கள். வந்த சில தினங்களுக்கு பிறகு,

கோவில் பொறுப்பாளர்கள் இன்னும் ஊர்ப் பெரிய வர்கள் எல்லோரும் கோவிலில் இருந்து கலந்து பேசி— இருக்கும் தங்கம் பூராவுக்கும் சுவாமிக்கு மட்டும் செய்வ தென்று முடிவு செய்தார்கள்—அதைச் செய்யும் தொழிலாளி நம் பகுதியில் இல்லாததால்,

சுப்பையா உடையார்—பர்மாவில் எனக்குத் தெரிந்த பெரிய முதலாளி—பலவான்குடி செட்டியார் இப்போது ஊருக்கு வந்திருக்கிறார். ஆகையால் அங்கு போய் விசாரித்து அவர்கள் பொறுப்பில் செய்யச் சொல்வோ மென்றார்; அப்படியானால் — துணைக்கு ஒருவரை அழைத்துக் கொண்டு நீங்களே போய் உங்கள் பொறுப்பில் அதைச் செய்து முடியுங்கள் என்றார்கள்.

அதன்படி சுப்பையா உடையாரும் பொன்னையா உடையாரும் பலவான்குடி போய்ச் செட்டியாரிடம் விபரத்தைச் சொல்லி அவர்கள் மூலம் ஆசாரியிடம் பேசி முடிவு செய்து ஆசாரியை அழைத்து வந்து—சுவாமிக்குக் காலஸ்தம் கையஸ்தம், கிரீடம்—இவை மூன்றும் செய்து முடித்தார்கள்—செய்த ஆறுமுக ஆசாரி "ஐயா நான் கோவில் திருவாபரணம் தவிர வேறு வேலைகள் செய்வ தில்லை. இது வரையிலும் எத்தனையோ கோவில்களுக்கு இம்மாதிரி திருஆபரணம் செய்திருக்கிறேன்—இது ரொம்ப பொருத்தமாகவும் அழகாகவும் அமைந்திருக்கிறது.

இப்போது வேலை பூராவும் முடிந்துவிட்டது. நான் ஊருக்குப் புறப்பட வேண்டும். ஆனால் இந்த நகைகளை சுவாமிக்கு அணிவித்து அலங்காரம் செய்து தீப் ஆராதனை பார்த்துப் போக வேண்டுமென நினைக்கிறேன் என்றார்.

அப்படியானால் வரும் வெள்ளிக்கிழமை அன்று விசேட அபிஷேகம் செய்து ஆராதனை நடத்தி சாமியை வீதி உலா தூக்கி வருவோம் என்று சொன்னார்-மெய்யப்ப உடையார்.

அதன்படி வெள்ளிக்கிழமையன்று—விசேட அபிஷேகம் செய்து நகை அணிவித்து ஏராளமான புஷ்பங்களால் அலங்காரம் செய்து—ஆராதனை நடந்தது—ஊர் மக்களும் தகவல் தெரிந்த பக்கத்து கிராமமக்களும் ஏராளமாக வந்து சாமியைத் தரிசனம் செய்து சாமியை வீதி உலா தூக்கி வந்தார்கள்—அவ்வருஷம்—தைப்பூசத் திருவிழாவிலிருந்து —நகை அணிவித்து அலங்காரம் செய்து திருவிழாச் செய்தார்கள்.

# 12 கற்கோவில் உண்டான வரலாறு

1922-ஆம் வருஷம்—சுப்பையா உடையாரும் மருதை மேஸ்திரியும் பர்மாவிலிருந்து ஊருக்கு வந்திருந்தார்கள்—அவர்கள் இருவரும்—கோவில் பொறுப்பாளர்கள், ஊர்ப் பெரியவர்கள் ஆகியோரை அழைத்துக் கோவிலில் கூடினார்கள்.

அப்போது சுப்பையா உடையார் சொன்னார்: "அப்பா நமது கோவில் உற்பத்தியாகி நூறு ஆண்டுகளுக்கு மேல் ஆகிவிட்டது. அப்போது உள்ளவர்கள் நாலு முழ சதுரக் கூரை கட்டி கோவிலை அமைத்தார்கள்; இன்றுவரை நாம் அதில்தான் சாமியை வைத்துத் தேர்த் திருவிழா வெல்லாம் செய்து தரிசனம் செய்து வருகிறோம்.

இப்போது நாமெல்லாம் கொஞ்சம் முயற்சி செய்து கெட்டிக் கட்டடமாகக் கோவிலைக் கட்டினால் நன்றாக இருக்கும். அதைக் கலந்து பேசத்தான் உங்கள் எல்லோரையும் அழைத்தது என்றார் சுப்பையாஉடையார்.

கோவிலைக் கெட்டியாகவும் பெரியதாகவும் கட்ட வேண்டுமென்பது எல்லோருக்கும் அளவு கடந்த ஆசை தான். நாம் பொருளாதார நிலையில் ரொம்பப் பின் தங்கி இருக்கிறோமே—இப்போது கோவிலுக்குச் செய்து வரும் காரியங்களை விடாமல் செய்யவே சில சமயம் பஞ்சம் ஏற்படும் போது ரொம்பக் கஷ்டப்படுகிறோம்-கோவிலைக் கெட்டியாகக் கட்ட எப்படிப் பணம் சேர்ப்பது என்பது தான் புரியவில்லை; அதற்கு ஏதாவது வழி தெரிந்தால் சொல்லுங்கள் என்றார் முத்துச்சாமி உடையார்.

நீங்கள் சொல்லுவது உண்மைதான் நமது கோவிலுக்குப் பெரிய தேவஸ்தானத்தைப் போல்—தேர்த் திருவிழா சகல வைபவங்களையும் ஏற்படுத்தி விட்டோம்—

இப்போது நாம் இருக்கும் நிலையில் அவைகள் விடாமல் நடப்பதே இந்த பகவான் கிருபையில்தான் நடக்கிறது என்பது நன்றாகப் புரிகிறது.

இருந்தாலும் எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது— அதை உங்கள் மத்தியில் சொல்லுகிறேன்—நானும்— மேஸ்திரியும்-பர்மாவில் நிலம் வைத்து விவசாயம் செய்கிறோம்-முன்னையவிட பர்மாவில் இப்போது பழக்கங்கள் அதிகம் ஏற்பட்டிருக்கிறது. அதனால் முன்போல அங்கு பல இடங்களுக்குப் போய் விபரத்தைச் சொல்லிக் கேட்டால் நல்ல முறையில் பணம் கிடைக்குமென்று நம்புகிறேன்.

அப்படி முயற்சி செய்து பார்ப்போம்; அதில் எவ்வளவு பணம் கிடைக்கிறதென்பதைப் பார்த்துப் பிறகு யோசிப்போம்-நாமும் ஏதாவது ஒரு முறையில் முயற்சி செய்தால் தானே அதற்குள்ள வழி தெரியும். ஆகையால் இப்படியொரு ஏற்பாட்டைச் செய்யலாம் என்று கருதுகிறேன் என்றார் சுப்பையா உடையார்.

இது நல்ல யோசனைதான். நம் நாட்டில் உள்ள அனேகர் பர்மாவுக்குப் போய் நூற்றுக்கணக்கான ஏக்கர் நிலங்கள் விவசாயம் வைத்து செல்வர்களாக இருப்பதாகக் கேள்விப்பட்டேன்.

ஆகையால் நீங்கள் பர்மாவுக்குப்போகும் போது உங்கள் கூடப் பொன்னையாவையும் அம்பலம் பூச்சியையும் அழைத்துப் போங்கள்; இந்த முருகப் பெருமான் அங்குள்ளவர்கள் மனதில் புகுந்து நல்ல முறையில் பொருளுதவி செய்தால் பிறகு யோசிப்போம் என்றார் சின்னத்தம்பி உடையார்.

சில மாதங்களுக்குப் பிறகு மேஸ்திரியும் சுப்பையா உடையாரும்-பர்மாவுக்குப் புறப்பட்டார்கள் அப்போது மெய்யப்ப உடையார் பொன்னையா உடையார் அம்பலம் பூச்சி உடையார் இவர்கள் மூவரையும் கூட அழைத்துப் போனார்கள்.

பர்மாபோய்ச் சேர்ந்து சில தினங்களுக்கு பிறகு ஐவரும் அங்குள்ள பல கடைகளுக்குச் சென்று விபரத்தைச் சொல்லி நன்கொடை வசூல் செய்தார்கள்.

1923-ஆம் வருஷம் வரை வசூலில் கிடைத்த மொத்த ரூபாய் ஐயாயிரத்து எழுநூறு சேர்ந்திருந்தது. அப்போது சுப்பையா உடையார்,

நாம் ஊரில் இருந்து வந்து வருஷம் ஒன்றரை ஆகி விட்டது. இது வரையிலும் கிடைத்திருக்கும் ரூபாயை ஊருக்கு அனுப்பி விட்டு மெய்யப்பனும் பூச்சியும் ஊருக்குப் போய் எல்லோரிடமும் விபரத்தைச் சொல்லி இந்தக் கோடையிலே நமக்குத் தேவையான செங்கல்லை அறுத்துக் கால்வாய் போட்டு விடுங்கள். நாங்கள் மூவரும் இவ்வருஷ அறுவடையில் முடிந்த அளவு வசூல் செய்து கொண்டு வருகிறோம். அடுத்த ஆண்டு கோவில் வேலையை ஆரம்பிப்போமென்று சொல்லி இருவரையும் ஊருக்கு அனுப்பி வைத்தார்கள்.

இருவரும் ஊர் வந்து சேர்ந்து ஊரில் எல்லோரையும் அழைத்து விபரத்தைச் சொன்னார்கள்; எல்லோரும் சந்தோசப்பட்டு நமக்கு நல்ல காலம் வந்து விட்டது. இனி எந்தத் தாமதமும் இல்லாமல்; கோவில் கட்டும் வேலையில் ஈடுபட்டு வேலையைச் சுறுசுறுப்பாகப் பார்க்கவேண்டு மென முடிவு செய்து செங்கல் கால்வாய் போகும் வேலை யில் ஊரில் உள்ள அனைவரும் இரவு பகலாக வேலை பர்த்து, மூன்று மாதகாலத்திற்குள் ஒன்றே கால் இலட்சம் செங்கல்லை சுட்டு முடித்தார்கள்.

பர்மாவிலிருந்த மேஸ்திரி. சுப்பையா உடையார் பொன்னையா உடையார் மூவரும். மேலும் ஒரு ஆயிரத்து அறுநூறு வசூல் செய்து கொண்டு 1924ஆம் வருடம் ஊருக்கு வந்து சேர்ந்தார்கள்.

வந்த சில தினங்களுக்குப் பிறகு ஊரில் எல்லோரையும் அழைத்துக் கோவில் கட்டுவது சம்பந்தமாகக் கலந்து

பேசும் போது புதிதாகக் கோவிலை எந்த இடத்தில் கட்டுவது என்பதில் ஒருவர்க்கொருவர் சற்று மனபேதங்கள் இருந்தது- சரி இதைப் பிறகு ஒரு நாள் பேசி முடிவு செய்வோம் என்றார் மருதை மேஸ்திரி, எல்லோரும் சம்மதித்தார்கள்.

அப்போது ஏம்பலில் அதாவது அம்பலவாணனேந்தலுக்கு மேற்கே பதினைந்து மைல் தூரத்தில் ஏம்பல் என்னும் நகரத்தில் நகரத்து செட்டியார்களால் பெரிய சிவன்கோவில் புதிதாகக் கட்டி கும்பாபிஷேம் செய்தார்கள். அம்பலவாணனேந்தல்ல் இருந்து-மெய்யப்ப உடையார், பொன்னையா உடையார், முத்துச்சாமி உடையார் போன்ற பெரியவர்கள் பலர் போய் இருந்தார்கள்.

காலையில் கும்பாபிஷேகம் பார்த்து எல்லோரும் தங்கி இருந்து மாலையில் கூட்டம் கலைந்த உடன் கோவிலினுள் சென்று கோவிலை நன்கு கவனித்துப் பார்த்தார்கள் அந்தக் கருங்கல் திருப்பணியைப் பார்த்த உடன், இவர்களுக்குப் பெரும் ஆசை வந்து விட்டது. நம் கோவிலையும் இப்படிக் கருங்கல்லால் கட்டிவிட்டால் எவ்வளவு காலமானாலும் அழிவில்லாமல் இருக்கும்.

செங்கல் ஆனால் சிறிது காலத்தில் பழுது ஏற்படும். அப்போதைக்கப்போது சீர் செய்யாவிட்டால் கோவில் பழுதடைந்து கெட்டுவிடும் என்று எல்லோரும் ஒரு முகமாகப் பேசினார்கள். அப்போது முத்துச்சாமி உடையார் சொன்னார். மயில் தன் தோகையை விரித்து ஆடுவதைப் பார்த்தவன் கோழியும் தானும் மயிலென நினைத்து ஆடியதைப் போல் இப்போது நாம் பேசுகிறோம் என்றார்.

மெய்யப்ப உடையாருக்குக் கடும் சினம் வந்து விட்டது. முத்துச்சாமி, மயிலுக்கு தோகை நீளம் அதில் பலவர்ண புள்ளிகள் இருக்கிறது, அது ஆடும்போது. வான் கோழிக்குச்

15

சிறகுதான் குட்டை; அதிலும் சில வர்ணப் புள்ளிகள் இருக்கிறது. அதற்கும் தோகையை விரித்து ஆடும் திறன் உண்டு; அதைப் போல இம்மாதிரிப் பெரிய கற் கோவில் கட்டி சிற்பங்கள் செதுக்க முடியாவிட்டாலும் நாம் கட்டும் சிறிய கோவிலை,கல்லால் கட்டலாம் தானே என்றார் மெய்யப்ப உடையார்.

மெய்யப்பா! என்மீது கோபப் படாதே: நம்முடைய நிலையை அனுசரித்து, நான் சொன்னேன், இந்தக் கும்பாபிஷேகத்தைப் பார்க்க வருவதற்குச் செலவுக்கு காசு இல்லாமல் சிலர் வரவில்லை என்றார் முத்துச்சாமி உடையார்:

முதலில் நாம் யோசிக்கும் போதே இப்படி சகுன பேதம் போல் இனி யாரும் சொல்லாதீர்கள். எவ்வளவு சிறியதாகக் கட்டினாலும், நம் கோவிலைக் கருங்கல்லால் தான் கட்ட வேண்டும்;அது எவ்வளவு காலம் ஆனாலும் சரி என்றார் மெய்யப்ப உடையார்.

மெய்யப்பா எல்லோருக்கும் நிறைய ஆசை இருக்கிறது. கோவிலை வல்லபமாகக் கட்ட வேண்டுமென்று, ஊருக்குப் போய் நம்மில் முக்கியமான சுப்பையா உடையார் மேஸ்திரி இன்னும் ஊர்ப் பெரியவர்களிடமும் சொல்லிக் கலந்து யோசிப்போம் என்றார் பொன்னையா உடையார்.

இரவு பஞ்சமூர்த்திகள் வீதி உலா வந்தது; எல்லோரும் கண் குளிரப் பார்த்துத் தரிசனம் செய்து காலையில் ஊருக்கு வந்தார்கள். வந்தவர்கள் அங்கு தாங்கள் பார்த்த கோவிலையும் தாங்கள் பேசிக் கொண்டதையும் பலரிடம் சொன்னார்கள்; அதைக் கேட்டவுடன் பெரும் பகுதியினருக்குக் கல்லால் கட்டுவதுதான் நல்லது என்ற உணர்வு ஏற்பட்டு விட்டது.

சில தினங்களுக்குப் பிறகு கோவில் கட்டுவது சம்பந்த மாய்க் கூடிப் பேச ஆரம்பித் தார்கள்; கோவிலை எந்த இடத்தில் கட்டுவது என்பதுபற்றிய மனபேதத்தைப்

பேசிக் கடைசியில் மூன்று இடங்களைக் குறித்துக் கோவில் திருவளம் கேட்பது,எந்தஇடத்தில் உத்தரவு கொடுக்கிறதோ அந்த இடத்தில் கட்டுவது என்று முடிவு செய்து நாளை வெள்ளிக் கிழமை மாலையில் எல்லோரும் கோவிலுக்கு வந்து சாமிதரிசனம் செய்து, கோவிலின் தென்புறமுள்ள தென்னைமரத்தில் சாமியை உத்தரவு கேட்போம் அது உத்தரவு கொடுக்கும் இடத்தில் கோவிலை ஆரம்பிப்போம்;அதன் பிறகு; யாரும் எந்த மாற்றமும் சொல்லக் கூடாது என்றார் சுப்பையா உடையார்.

அதன்படி மறுநாள் மாலையில் எல்லோரும் வந்து சாமி தரிசனம் செய்து தென்னை மரத்தில் மூன்று இடங்களையும் குறிப்பிட்டு உத்தரவு கேட்டார்கள். கணக்காமல் தற்போது கோவில் இருக்குமிடத்தில் கட்டும்படி சாமி உத்தரவு சொல்லியது; எல்லோரும் மனதிருப்தியுடன் இரவு கோவிலுக்கு வந்து பேசுவோமென்று வீடுகளுக்குச் சென்றார்கள்.

இரவு எல்லோரும் கோவிலுக்கு வந்தார்கள். பொன்னையா உடையார், கோவிலை எந்த இடத்தில் கட்டுவது என்ற குழப்பம் தீர்ந்து விட்டது. இனி மேல் நாம் என்ன செய்ய வேண்டுமென்பதைப் பேசுங்கள் என்றார்.

கோவிலை இருக்குமிடத்திலே கட்டும்படி உத்தரவாகி இருப்பதால், பக்கத்தில் ஓர் கட்டடம் கட்டி அதற்குரிய முறைப்படி செய்து சாமியை அதில் வைத்துவிட்டு;இந்தக் கோவிலைப் பிரித்துச் சுத்தம் செய்து-ஸ்தபதியாரை அழைத்து வந்து காண்பித்தால் அதற்குள்ள முறையை அவர் சொல்வார் என்றார் முத்துச்சாமி உடையார்.

முதலில் ஸ்தபதியாரை அழைத்து வந்தால் சாஸ்திர முறைப்படி அவர் சொல்லுவார்; பிறகு கோவில் எப்படிக் கட்டுவது, என்ன செலவு ஆகும் என்பதையும் தெரிந்து கொண்டு-பாக்கியை யோசிப்போம். ஓர் நல்ல நாளன்று

ஸ்தபதியார் வீரமனை ஆசாரியை அழைத்து வந்து பேசு வோம் என்றார் சுப்பையா உடையார்.

இப்போது கோவிலைச் செங்கல்லால் கட்டுவதென்று முடிவு செய்து கால்வாய் வைத்திருக்கிறோம்-அதைக் கருங்கல்லால் கட்டலாமா என்று சிலர் யோசித்தோம், அதையும் யோசனை செய்யுங்கள் என்றார் மெய்யப்ப உடையார்.

சுப்பையா உடையார் — ''மெய்யப்பா, நீங்கள் ஏம்பல் சிவன் கோவிலைப் பார்த்ததும் நம் கோவிலையும் இப்படிக் கருங்கல்லால் கட்டினால் என்றைக்கும் அழிவில்லாமல் இருக்கும் என்று பேசியதை நான் கேள்விப் பட்டேன்.

நமது கோவிலைக் கருங்கல்லால் வல்லபமாகவும் அழகாகவும் கட்டுவதில் ஊரில் யாருக்கும் வெறுப்போ ஆட்சேபனையோ இல்லை-நாமோ பொருளில்லாத ஏழைகளாக இருக்கிறோம்—நம்மிடம் இருப்பது இந்த முருகப்பெருமான் கொடுத்த சரீரம்தான் இதைக் கொண்டு உழைக்கத்தான் முடியும். அப்படி இரவு பகலாக உழைத்து செங்கல்லை நாமே அறுத்து வேண்டிய மரங்களை நாமே வெட்டி வந்து ஒன்றேகால் இலட்சம் செங்கல்லை இருபது ரூபாய் செலவில் கால்வாய் போட்டு முடித்திருக் கிறோம்; அதுவும் கால்வாய் எப்படி அடுக்கவேண்டு மென்பதற்கு இரண்டு ஆள் பிடித்ததனால் இந்தச் செலவு; இனிமேலானால் இந்த செலவுமில்லை.

கல்வேலை அப்படியல்லவே; கல்மலையோ புதுக் கோட்டைக்கு அப்பால் திருக்கோகரணத்தில் இருக்கிறது. இங்கிருந்து 45 மைலுக்கப்பால்.

நமது ஊரிலிருந்து 12 மைலுக்கப்பால்தான் கப்பி போட்ட சாலை இருக்கிறது. இந்த 12 மைல் நீளமும் களி மண் பாதை;ஒரு மழை பெய்தால் 10 தினங்களுக்கு சாதா வண்டி கூட இந்தப் பாதையில் போகாது; அதெல்லாம் அப்படி இருக்க நமது ஊரில் உள்ள மொத்த வண்டியே

ஆறுதான்; இந்த ஆறு வண்டியைக் கொண்டு 45 மைலுக் கப்பாலுள்ள மலையடியிலிருந்து இம்மாதிரி பாதை அமைப் புள்ள ஊருக்கு எப்படி கல் கொண்டு வந்து, அதற்குரிய ஸ்தபதி கல் வேலை ஆட்களை வைத்துக் கோவில் கட்ட முடியும் என்பதைத் தான் நாங்கள் பலவாறாய் யோசித்துக் கொண்டிருக்கிறோம் என்றார் சுப்பையா உடையார்.

அண்ணா, நான் உங்களைவிட வயதில் சிறியவன்; நான் சொல்லுவதில் தவறு இருந்தால் என்னை மன்னித்து விடுங்கள்:

தன்னம்பிக்கையும் தளராத முயற்சியும் இருந்தால் உலகில் முடியாதது ஒன்றும் இல்லை என்பது ஆன்றோர் வாக்கு.

நாம் செய்யப் போவது தெய்வகாரியம்; நம் எல்லோரு டைய உடலும் உயிரும் இந்த முருகப் பெருமான்தான்- அவருக்காக உயிரையும் கொடுக்க நாம் தயாராக இருக் கிறோம்-அப்படி இருக்க நம் உற்சவ மூர்த்திக்கு சுமார் 75 ஆண்டு காலம் மரத்தால் செய்த காலஸ்தம் கையஸ்தம் சாதா கிரீடம் இவைகளைக் கொண்டு தானே அலங்காரம் செய்து வீதி உலா தூக்கி வந்தோம்.

தாங்கள் ஒரு வழியைச் சொன்னீர்கள்; முயற்சி செய் தோம். கப்பலேறி பர்மா நாடு சென்றோம். அங்கு சென்று வீடு வீடாகப் பிச்சை எடுத்தோம்—அங்குள்ள புண்ணிய வான்கள் தாராளமாகப் பிச்சை போட்டார்கள். அதைக் கொண்டு இப்போது விலையுயர்ந்த தங்கத்தால்— காலஸ்தம்-கையஸ்தம் கல்பதித்த கிரீடம் இவைகளை அணி வித்து அலங்காரம் செய்து வீதி உலா தூக்கி வருகிறோம்— இப்போது முருகப்பெருமானுக்கு அணிவிக்கும்—நகைக்கும் நமக்கும் ஏதாவது தொடர்புண்டா? நன்றாக யோசியுங்கள்; முயன்றோம் முடிந்தது.

அதைப் போலவே இப்போதும் கோவிலைப் புதிதாகக் கட்ட ஓர் வழியைச் சொன்னீர்கள்; கப்பலேறி அந்த பர்மா

நாட்டிற்கே போனோம்—இப்பவும் அதே பிச்சையை எடுக்க ஆரம்பித்தோம்.

இப்போது ஏழாயிரம் ரூபாய்க்கு மேல் கிடைத்திருக் கிறது. இது நாம் முயற்சி செய்ததால் இந்த ரூபாய் கொடுத்தவர்களுக்கும் இந்தக் கோவிலுக்கும் ஏதேனும் சம்பந்தமுண்டா.

அண்ணா! நம் கோவில் உற்பத்தியாகி சுமார் 120 ஆண்டுகள் ஆகின்றன—அப்போது அவர்கள் நாலுமுழ சதுரத்தில் மண் சுவரை வைத்து மேல் கூரை போட்ட படியே ஒழுகும் போதெல்லாம் வைக்கோலைச் செருகியும் பிறகு முழுதும் வைக்கோலைப் போட்டும் இதுவரையிலும் நடந்து வந்திருக்கிறது—இப்போதும் நாம் செங்கல்லால் கட்டினால் இதுவேதான்—இந்தக் கோவிலின் தலை எழுத்து இதை மாற்றி பின்னால் கல்லால் கட்டுவது நடக்காத காரியம்தான்.

ஆகையால் ஆரம்பிப்பதைக் கல்லால் ஆரம்பிப்போம், எத்தனை ஆண்டுகள் ஆனாலும் ஆகட்டும். ஆரம்பிப்பது நம் கடமை—ஊரில் ஆறு வண்டிதானே இருக்கிறது. 12 மைலுக்கப்பால் தானே கப்பி ரோடு இருக்கிறது என் கிறீர்கள் உண்மை.

ஆவுடையார் கோவில் ஆத்மனாதசாமி ஆலயம் கட்டும் போது ஏது வண்டி? எங்கே ரோடு இருந்தது?. வண்டி உண்டானதும் அதில் மாடு பூட்டி ஓட்டுவதும் ஏற்பட்டது சமீப காலத்தில் தான் என்கிறார்களே—இவ்வளவு பெரிய பிரும்மாண்டமான-கல்லை எல்லாம் எப்படிக் கொண்டு வந்தார்கள் என்று நான் நினைத்து—அங்கே நூறு வயதிற்கு மேல்பட்ட ஒரு தீட்சதரை விசாரித்தேன். அவர் சொன் னார் இதை எல்லாம் எப்படியப்பா வண்டியில் ஏற்ற முடியும்? மலையடியிலிருந்தே உருட்டில் வைத்து—அந்தந்த ஊர்க்காரர்களும் அவர்கள் எல்லை வரையிலும் இழுத்து வந்து கட்டியதாகப் பெரியவர்கள் சொன்னார்களப்பா என்றார்.

அதைப்போல நாமும் இந்த 12 மைல் வரையிலும்-நம் முடைய ஆறு வண்டிகளால் கொண்டு வந்து இந்தப் பக்கம் உருட்டில் வைத்து இழுத்து வந்தே சேர்த்து விடுவோம்;

அண்ணா—நமது கோவில் உற்பத்தியானது முதல் இன்றையவரை நடந்திருக்கும் ஒவ்வொரு வேலையும் நம் சக்திக்குள்பட்டு நாமா நடத்தி இருக்கிறோம். மூல விக்கிரகத்திலிருந்து ஒவ்வொன்றாக எண்ணிப் பாருங்கள் என்றார் மெய்யப்ப உடையார்.

அதற்கு சுப்பையா உடையார் "மெய்யப்பா! உன்னை என் மனமாரப் பாராட்டுகிறேன். உன்னிடம் இவ்வளவு பெரிய அசைக்க முடியாத தெய்வ நம்பிக்கையும் தெய்வத் தொண்டும் இருக்கிறது என்பதை இப்போது தான் புரிந்து கொண்டேன்.

ஆரம்பத்தில் நீ சொல்ல ஆரம்பிக்கும்போது "நான் சிறியவன், சொல்லுவதில் தவறு இருந்தால் மன்னியுங்கள்" என்றாய்.

இப்போது நான் உன்னிடம் மன்னிப்புக் கேட்க வேண்டியவனாக இருக்கிறேன்—நீ சொல்கிறபடியே செய்வோம் என்றார்.

நீங்கள் இருவரும் முடிவு செய்து சொல்லுகிறபடி நாங்கள் செய்யத் தயாராக இருக்கிறோம் என்று அங்கு இருந்த அனைவரும் சொன்னார்கள்.

அப்படியானால் ஸ்தபதியாரை அழைத்து வந்து காண்பித்துக் கோவிலைக் கல்லால் கட்டுவதற்கே முயற்சி செய்வோம் என்றார் சுப்பையா உடையார்.

இருந்த அனைவரும் அப்படியே செய்வோமென்று ஒப்புக் கொண்டார்கள்-ஓர் நல்ல நாளன்று ஸ்தபதியாரை அழைத்து வந்து பாக்கியைப் பேசுவதென்று முடிவு செய்தார்கள்.

நல்ல நாள் பார்த்து ஸ்தபதியார் வீரமணை ஆசாரியை அழைத்து வந்தார்கள்-ஸ்தபதியர் மனையை நன்கு பார்த்து தற்போது சாமியை வேறு இடத்தில் வைக்க-கோவிலின் வடபுறம் இடம் நிர்ணயம் செய்து-கட்டடத்தின் அளவு மற்ற விபரங்களையும் விபரமாக எழுதிக் கொடுத்து இதன் படி கட்டடத்தைக் கட்டி முடியுங்கள்-அப்போது நான் வந்து வாலஸ்தானம் செய்து சாமியை அதில் வைத்துவிட்டுப் புதிதாகக் கட்டப்போகும் கோவிலுக்குப் பொருத்தம் பார்த்துக் கணக்கு போட்டு விபரம் சொல்லுகிறேன். பிறகு முகூர்த்தம் செய்து வேலையை ஆரம்பிப்போம் என்றார் ஸ்தபதியார்.

அப்படியே செய்கிறோம் என்று சொல்லி அவர் கொடுத்த அளவுப்படி கட்டடம் சுட்ட செங்கல்லால் கட்டி ஒரு பொட்டு வேலையை முடித்து ஸ்தபதியாரை அழைத்து வந்து. சாஸ்திர முறைப்படி வாலஸ்தான செய்து சாமியை அதில் வைத்துத் தரிசனம் செய்தார்கள்.

பிறகு ஊர்ப் பெரியவர்களெல்லாம் இருந்து ஸ்தபதி யாரை-ஐயா நீங்கள் சொல்லியபடி இந்த வேலை முடிந்து விட்டது. இனிப் புதிதாகக் கோவில் கட்டப் பொருத்தம் பார்த்து-கர்ப்பகிரகம்-அர்த்த மண்டபம் கருங்கல்லால் அமைக்கக் கணக்குப் போட்டுச் சொல்லுங்கள் என் றார்கள்.

ஸ்தபதியார் சில தினங்கள் தங்கி-ஊருக்கும் சுவாமிக் கும் பொருத்தம் பார்த்து அதன்படி வரைபடமும் அஸ்தி வாரம் முதல் கோபுர வேலை முடியத் தேவையுள்ள சாமான்கள் அதற்குரிய கிரையம் செய்கூலி பூராவையும் தனித்தனியே கணக்குப் போட்டு கொடுத்தார்.

ஊர்ப் பெரியவர்கள் கணக்கை வாங்கி சுவாமியின் பாதத்தில் வைத்து தீப ஆராதனை செய்து, எல்லோரும் விழ்ந்து வணங்கி-முருகா எங்கள் சக்திக்கும் இந்த கணக் கிற்கும் எவ்வித சம்பந்தமும் இல்லாமல் இருக்கிறது! நீ

உதவி செய்வாய். உன் உதவியால் இதைச் செய்து முடிப்போம் என்று உன்னை முழுமையாக நம்பித்தான் இதில் இறங்குகிறோம்; எங்களுக்கு முன்னின்று நடத்தி நீதான் இந்த முடித்து வைக்க வேண்டும் என்று பிரார்த்தனை செய்து ஸ்தபதியாரை அழைத்துப்பேசினார்கள்; சுப்பையா உடையார்-ஐயா உங்கள் கணக்கை நன்கு பார்த்தோம்-நீங்கள் கணக்கில் கூடுதல் போட்டிருக்கும்-மொத்தத் தொகைக்கும் எங்களுக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை; இருப்பினும் இந்த பகவானை நம்பித்தான் இதில் இறங்குகிறோம்.

தேவைப்படும் சாமான்களை அப்போதைக்கப்போது வாங்கி வந்து தருகிறோம்-நீங்கள் பூராவுக்கும் உள்ள கூலியை மட்டும் குத்தகையாக ஒப்புக் கொண்டு செய்து தர வேண்டும்-அதற்கு எவ்வளவு ரூபாய் கேட்கிறீர்கள் என்றார் சுப்பையா உடையார்.

ஸ்தபதியார்-கணக்கைப் பார்த்து ஆரம்பம் முதல் கோபுர வேலை வரையில்-ஒவ்வொன்றுக்கும் உள்ள செய்கூலியை மட்டும்-தனியே கூட்டி மொத்தம் பார்த்து-

ஐயா-நீங்கள் சொல்லியபடி ஆரம்பம் முதல் கடைசி வரையிலும் உள்ள வேலைக்குச் செய்கூலி மட்டும் பத்து ஆயிரத்து முந்நூறு வருகிறது; அதைக் கொடுத்தால் என் பொறுப்பில் ஆட்களை வைத்து வேலை செய்து தருகிறேன் என்றார் ஸ்தபதியார்.

சுப்பையா உடையார்-ஐயா ஸ்தபதியாரே! எங்களுடைய நிலமை பூராவும் உங்களுக்கு நன்றாகத் தெரியும். நீங்கள் அருகாமையில் உள்ளவர். நாங்கள் கருங்கல்லால் கோவில் கட்ட முயற்சிப்பதே எங்களுடைய பலத்தால் அல்ல.

எல்லாம் இந்த முருகக் கடவுளை நம்பித்தான் ஆரம்பிக்கிறோம்; இதில் நீங்களும் பங்கெடுத்துக்கொண்டு

எப்படியும் இந்தக் கோவிலைக் கட்டி முடிக்க வேண்டுமென முழுப்பொறுப்போடு இதைச் செய்துதர வேண்டும்.

நாங்கள் பல இடங்களுக்கும் சென்று பணம் சேர்க்க வேண்டி இருப்பதால் காலதாமதமானாலும் ஆகலாம். எத்தனை வருஷமானாலும் தளராமல் இருந்து இந்தக் கோவிலைக் கட்டி முடிக்க வேண்டும் என்ற மனஉறுதி யோடு நீங்கள் இதை முடித்துத்தர வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

நீங்கள் இப்போது சொல்லி இருக்கும் கூலி சரியா? கூடவா? குறைவா? என்ற விபரம் எங்களுக்கு எதுவும் தெரியாது.

உங்களுக்கு நட்டம் ஏற்படாமல் தருகிறோம். இப்போது பத்து ஆயிர ரூபாய் என்று முடிவு செய்து எழுதிக் கொள்வோம் என்றார் சுப்பையா உடையார்.

ஸ்தபதியார்—''ஐயா பெரியவர்களே, இங்குள்ள உங்களுடைய நிலைமை எனக்கு நன்றாகத் தெரியும்; நீங்கள் கருங்கல்லால் கோவில் கட்ட முடிவு செய்திருப்பதே. பகீரதன் தெய்வலோகத்தில் ஓடிய கங்கையைப் பூமிக்குக் கொண்டுவர முயற்சி செய்ததற்கு ஒப்பாக இருக்கிறது. பகீரதனுடைய பலத்தால் அதைச் செய்ய முற்பட வில்லை. அந்தப் பரம்பொருளை நம்பித்தான் அந்த முயற்சியில் இறங்கினான். ஆனால் பகீரதன் முயற்சி வீண் போகவில்லை; காலதாமதமானாலும் கங்கையைப் பூமிக்குக் கொண்டு வந்து சேர்த்தான்.

அதைப்போல நீங்களும் இந்தப் பரம் பொருளாகிய முருகப்பெருமானை நம்பித்தான் இந்தக் காரியத்தில் இறங்குகிறீர்கள். உங்கள் தெய்வநம்பிக்கை என்றும் வீண் போகாது.

கடவுளை நம்பினோர் கைவிடப்படமாட்டார்! நம்பினோர் கெடுவதில்லை—இது நான்கு மறைத் தீர்ப்பு,

தெய்வத்தால் ஆகாதெனினும் முயற்சிதன் மெய் வருந்தக் கூலிதரும் என்றெல்லாம் சொன்னவர்கள் சாதாரண மனிதரல்ல.

ஒளவை, திருவள்ளுவர் போன்ற ஞானிகள்.

நீங்கள் எடுத்திருக்கும் முயற்சி உங்களுடைய அசைக்க முடியாத தெய்வ நம்பிக்கையை உறுதிப்படுத்துகிறது.

இப்போது நீங்கள் ஆரம்பித்திருப்பதையும் அவனே முன்னின்று முடிப்பான்.

நானும் இந்த முருகப் பெருமானுக்கு நம் பங்கைச் செலுத்தி அவனுடைய அருளைப் பெறவேண்டுமென்ற நோக்கத்தோடுதான் வந்திருக்கிறேன்; பணம் சம்பாதிக்கும் எண்ணத்தோடு வரவில்லை என்பதை அவன் வாசலில் இருந்து உறுதியாகச் சொல்லுகிறேன்; எத்தனை ஆனாலும் இருந்து முழுதும் வேலையை முடித்துத் தருகிறேன் என்றார் ஸ்தபதி வீரமனை ஆசாரி.

பிறகு ஆரம்பம் முதல் கோபுர வேலை முடியப் பத்து ஆயிரம் ரூபாய் கூலிக்கு செய்து தருவதென்று ஓர் ஒப்பந்தப் படிவம் விபரமாக எழுதி ஸ்தபதியார் கை எழுத்துப் போட்டுக் கொடுத்தார்.

முதலில் தேவைப்படும் கற்களுக்கு ஓர் சாப்தா எழுதி இந்த சாப்தாவிலுள்ள கற்களைக் கொண்டு வந்து சேருங்கள். பிறகு நாள் பார்த்து முகூர்த்தம் செய்து வேலையை ஆரம்பிப்போம். அதிலிருந்து நீங்கள் வண்டியில் கல் கொண்டு வரவும் தொடர்ந்து வேலை பார்க்கவும் சரியாக இருக்கும் என்று சொல்லி சாப்தாவைக் கொடுத்தார். அப்படியே செய்கிறோம் என்று சொல்லி நூறு ரூபாய் ஸ்தபதியாருக்கு முன்பணமாகக் கொடுத்து அனுப்பி வைத்தார்கள்.

அன்று இரவு ஊரில் உள்ள அனைவரும் கோவிலில் கூடி கோவில் வேலையை எப்படிப் பார்ப்பது என்று பேசி

னார்கள்-அப்போது சின்னத் தம்பி உடையார், "சரி கோவிலைக் கல்லால் கட்டுவது என்று முடிவு செய்து இருக்கிறோம்: அதைச் செய்து முடிக்க நாம் எப்படி நடக்க வேண்டுமென்பதை இப்போது முடிவு செய்ய வேண்டும் என்றார்.

உங்களுக்குத் தெரிந்த முறையைச் செல்லுங்கள் என்றார் சுப்பையா உடையார். சின்னத்தம்பி உடையார் இங்குள்ளவர்களில் முத்தப்ப உடையார்-முத்துச்சாமி உடையார்—பொன்னையா உடையார்-மெய்யப்ப உடையார்- ரெங்கசாமி உடையார் அம்பலம் பூச்சி உடையார்-வேலு உடையார்-அழகப்ப உடையார்-பெரிய தம்பி உடையார், சுப்பையா உடையார், மருதை உடையார்-இந்தப் பதினோரு பேரும்—இந்தக் கோவிலைக் கட்டி முடிக்கிறோம் என்று மனதில் உறுதி எடுத்துக் கொண்டு முழுப் பொறுப்புடன் செயல்பட வேண்டும்-பாக்கி எல்லோரும்-நீங்கள் எந்த நேரத்தில் எந்த வேலையைச் செய்யச் சொன்னாலும் நாங்கள் செய்யத் தயாராக இருக்கிறோம் என்று இந்த ஆண்டவன் வாசலில் உறுதி எடுத்துக் கொள்ளவேண்டும் என்றார் சின்னதம்பி உடையார்.

சின்னத்தம்பி சொல்லுவதுதான் சரியான முறை என்று எல்லோரும் எழுந்து இடையில் துண்டைக் கட்டிக் கொண்டு சுவாமியை வீழ்ந்து வணங்கிக் கோவில் கட்டி முடியும்வரை பொறுப்புடன் நடந்து கொள்கிறோம் என்று சொல்லி உட்கார்ந்தார்கள்.

சின்னத்தம்பி சொல்லியபடி நடப்பதென்று உறுதி எடுத்துக் கொண்டோம்—இனிப் பணம் சேர்ப்பதற்கு என்ன செய்வது என்பதை முடிவு செய்யவேண்டும் என்றார் சுப்பையா உடையார். எப்படிச் செய்யலாம் என்பதை நீங்களே சொல்லுங்கள் என்றார்-ராமசாமி உடையார்.

சுப்பைய்யா உடையார்—இப்போது நமது ஊரில்-நம் குலத்தவர்கள்-முப்பத்து ஆறு குடிகள் இருக்கிறோம்—குடி ஒன்றுக்கு-ஐம்பது ரூபாய் ரொக்கமாகக் கொடுப்பது-மேலும் குடி ஒன்றுக்கு ஐம்பது ரூபாய் வரி; அதை-நடப்பு ஆண் பெண்களுக்கு உள்ள கூலிப்படி இரவு பகலென்று பாராமல் வேலை செய்து கழிப்பது; வண்டி மாடு வைத்திருப்பவர்கள் எந்தக் கணக்கும் பார்க்காமல்-கோவில் வேலை முடியும் வரை மலையடியிலிருந்து கல்லைக் கொண்டு வந்து சேர்க்கவேண்டும்-அவர்கள் போகும் போது-ஆகும் செலவையும் வண்டிகளில் பழுது ஏற்பட்டால் சீர் செய்யும் செலவையும் கோவில் செலவில் செய்வோம்-இப்படி எல்லாம் உழைத்துத்தான் இந்தக் கோவிலைக் கட்டி முடிக்க வேண்டும்;

நானும் மேஸ்திரியும் அடிக்கடி பர்மா நாட்டிற்குப் போகவேண்டியதிருப்பதால் அங்கு எங்களால் முடிந்த அளவு வசூல் செய்து அனுப்புகிறோம்; இங்கு முத்தப்ப உடையார் தலைமைப் பொறுப்பாளராகவும்-முத்துச் சாமி உடையார்-வேண்டிய சாமான்களை வெளியில் சென்று வாங்கி வந்து கோவிலிலே இருந்து நடக்கும் வேலையைச் செய்யவும்-மற்றவர்கள் பணம் வசூல் செய்தும் வேலைக்கு ஊர் ஆட்களை அழைத்து வேலை சுணங்காமல் பார்க்கவேண்டும்-இப்படி ஒவ்வொருவரும் தன்னலம் கருதாமல் பொறுப்புடன் வேலையைச் செய்ய வேண்டும் என்றார் சுப்பையா உடையார்.

நீங்கள் சொல்லியபடி-எல்லோரும் பொறுப்புடன் வேலை செய்வோம் என்று சம்மதித்தார்கள்.

பிறகு ஒரு நல்ல நாளன்று முற்றுசாமிஉடையார், புதுக் கோட்டை-திருக்கோகரணம் போய் மலையடியில் கல் வியாபாரிகளை விசாரித்து,முத்தையா என்பவரிடம் சாப்தாவைக் கொடுத்து, அதற்குரிய விலையைப் பேசி நிர்ணயம் செய்து, நாங்கள் குறைவான வண்டியைக்

கொண்டு கல் கொண்டு போக வேண்டியதிருப்பதால் சுணக்காமல் கொடுக்க வேண்டுமென்றார்.

ஊரில் இருந்து வண்டிகள் போய் இரண்டு நடை கல் ஏற்றி வந்தது. அப்போது-புதுக்கோட்டை தனி அரசாங்கமாக இருந்ததால் அவர்களுடைய எல்லை கடைசியில் நெடுஞ் சாலைகளில்-சுங்கான் கேட்டு வைத்து கால் ரூபாய் கொடுத்து சீட்டு வாங்கி, அவர்கள் எல்லையில் வண்டி நுழையவேண்டும். அந்த எல்லையிலிருந்து வெளியில் வண்டி வந்தாலும், அதே போல் சீட்டு வாங்கித்தான் வண்டிகள் வரவேண்டும்; இது பழக்கத்தில் உள்ளது.

மூன்றாவது நடை மலையடிக்குப் போய் கல் ஏற்றிக் கொண்டு அறந்தாங்கி நெடுஞ்சாலையில் வண்டிகள் வரும் போது வல்லத்திரா கோட்டைக்கு அருகாமையில் ஓர் வண்டிக்கு சக்கரத்தில் பட்டா விலகி சக்கரம் பழுதாகி விட்டது. அங்கே எல்லா வண்டிகளையும் அவிழ்த்து விட்டு அங்குள்ள தொழிலாளியிடம் அதற்குரிய சாமான்களை வாங்கிக் கொடுத்துப் பழுது பார்த்து இரண்டாவது நாள் மாலையில், வேலை முடிந்து வண்டிகளைப் பூட்டிக் கொண்டு வந்தார்கள்.

கீழையூர் சுங்கான் கேட்டிற்கு வரும்போது நடு இரவு; வண்டிகளை ஓரத்தில் நிறுத்தி விட்டு, மெய்யப்ப உடையார், கேட்டுக் காவலாளியிடம் போய் ஐயா எங்கள் வண்டிகள் ஏற்றி வரும் போது இடையில் ஓர் வண்டியின் சக்கரம் பழுதாகி விட்டது, அதற்குரிய சாமான்கள் வாங்கிச் சீர் செய்ய இரண்டு நாள் ஆகிவிட்டது.

அதன் காரணமாக அதற்கு வேண்டிய சாமான்கள் வாங்கவும் கூலி கொடுக்கவும் எங்கள் செலவாலும் எங்கள் கையில் இருந்த பணம் பூராவும் செலவாகிவிட்டது; ஆகையால், எங்கள் ஆறு வண்டிக்கும் உள்ள சீட்டுக் காசை அடுத்த முறை நாங்கள் வரும்போது சேர்த்துத் தருகிறோம்; இப்போது வண்டியை விடுங்கள் என்று கேட்டார்.

அதற்குக் காவலாளி, ஏளனமாக ஓர் சிரிப்புச் சிரித்து விட்டு, 'இது கடை யல்ல; உங்கள் பேரில் பற்று எழுதிப் பின் வரவு வைக்க. இது புதுக்கோட்டை மகாராஜாவின் எல்லை; சுங்கான் கேட்டு சீட்டுக் கொடுக்காமல் கதவை திறக்கமாட்டேன்'' என்றார்.

"ஐயா—நாங்கள் கோவில் கட்டக் கல் ஏற்றிப் போகிறோம்; இதோடு நின்து விடுபவர்கள் அல்ல; இன்னும் எத்தனையோ முறை வரவேண்டும்; எதிர்பாராமல் எங்களுக்கு இந்த செலவு வந்ததால் பணம் முடிந்து விட்டது; நாங்கள் எப்படியாவது சமைத்துச் சாப்பிட்டு விடுகிறோம்; இந்த மாடுகள் வைக்கோல் கிடைக்காமல் பட்டினி கிடக்கிறது; கொஞ்சம் தயவு செய்யுங்கள் அடுத்து வரும் போது நிச்சயமாகத் தந்து விடுகிறோம் என்று பலவாறு சொல்லிக் கெஞ்சிக் கேட்டார் மெய்யப்ப உடையார்.

அந்தக் கல் நெஞ்சம் படைத்த காவலாளி "நீ கல்லைக் கொண்டு போய்க் கோவில் கட்டினாலும் சரி, அல்லது குப்பையில் கொட்டினாலும் சரி. காசு கொடுக்காமல் கேட்டைத் திறக்க மாட்டேன்; ஒன்றரை ரூபாய் கூடக் கையில் இல்லாத நீங்களா கோவில் கட்டுகிறீர்கள்? என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டார்.

எல்லோரும் மனவேதனைப்பட்டு இப்படியும் எங்கள் காதால் கேட்கவேண்டுமா என்று முருகப் பெருமானைத் தியானித்து, சரி பொழுது விடியட்டும் இந்தக் கிராமத்தில் உள்ளவர்களிடம் கேட்டுப் பார்ப்போம் என்று பேசிக் கொண்டு வண்டியின் அடியில் படுத்து உறங்கினார்கள்.

அடுத்த கணம்–புதுக்கோட்டை அரண்மனையில் மன்னர் உறங்கிக் கொண்டிருந்த போது, வாலிப வயதுள்ள வீரன் ஒருவன்மன்னர் நெஞ்சில் ஓர் காலால் மிதித்து, "உனக்கு தனிராஜ்ஜியம்; சர்வாதிகாரம், கல்லை கோவில் கட்டு, இல்லை குப்பையில் கொட்டு. இப்போது உன்னை என்ன செய்கிறேன் பார்" என்று

சொல்லி அந்த வீரன் வேல் கத்தியை ஓங்கினானாம் நெஞ்சில் குத்த.

மன்னர் வீறிட்டுப் பெரும் சத்தம் போட்டு அலறி நான் இனிமேல் அப்படிச் சொல்லவில்லை என்று பலமுறை சொல்லி—என்னை மன்னித்துவிடு—குத்தாதே என்று கத்தினாராம். ராணி முதல் அங்கு படுத்திருந்த எல்லோரும் ஓடிவந்து—மன்னரைத் தட்டி எழுப்பி ஏன் இப்படிக் கத்து கிறீர்கள் என்று கேட்க,

மன்னர் எழுந்து எல்லோரையும் பார்த்து தான் கண்டது கனவு என்று நிதானித்துக் கொண்டு ராணி, ஒரு வீரன் என் நெஞ்சில் ஓர் காலால் மிதித்து வேல் கத்தியை ஓங்கியபடி உனக்கு தனி ராஜ்ஜியம் சர்வாதிகாரம், கல்லை கோவில் கட்டு இல்லை குப்பையில் கொட்டு என்று சொல்லி என் நெஞ்சில் குத்த முற்பட்டான்—நெஞ்சில் குத்தப் போனானே என்றுதான், நான் இனி சொல்லவில்லை; என்னை மன்னித்துவிடு என்று சொல்லி அலறினேன் என்றார் மன்னர்.

ராணியார் அந்த வீரனைத் தவிர வேறு யாரும் அங்கு நீங்கள் பார்க்கவில்லையா என்றார்?

மன்னர்—வேறு மனிதர்களை யாரும் காணவில்லை. கல் ஏற்றியபடி வண்டிகள் பக்கத்தில் நின்றது; அறந்தாங்கி நெடுஞ்சாலை கீழையூர் சுங்கான் கேட்டைப்போல் ஓர் அடையாளம் தெரிந்தது, வேறு எதுவும் தெரியவில்லை" என்றார்.

அதைக் கேட்ட ராணியார்—சரி நீங்கள் எழுந்து முகம் கைகால்—கழுவி தாம்பூலம் தரித்து ஆசுவாசப்படுத்துங்கள் என்றார்.

மன்னர் உடம்பெல்லாம் நடுங்குகிறது என்று சொல்லி முகம் கழுவிக் கொண்டு வந்து பஞ்சணையில் அமர்ந்தார்.

ராணியார் நீங்கள் கண்ட கனவிற்கு என்ன பொருள் என்றார்—பொருளாவது, எனக்கு இன்னும் நடுக்கமே நிற்கவில்லை, பொருள் கேட்கிறாய் என்றார் மன்னர்.

ராணியார்—வேல்கத்தி என்றால் வேலாயுதம், அந்த வேலாயுதம் முருகனுக்கு உரியது; சூரபதுமனை அழிக்க—உமாதேவியார் தன்னுடைய சக்தி எல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்த்து ஓர் கூரிய வேலாக்கித் தன் மகன் முருகனுக்குக் கொடுத்தார்—அதை இப்போது கொலைக் கருவியாக வேல்கத்தி என்று பயன்படுத்துகிறார்கள் நாட்டில்.

வேலுடன் நின்ற வீரன் முருகன்தான் நீங்கள் பெரும் புண்ணியம் செய்திருக்கிறீர்கள்; அவன் பாதம் உங்கள் மேனியில்பட, நீங்கள் கண்ட கனவு அறந்தாங்கி செல்லும் நெடுஞ்சாலையில் கீழையூர் கேட்டு—பக்கத்தில் கல் ஏற்றிய படி வண்டிகள், கல்லைக் கோவில் கட்டினாலும் சரி குப்பையில் கொட்டினாலும் சரி இப்படித்தானே என்றார் ராணியார்.

ஆமாம் என்றார் மன்னர்—சரி இது ஏதோ தெய்வ சம்பந்தமாகத் தெரிகிறது—காலை பொழுது புலர்ந்த உடன்—திவானை அனுப்பிக் கீழையூர் கேட்டில் என்ன நடந்தது என அறிந்து வரச் சொல்லுங்கள்—நீங்கள் பயப்பட வேண்டாம்.

அவர் பாதம் உங்கள் மேனியில் பட்டதே யாருக்கும் கிடைக்காத பாக்கியம்; அதுபோதும், பிறகு யோசிப்போம் என்றார் ராணியார்.

மன்னர்—வந்தது முருகப்பெருமான்தான்; அவர் தம் பாதம் பட்டதே எவருக்கும் கிடைக்காத பாக்கியம்; என்கிறாய் கனவில்தானே என்றார்;

நமக்கெல்லாம் நேரிலா வருவார். அவ்வளவுக்கா—நாம் தவம் செய்திருக்கிறோம்? கனவில் வந்து காட்சி கொடுப்பதற்கே நாம் பல புண்ணியம் செய்திருக்க வேண்டுமென்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள் என்றார் ராணியார்.

பொழுது புலர்ந்தது மன்னர் மண்டபத்திற்கு வந்து திவானை அழைத்து வர உத்தர விட்டார்—திவான் வந்து

மன்னருக்கு மரியாதை செலுத்தினார்—அவரை அமரச் சொல்லி மன்னர்—இரவு நடந்ததைச் சொல்லி இப்போதே என்னுடைய நகர்பவனி வண்டியில் அதிவேகமுள்ள இரண்டு குதிரைகளைப் பூட்டி அறந்தாங்கிச் சாலையில்—கீழையூர் நமது சுங்கான் கேட்டில் இன்று இரவு என்ன நடந்தது என்பதை வெகு சீக்கிரம் அறிந்துவா என்று உத்திர விட்டார் மன்னர்.

தங்கள் வண்டியிலா என்றார் திவான். பரவாயில்லை—மற்ற வண்டிகள் வேகம் தாங்காது, இதையே எடுத்துக் கொண்டு உடனே புறப்படு என்றார் மன்னர்.

அதன்படி மன்னருடைய வண்டியில் அதிவேகமுள்ள இரண்டு குதிரைகளைப் பூட்டிக் காற்றைப் போல் பறந்து சென்றார் திவான்.

சாலையின் அருகாமையில் உள்ள மக்கள் ஆச்சரியப் பட்டுப் பொழுது விடிந்தும் விடியாததுமாக மன்னருடைய வண்டி தெற்கு நோக்கிப் பறக்கிறது; என்ன விபரமென்று தெரியவில்லையே, சாதாரண விசயமாக இருந்தால் இந்த நேரத்தில் மன்னர் போக மாட்டாரே, ஏதோ தெரிய வில்லையே என்று பேசிக் கொண்டார்கள்.

கீழையூர் கேட்டில் வண்டியை நிறுத்தி திவான் இறங்கி னார். காவலாளிகள் ஓடி வந்து வணங்கினார்கள்.

இன்று இரவு இங்கு என்ன நடந்தது என்றார் திவான். காவலாளிகள் ஐயா இங்கு ஒன்றும் நடக்கவில்லையே என்றார்கள். இந்த கல் வண்டிகள் ஏன் அவிழ்த்து இருக் கிறது என்றார்.

ஐயா, அவர்கள் வரும் வழியில் வண்டி பழுதாகி விட்டது. அதனால் கையில் இருந்த காசு பூராவும் அது சம்பந்தமாகச் செலவாகி விட்டது. அடுத்த முறை வரும் போது தருகிறோம் என்றார்கள்—முடியாது என்று சொன்னோம். அவர்களும் எவ்வளவோ கெஞ்சிக்

கேட்டார்கள்: நாங்கள் காலில் விழுந்து கும்பிட்டாலும்— காசு வாங்காமல் கேட்டுக் கதவைத் திறக்க மாட்டோம் என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டோம். அதன் பிறகு அவிழ்த்து வைத்திருக்கிறார்கள் என்று கூறினார்கள்.

வண்டிக்காரர்களை அழைத்து இந்தக் கல்வண்டிகள் எங்கே போகின்றன ? இந்த கற்களை எதற்குக் கொண்டு போகிறீர்கள் என்று கேட்டார் திவான் பேஸ்கார்:

மெய்யப்ப உடையார் விபரமாகச் சொன்னார். பிறகு "ஐயா, இவர்கள் காவலாளிகள்: அரசாங்க உத்தரவு அப்படி. இவர்கள் மேல் தவறில்லை" என்றார்.

ஐயா—நாங்கள் கேட்டதற்கு — இவர்கள் நீங்கள் எவ்வளவு கெஞ்சினாலும் அரசாங்க உத்தரவை மீறி நாங்கள் நடக்க மாட்டோம் என்று சொல்லலாம்: மாறாக நீங்கள் கோவில் கட்டினாலும் சரி குப்பையில் கொட்டினாலும் சரி, காசில்லாமல் கதவைத் திறக்க மாட்டோம் என்றார்கள். அந்த வார்த்தை இன்னும் எங்கள் மனதை உறுத்துகிறது: நாங்கள் என்ன செய்ய முடியும். எங்கள் ஆண்டவனிடம் முறையிட்டு விட்டுப் படுத்திருந்தோம்.

இப்போது ஊருக்குள் போய் இங்குள்ளவர்களிடம் கடன் கேட்போம் என்று புறப்பட்டோம்: நீங்கள் வந்து விட்டீர்கள் என்றார் மெய்யப்ப உடையார்.

ஐயா அவர்கள் சொன்னது உங்கள் மனத்தை புண் படுத்தும் அகம்பாவமான வார்த்தைதான். அதை உங்கள் முன்னால் காட்ட வேண்டாமென்பதற்காக அப்படிச் சொன்னேன்.

உங்கள் ஆண்டவன் அங்கு கோவிலில் இல்லை; உங்கள் கூடவே வண்டியில் வருகிறார். நீங்கள் மனம் நொந்து

முறையிட்டவுடன் அவர் கொதித்து எழுந்து புதுக் கோட்டை எங்கள் அரண்மனையையே ஒரு ஆட்டு ஆட்டி எங்கள் மன்னர் உயிரையே மாய்க்க வேலாயுதத்தை ஓங்கினாரம்! மன்னர் நான் இனிமேல் அப்படிச் சொல்ல வில்லை என்னை மன்னித்து விடு என்று சொல்லி அவரிடம் உயிர்ப்பிச்சை வாங்கி இருக்கிறார். ஆகையால் தயவு செய்து எங்களையும் அவர்களையும் மன்னித்து விடுங்கள்.

உங்கள் வண்டியை நிறுத்தியதற்கு அபராதமாக இதை வைத்துக் கொள்ளுங்கள்; உங்களுடைய வழிச் செலவுக்கு ஆகும் என்று சொல்லி திவான் பத்து ரூபாயை கொடுத்தார்.

ஐயா, உங்களைக் கண்டதும் இந்த ஊர் ஆண் பெண் மக்கள் அடங்கலும் வந்து கூடி விட்டார்கள். நீங்கள் யாரென்பது எங்களுக்குத் தெரியாது. வண்டியையும் குதிரையையும் பார்க்கும் போது அரண்மனையைச் சேர்ந்த வர்களாக' இருக்கலாம் என்று கருதுகிறோம்.

நீங்கள் ஓர் பெரும் வார்த்தையை சொல்லுகிறீர்கள்: வழிச் செலவுக்கு என்று கொடுத்தாலும் வாங்கலாம்; நாங்கள் பிச்சை எடுப்பவர்கள்தான். ஆனால் உங்களிடம் அபாரதம் வாங்கும் தகுதி எங்களிடம் இல்லை. வேண்டாம் ஐயா, எங்கள் வண்டியை விட்டாலே உங்களுக்குப் புண்ணியம் கிடைக்கும் என்றார் மெய்யப்ப உடையார்.

ஐயா! நான் மன்னிப்பு கேட்பதும் அபராதம் கொடுப் பதும் உங்களுக்கல்ல; உங்கள் ஆண்டவனுக்கு; அரசன் தவறு செய்தாலும் ஆண்டவனிடம் மன்னிப்புக் கேட்டு அபராதம் கொடுக்க வேண்டியதுதான் முறை. நான் புதுக் கோட்டை மன்னரின் (மந்திரி) திவான்.

இவர்கள் உங்கள் வண்டியை நிறுத்தியது தவறில்லை; உங்கள் வறுமை-கெஞ்சி கேட்டீர்கள். இந்த மனித இதய மில்லாததால், கோவில் கட்டினாலும் குப்பையில் கொட்டி னாலும் சொன்ன வார்த்தையை நீங்கள் பொறுத்துக்

கொண்டீர்கள். நம்மால் என்ன செய்ய முடியும் என்று உங்கள் ஆண்டவனிடம் முறையிட்டீர்கள்.

உங்கள் ஆண்டவனிடம் எங்கள் அரச பதவி செல்ல வில்லை. நெஞ்சில் ஓர் காலால் மிதித்து வேலாயுதத்தை ஓங்கியவுடன் இனி நான் அப்படிச் சொல்லவில்லை, சொல்லவில்லை, என்னை மன்னித்துவிடு என்று மன்றாடி உயிர்ப்பிச்சை வாங்கி இருக்கிறார் எங்கள் மன்னர். அதனால்தான் அவரை நாங்கள் எங்கே காண்பது. அவருடைய தொண்டர்களாகிய உங்களிடம் தருகிறேன் என்றார் திவான்.

ஐயா, நீங்கள் முழுவிபரத்தையும் சொல்லி விட்டீர்கள். அரசனும் ஆண்டவனுக்குக் கட்டுப்பட்டவன்தான்—அரசன் தவறு செய்தாலும் ஆண்டவனுக்கு அபராதம் கட்டுவது நியாயம் தான். ஆனால் அதை நாங்கள் வாங்க மாட்டோம் என்று பிடிவாதமாகச் சொல்லிவிட்டார் மெய்யப்ப உடையார்.

ஐயா. அதை நீங்கள் வாங்கவேண்டாம்; நாங்கள் வேறு வழியில் செலுத்தி விடுகிறோம். இதிலிருந்து உங்கள் ஊர் இருபத்து ஐந்து மைலில் இருக்கிறது என்கிறீர்கள். உங்க ளிடம் சுத்தமாகக் காசு இல்லை என்பது தெரிகிறது? நீங்களோ கல்ஏற்றிய வண்டி ஓட்டி போகிறீர்கள். இடை யில் ஏதாவது—சுணக்கம் ஏற்பட்டால் கஷ்டப்படுவீர்கள். ஆகையால் என்னுடைய அன்புக் காணிக்கையாக இதை வைத்துக் கொள்ளுங்கள், என்று கைகூப்பி வணங்கித் திவான் பத்து ரூபாயைக் கொடுத்தார்.

மெய்யப்ப உடையாரும் கைகூப்பி வணங்கிப் பெற்றுக் கொண்டார்.

ஐயா. இன்று முதல் உங்கள் கோவில் வேலை முடியும் வரை எத்தனை வருஷமானாலும் இந்த கேட்டுக்குக் காசு கொடுக்காமல் வண்டி ஓட்டுங்கள் என்று சொல்லிக் காவலர் களைப் பார்த்து அம்பலவாணனேந்தல் என்று சொன்னால்

நீங்கள் காசு கேட்காமல் தாமதமின்றி கேட்டைத் திறந்து விடவேண்டும். இது அரசாங்க உத்தரவு என்றார் திவான்.

காவலர்கள் அப்படியே செய்கிறோம் என்றார்கள்.

ஐயா, நேரத்தோடு வண்டியைப் பூட்டிப் பத்திரமாகப் போய்ச் சேருங்கள் என்றார். எல்லா வண்டிகளையும் பூட்டி ஓட்டினார்கள்; வண்டிகள் தொலைவுக்கு போகும் வரை திவான் அங்கேயே நின்று பிறகு காவலாளிகளைப் பார்த்து உங்கள் அகம்பாவத்தால் இவ்வளவு நடந்து விட்டது. இன்று மாலை இருவரும் அரண்மனை வந்து சேருங்கள் என்று சொல்லி திவான் வண்டியில் புறப் பட்டார்.

மன்னரும் ராணியும் திவானின் வருகையை எதிர் பார்த்து 'சபாமண்டபத்தில் இருந்தார்கள்; திவான் அரண்மனையை அடைந்து வண்டியைவிட்டு இறங்கி உள்ளே சென்றார். மன்னர் அவரை அமரச் சொல்லி அங்கு ஏதேனும் விபரம் தெரிந்ததா என்றார்.

பார்த்தேன், அங்கே ஓர் பெரிய காரியம் நடந்திருக் கிறது என்று முழுவிபரத்தையும் சொன்னார் திவான்.

அதைக் கேட்டதும் திடுக்கிட்டு அந்த அகம்பாவம் பிடித்தவர்கள் பேச்சால் அந்த முருகன் என்னையல்லவா கொல்லப் பார்த்தார் என்று ஆத்திரப்பட்டார் மன்னர்.

ராணியார், "ஆத்திரப்படாதீர்கள். அவர்கள் அப்படிச் செய்யாவிட்டால், அந்த முருகப்பெருமான் நம் அரண்மனைக்கு எழுந்தருள மாட்டார். நீங்களும் பார்த் திருக்க முடியாது; எல்லாம் நன்மைக்கே! அவர்களைவேலை யிலிருந்து விலக்கி விடாதீர்கள்'' என்றார்.

காவலர் இருவரும் மாலையில் அரண்மனையை அடைந்து நமக்கு என்ன ஏற்படப் போகிறதோ என்று பயந்து நடுங்கிக் கொண்டு, மன்னர் முன் சென்று வணங்கி னார்கள்.

நீங்கள் கேட்டுக் காவலாளிகளா என்றார். ஆமாம் என்றார்கள். அம்பலவாணனேந்தல் கல் வண்டிக்காரர் களுக்கும் உங்களுக்கும் என்ன வாக்குவாதம் என்றார்? அரசே நாங்கள் ஒன்றும் வாக்குவாதம் செய்யவில்லை என்று பேச முடியாமல் உளறினார்கள்.

மன்னர்—இப்போது உளறுகிறீர்கள். அவர்களிடம் பேசிய திமிர் இப்போ எங்கே? உங்களை எல்லாம் என்ன செய்யப் போகிறேன் தெரியுமா என்று கடுமையான கோபத்தில் பேசினார்.

அப்போது ராணியார், கோபப்படாதீர்கள்; அவர்கள் கடமையைச் செய்தார்கள்; அவர்கள் வறுமை, திரும்பத் திரும்பக் கேட்டவுடன் சற்று கோபத்தில் அப்படிச் சொல்லி விட்டார்கள்; அது மனித இயல்பு.

அந்த ஆண்டவனிடத்தில் இவ்வளவு சக்தி இருக்கிறது என்பதை அவர்கள் கண்டார்களா? ஏன் நாம் தான் கண்டிருப்போமா? அப்படி நடக்காவிட்டால், அந்த முருகப் பெருமானின் சக்தியை நம் போன்றவர்களுக்கு அதாவது, அரசன் முதல் ஆண்டிவரை கடவுளுக்குக் கட்டுப்பட்ட வர்கள்; அரசன் தவறு செய்தாலும் உடனே ஆண்டவன் தண்டிப்பான் என்று உலக மக்களுக்கு உணர்த்த இப்படி யொரு திருவிளையாடலை செய்திருக்கிறார். ஆகையால் இவர்களை மன்னித்து விடுங்கள் என்றார் ராணியார்.

மன்னர் நெடுநேரம் மௌனமாக இருந்து காவலர் களை பார்த்து திவான் சொன்னபடி இன்று முதல், அந்தக் கோவில் வேலை எத்தனை வருஷத்திற்கு நடந்தாலும், அந்த ஊர் வண்டிக்குக் காசு வாங்காமல் விடவேண்டும். போய் முறையோடு வேலையைச் செய்யுங்கள் என்றார். காவலர் இருவரும் மன்னரை வீழ்ந்து வணங்கி அப்படியே செய்கிறோம் என்று விடை பெற்றுக் கொண்டு சென்றார்கள்.

மறுநாள்—மன்னர் சேவகரை அழைத்து, மலையடிக்கு போய் அம்பலவாணனேந்தல் முருகன் கோவிலுக்கு—கல் கொடுப்பது யார் என்று விசாரித்து இங்கு அழைத்துவா என்று அனுப்பினார்.

சேவகர் மலையடிக்குப் போய் விசாரித்து அழைத்து வந்தார்; மலையடிக்காரர் மன்னருக்கு மரியாதை செலுத்தினார்;

மன்னர், அவரை அமரச் சொல்லி உன் பெயர் என்ன என்றார்? என் பெயர் முத்தையா என்றார். பெயர் பொருத்தம் சரிதான்; நீர்தான், அம்பலவாணனேந்தல் முருகன் கோவிலுக்குக் கல் கொடுப்பவரா என்றார்—முத்தையா. ஆம், நான்தான் கொடுக்கிறேன் என்றார்; அப்படியானால் அடுத்த முறை கல் எடுக்க வரும்போது, அவர்கள் எல்லோரையும் நான் சொன்னதாக இங்கு அழைத்துவா என்றார் மன்னர். அப்படியே செய்கிறேன் என்று விடைபெற்றுக் கொண்டு சென்றார் மலையடி முத்தையா.

கீழையூர் கேட்டில் திவானிடம் விடை பெற்றுக் கொண்டு வண்டி பூட்டியவர்கள் மறுநாள், ஊர் வந்து சேர்ந்தார்கள். காலையில் ஊர்ப்பெரியவர்கள் வண்டிவர, ஏன் இத்தனை நாள் சுணக்கம் என்று விசாரித்தார்கள்.

மலையடியில் கல் ஏற்றி வரும்போது இடையில் வண்டி பழுதடைந்ததையும், கீழையூர் கோட்டில் நடந்த சம்பவங்களையும், திவான் சொன்ன வார்த்தைகளையும் விபரமாகச் சொன்னார் மெய்யப்ப உடையார்.

அதைக் கேட்ட எல்லோரும் ஆச்சரியப்பட்டு, நம் முருகப்பெருமான் நமக்கு உதவி செய்கிறார்; நாம் எப்படியும் கோவில் கட்டி முடித்து விடலாம்; இனிமேல் நாம் கேட்டுக்கு காசு கொடுக்க வேண்டியதில்லை; நம் கோவில் வேலை முடிவதற்குள், அதற்கு ஒரு தொகையே

வந்துவிடும்; அதை முதலிலே இல்லாமல் செய்துவிட்டார். இதைப்போல் எல்லா வேலைகளுக்கும் திவான் சொன்னதைப்போல் நம்கூட இருந்து உதவி செய்வார் என்ற நம்பிக்கை வந்து விட்டது என்றார் ராமசாமி உடையார்.

அடுத்த வாரம் கல் ஏற்ற வண்டிகள் புதுக்கோட்டை போய் சேர்ந்தன.

அங்கே மலையடி முத்தையா "ஐயா உங்கள் எல்லோரையும் அரண்மனைக்கு அழைத்து வரும்படி மன்னர் உத்தரவிட்டிருக்கிறார்" என்றார்.

முத்துச்சாமி உடையார் "முத்தையா என்ன காரியமாக எங்களை அழைக்கிறார்" என்றார்.

"ஐயா, மன்னர் எந்த விபரமும் சொல்லவில்லை; நீங்கள் இங்கு வந்தவுடன் எல்லோரையும் நான் சொன்னதாக இங்கு அழைத்து வா" என்றார்; சரி என்று சொன்னேன். காரணம் கேட்க முடியுமா என்றார்.

எதுவாக இருந்தாலும் சரி என்று எல்வோரும் அரண்மனைக்குச் சென்று மன்னருக்கு மரியாதை செலுத்தினார்கள்; மன்னர் எல்லோரையும் அமரச் சொன்னார்.

இவர்கள் தான் அம்பலவாணனேந்தல் கோவிலுக்குக் கல் எடுக்க வந்திருக்கிறார்கள் என்று அறிமுகப்படுத்தினார் முத்தையா.

மன்னர் ''எல்லோரும் சாம்பிட்டீர்களா'' என்றார். "காலையில் சாப்பிட்டுத்தான் அரண்மனைக்குப் புறப்பட்டோம் என்றார்கள். அப்போது ராணியாரும் வந்தார். இவர்கள் தான் அந்த அம்பலவாணனேந்தல் முருகனுடைய தொண்டர்கள் என்று ராணிக்கு அறிமுகப்படுத்தினார் அரசர்.

"ஐயா, உங்களுக்கெல்லாம் வணக்கம்" என்றார் ராணியார். பதிலுக்கு அவர்களும் வணக்கம் சொன்னார்கள்;

மன்னர், "உங்கள் கோவில் வரலாற்றில் சிறிது சொன்னார் திவான்; அந்தக் கோவிலின் முழு வரலாற்றையும் விபரமாகச் சொல்லுங்கள்" என்றார்.

மெய்யப்ப உடையார் கோவில் உற்பத்தி முதல் அன்றைய வரைக்கும் நடந்ததைச் சுருக்கமாகவும் தெளிவாகவும் விளக்கமாகவும் சொல்லி முடித்தார்.

அமைதியாக முழு கவனத்தோடு கேட்ட மன்னரும் ராணியும் ஆனந்தபரவசமடைந்து, ராணியார், ஐயா தெய்வம் என்றால் உங்கள் முருகன்தான் தெய்வம்; நீங்கள் சொன்னதை எல்லாம் உன்னிப்பாகக் கேட்டவுடன் உடம்பெல்லாம் நடுங்குகிறது அங்கு. அந்தக் கலியுக வரதன் நடத்திக் கொண்டிருக்கும் ஒவ்வொரு நிகழ்ச்சியையும் நீங்கள் சொல்லும்போது பழைய வரலாற்றை மிஞ்சி விட்டார் உங்கள் முருகன்.

முன்னால் இறைவன் பல அற்புதங்களை செய்ததாகப் புராணங்களில் படித்திருக்கிறோம்; அது உண்மையோ அல்லது நூலை எழுதியவர்கள் இறைவனைப் பெருமையாக எழுதினார்காளா என்று நினைத்தோம்.

அது பூராவும் உண்மை, அதற்கு மேலும் இறை சக்தி உண்டு என்பதை நிருபித்து காண்பிக்கிறார் நமக்கெல்லாம் உங்கள் முருகப் பெருமான்.

நம்பியவர்களைக் காப்பாற்றுவேன், குற்றம் புரிவோர் யாராக இருந்தாலும் உடனே தண்டிப்பேன் என்று இந்தக் கலியுகத்தில் உள்ள மக்களுக்கு; நேருக்கு நேர் காண்பித்துக் கொண்டிருக்கிறார், உங்கள் பெருமான்.

நீங்களெல்லாம் பெரும் புண்ணியம் செய்து அந்த ஊரில் பிறந்து அவருக்குத் தொண்டு செய்யும் வாய்ப்பைப் பெற்று இருக்கிறீர்கள்" என்றார் அரசியார்.

மன்னர் "ராணி, இவர்களுக்கு மதியம் விருந்திற்கு ஏற்பாடு செய்" என்றார்.

அரசியார் இவர்கள் யாரென்று தெரிந்த உடனே அந்த ஏற்பாட்டைச் செய்து விட்டேன்! மதியம் இவர்களுக்கு என் கையால் உணவு பரிமாறப் போகிறேன். அந்த முருகப் பெருமானின் தொண்டர்களுக்கு நாம் ஒரு தொண்டு செய்வோம். தொண்டருக்குத் தொண்டு செய் என்று சொல்லி இருக்கிறார்களே, அதன்படி நாம் செய்வோம், என்றார் அரசியார்.

மன்னர் "மிக்கமகிழ்ச்சி! உன்னுடைய தெய்வ பக்தியையும் தொண்டுள்ளத்தையும் பாராட்டுகிறேன்.

ராணி ஆவதும் பெண்ணால் அழிவதும் பெண்ணால் என்று முன்னால் ஓர் பழமொழி நம் நாட்டில் உண்டு.

சாதாரணக் குடும்பம் முதல் அரச குடும்பம் வரை, அந்தந்தக் குடும்பத்தின் பெண்களால்தான். குடும்பத்தின் உயர்வும் தாழ்வும். நீ இப்போது அதை நிருபித்து விட்டாய். இந்த காரியத்தில் பல இடத்தில் என் கோபத்தை அமர்த்தி உன்னுடைய பணிவையும், தொண்டுள்ளத்தையும் தெய்வ பக்தியையும் எனக்குப் புரியவைத்து விட்டாய்! சரி இவர்களை அழைத்துப் போய் உணவு படைத்து அழைத்து வா" என்றார் மன்னர்.

ராணியார் எல்லோரையும் அழைத்துப் போய்த் தன் கையால் உணவு படைத்து சாப்பிடச் செய்து அழைத்து வந்தார்.

மன்னர் எல்லோரையும் அமரச் சொல்லி, ஐயா உங்கள் கோவிலின் வரலாற்றைச் சொன்னீர்கள். அதன் பெருமையை எல்லாம் ராணியார் சொல்லி விட்டார். இந்தக் கலியுகத்தில் இது ஒரு பெரிய அதிசயம் என்று சொல்லி:

கல் வண்டியைக் காவலர்கள் நிறுத்திய மறுகணமே தான் கண்ட கனவையும், பிறகு திவானை அனுப்பியதையும் விபரமாகச் சொல்லி, உங்கள் ஆண்டவனின் பெரு

மையையும், சக்தியையும் நான் நன்கு தெரிந்து கொண்டேன். ஆகையால் உங்களின் ஆண்டவனுக்கு நானும் அடிமைப் பட்டவன். இன்று முதல், உங்கள் கோவில் வேலை முடியும் வரை கேட்டுக்கு காசு கொடுக்க வேண்டாம், என்று சொல்லி ஒரு தட்டில் வெற்றிலை பாக்குடன் ஆயிரம் ரூபாய் பணத்தை வைத்து, இதை உங்கள் கோவில் திருப்பணிச் செலவிற்கு என்னுடைய காணிக்கையாக 'வைத்துக் கொள்ளுங்கள் என்று எழுந்து நின்று தட்டைக் கொடுத்தார். முத்துச்சாமி உடையார் எழுந்து பணிவுடன் அதைப் பெற்றுக் கொண்டார். பிறகு எல்லோரும் மன்னருக்கு வணக்கம் தெரிவித்து விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டு மலையடிக்குப் போனார்கள். அங்கு வண்டிகளில் கல்லை ஏற்றிக் கொண்டு இரவு புறப் பட்டார்கள். அதன்படி ஒவ்வொரு வாரமும் மலையடிக்குப் போய், சாப்தாப்படி கற்களைக் கொண்டு வந்து சேர்த் தார்கள்.

சாப்தாவிலுள்ள கற்கள் வந்து விட்டதால் ஸ்தபதி யாரை அழைத்து வந்தார்கள். அவர் சாப்தாப்படி கற்களை ஒத்து பார்த்து, இனிமேல் முகூர்த்தம் செய்து வேலையைத் தொடர்ந்து பார்க்கலாம் என்றார்.

அதன்படி நாள்பார்த்து. 1825ஆம் வருடம் தமிழ் 11 ஆம் தேதி திங்கள்கிழமை உதயாதி மூன்றே முக் காலுக்குள் முகூர்த்தம் செய்ய முடிவு செய்தார்கள்.

முகூர்த்தம் செய்யத் தேவையான சாமான்களைச் சீட்டை எழுதிக் கொடுத்து, ஸ்தபதியார் முகூர்த்தம் உதயாதிக்கு செய்ய வேண்டியதிருப்பதால் பத்தாம் தேதி இரவு கோவிலில் பூஜையை விசேட அபிஷேக ஆராதனையுடன் ஊரில் அனைவரும் வந்து சாமி தரிசனம் செய்து அதிகாலையில் முகூர்த்தம் செய்யவேண்டும் என்றார், ஸ்தபதி வீரமனை ஆசாரி.

அப்படியே செய்வதென்று சிட்டைப்படி சாமான் வாங்க வந்து, பத்தாம் தேதி இரவு. அதிக அளவு பால்

பன்னீர், இளநீர் இவைகளால் விசேட அபிஷேக ஆராதனை செய்து ஊரில் ஆண் பெண் அனைவரும் வந்து சாமி தரிசனம் செய்தார்கள். காலை உதயாதிக்கு முன்னால் எல்லோரையும் கோவிலுக்கு வரும்படி சொல்லி அனுப்பினார்கள்.

1925 ஆம் வருடம்—தமிழ் குரோதன வருஷம் ஆவணி 11ஆம் தேதி திங்கள் கிழமை காலை சூரிய உதயத்திற்கு முன் ஸ்தபதியார் செய்ய வேண்டிய பூஜைகளைச் செய்து சூரியன் உதயமான உடன் சாமி கும்பிட்டு எல்லோரும் மஞ்சள் குங்குமம் தொட்டு வைத்து முகூர்த்தம் செய்து எல்லோருக்கும் பிரசாதம் காப்பரிசி வழங்கினார்கள்.

அது முதல் வேலையைத் தொடங்கி, சில்லரை வேலைகளுக்கு ஊர் ஆட்களை அழைத்து வேலையை ஆரம்பித்தார்கள்.

குளம் அருகாமையில் பத்து அடிக்குள் இருப்பதால், ஊரணியின் அடிமட்டத்திற்குக் கீழ் காங்கிரீட் போட்டு ஆரம்பிக்க வேண்டுமென்று ஸ்தபதியார் சொல்ல அதன்படி கர்ப்பக்கிரகத்தின் முழு அகலமும் பதினைந்து அடி ஆழம் மண்ணைத் தோண்டி எடுத்து அதில் காங்கிரீட் போட்டு முழுமையும் செங்கலால் கட்டி பூமி மேல் மட்டம் வரை வேலையை முடித்து,

கல் வேலை ஆட்களை அழைத்து வந்து கருங்கல் வேலையை ஆரம்பித்தார் ஸ்தபதியார்; மேலும் வேண்டிய கற்களுக்குக் கணக்குப் போட்டு சாப்தா கொடுத்து இதன்படி கல்லைக் கொண்டு வாருங்கள் என்றார்.

சாப்தாப்படி மலையடியிலிருந்து கற்கள் வந்து கொண்டிருந்தன. திருப்பணியின் பொறுப்பாளர்கள் ஊரில் போட்ட வரியையும் வசூல் செய்து வெளியில் பல ஊர்களுக்கும் போய் வசூல் செய்து வந்து வேலையைப் பார்த்தார்கள்.

திருப்பணியின் கணக்கப்பிள்ளை முத்துச்சாமி உடையார் ஸ்தபதியாரிடம் ''ஐயா, நாங்கள் எல்லோரும் விவசாயிகளாகையால், எங்கள் விவசாய வேலையையும் பார்த்துக் கொண்டு இடையில் கிடைக்கும், ஒய்வு நேரத்தில்தான், மலையடிக்கு போய்க் கல் கொண்டு வரமுடியும், இங்கு இருப்பதும் ஆறு வண்டிதான், அதிலும் எங்கள் வண்டிச் சாலையோ மழைக்காலம் ஆறுமாதத்திற்கு, வெறும் வண்டியை கூடப் பூட்ட முடியாது, கோடை ஆறு மாதத்தில் எங்கள் உழவடை நேரம் போகப் பாக்கி நேரத்தில் தான் போய்க் கல்லைக் கொண்டு வரலாம். மேலும் பணத்திற்குப் பல இடங்களுக்குப் போய் வசூல் செய்து வேலை பார்க்க வேண்டியதிருப்பதால், இதை எல்லாம் அனுசரித்து நீங்கள் அதற்குத் தக்கபடி ஆட்களை வைத்து வேலையைப் பார்க்கவேண்டும். பணத் தட்டுப்பாட்டாலோ, அல்லது, கற்கள் இல்லை என்றோ வேலையை நிறுத்தக் கூடாது.

திருப்பணி வேலையை இடையில் நிறுத்தினால் மீண்டும் ஆரம்பிப்பது ரொம்பக் கடினம். சில இடத்தில் நிறுத்திய வேலை அப்படியே கிடந்து பட்டுப் போய் இருப்பதையும் நாம் பார்கிறோம்'' என்றார்.

''ஐயா, நீங்கள் சொல்லியது முற்றிலும் உண்மை; இந்தக் குறுகிய நாளில் இவ்வளவு பெரிய அனுபவங்களைப் போதித்து இருக்கிறான் இந்த ஆண்டவன் திருப்பணி வேலையை இடையில் நிறுத்தினால் அடுத்து ஆரம்பிப்பது மிகமிகக் கடினம்; வெகு இடத்தில் முன்னால் பெரிய மன்னர்கள் செய்த திருப்பணிகள் கூட இடையில் நின்ற படியே கிடக்கின்றன. நீங்கள் சொல்லிய கருத்து மிக முக்கியமானது. அதை அனுசரித்து நான் வேலையைப் பார்க்கிறேன். காலம் சுணங்கினாலும் பரவாயில்லை. எடுத்த வேலை முடிவ்டைய வேண்டுமென்பதுதான் என்னுடைய குறிக்கோள்'' என்றார் ஸ்தபதியார்.

அதன்படி வந்து சேரும் கற்களையும் இருக்கும் பணத்தையும் அனுசரித்து வேலை நடந்து கொண்டிருந்தது.

1939ஆம் வருஷம் கோடையில் திருக்கோகரணம் மலையடியில் கல் ஏற்றி வண்டிகள் அறந்தாங்கி சாலையில் வரும் போது, கத்தக்குரிச்சி என்னும் ஊருக்குப் பக்கத்தில் ஒரு வண்டியின் அச்சு ஒடிந்து விட்டது. வண்டிகளை ஒதுக்கி அவிழ்ந்து விட்டு அங்குள்ள ஆசாரியை அழைத்து வந்து காண்பித்தார்கள். பார்த்த ஆசாரி ஐயா வண்டியிலுள்ள கல்லை இறக்கினால், அச்சைக் கழற்றிச் சீர் செய்து தருகிறேன் என்றார், வந்தவர்கள் ஐயா கல்லைக் கீழே இறக்கினால் மறுபடியும் வண்டியில் ஏற்ற முடியாதே கல்லை இறக்காமல் சக்கரத்தை கழற்றி வேலை செய்ய முடியாதா என்றார்கள்.

அய்யா அப்படிச் செய்ய எனக்கு ஒன்றும் யோசனை தெரியாது; ஆனால், குளவாய்ப் பட்டியில் முத்து வேல் ஆசாரி என்று ஒரு வயதானவர் இருக்கிறார். அவரிடம் போய்ச் சொல்லுங்கள், அவர் நல்ல யோசனை தெரிந்தவர், எப்படியாவது யோசனை செய்து, கல்லை இறக்காமல் வேலை பார்ப்பார், எனக்கு ஒன்றும் புரியவில்லை என்றார் அந்த ஆசாரி.

அவர் சொல்லியபடி, குளவாய்பட்டி வந்து முத்து வேல் ஆசாரியிடம் விபரத்தைச் சொன்னார்கள். அவர் வந்து வண்டியைப் பார்த்து—ஐயா, கல்லை இறக்காமல் அச்சைக் கழற்றி வேலை செய்து மாட்டி விடுகிறேன் என்று சொல்லி நடப்பைவிட மூன்று மடங்கு சேர்த்துக் கூலி கேட்டார்.

வண்டியில் வந்தவர்கள், சரி நாம் நடுவழியில் அகப்பட்டுக் கொண்டோம் என்பதை நன்கு தெரிந்து கொண்டு இப்படிப் பொருத்தமில்லாமல் கூலி கேட்கிறார்-கல்லை இறக்கினால்-நம்மால் ஏற்ற முடியாது, என்ன செய்வது என்று சம்மதித்து வேலையைப் பார்த்துத் தரும்படி சொன்னார்கள்,

ஆசாரி அதற்குள்ள யோசனைப்படி முட்டுகள் கொடுத்து அச்சைக் கழற்றிச் சீர் செய்து வண்டியைக் கோர்த்து விட்டார். அவர் கேட்டபடி ருபாயைக் கொடுத்து வண்டி பூட்டிக் கொண்டு வந்தார்கள்.

மறுநாள் இரவு முத்துவேல் ஆசாரி உறங்கும்போது ஒரு வயோதிக சாமியார், 'என்னுடைய வண்டிக்கா மூன்று மடங்கு சேர்த்துப் பணம் வாங்கினாய்? உன்னை என்ன செய்கிறேன் பார் என்று வேலாயுதத்தால் நெஞ்சில் மாறி மாறிக் குத்துவதைப்போல் கனவு கண்டு ஐயோ- ஐயோ! நான் தெரியாமல் செய்து விட்டேன் என்று அலறினாராம்.

வீட்டில் எல்லோரும் எழுந்து அவரைத் தட்டி எழுப்பி ஏன் இப்படி அலறுகிறீர்கள் என்று கேட்டபோது, அவர் எழுந்து உட்கார்ந்து கொண்டு நான் தெரியாமல் செய்து விட்டேன் என்று பலமுறை சத்தம் போட்டுச் சொல்லவே அக்கம்பக்கத்தில் உள்ளவர்களும் ஓடி வந்து வியர்வை எல்லாம் துடைத்து அங்குள்ள பூசாரி ஒருவரை அழைத்து வந்து விபூதி போடச் சொன்னார்கள். அவர் விபூதியை மந்திரித்து-

ஐயா, இவர் நேற்றைய தினம் முருகன் கோவிலுக்குக் கல் ஏற்றி வந்த வண்டியைச் சீர்செய்ய அளவுக்குமேல் கூலி வாங்கி விட்டார். அது அந்த ஆண்டவனுக்குப் பொறுக்கவில்லை. அவர்தான் வேலாயுதத்தால் குத்தி அப்படிச் சொல்லி இருக்கிறார்; அந்த பணத்தைத் திருப்பிக் கொண்டு வந்து கட்டி விடுகிறேன் என்று பிரார்த்தனை செய்து கொள்ளுங்கள், சரியாகப் போகும். இல்லையேல் இன்னும் பதினைந்து நாளுக்குள் உங்கள் குடும்பத்தில் அனேக தாங்க முடியாது நட்டம் ஏற்படும் என்று சொல்லி விபூதி போட்டார்.

இரண்டு நாழிகைக்கு பிறகு ஆசாரிக்கு நிதானம் வந்து நடந்ததை விபரமாகச் சொன்னார்; அதைக் கேட்ட அந்த

ஊர்ப் பெரியவர் கோவிந்தன், ''ஏன்டா உனக்கு இந்த வேலை? அது பொல்லாத தெய்வம் என்று நாடு பூராவும் தெரியும். அதன் கிட்டே உன்னுடைய சின்ன புத்தியைக் காட்டினாய்? கீழையூர் கேட்டில் வண்டியை விடாமல் நிறுத்தியதற்குப் புதுக்கோட்டை மன்னரையே ஓர் கலக்குக் கலக்கி மன்னரே அந்தத் தெய்வத்திற்குப் பயந்து கேட்டுக்கு காசு வாங்காமல் இன்றுவரை வண்டிகள் போகின்றன என்பது சிறுபிள்ளைக்குக் கூடத் தெரியும்.

இவன் புத்தியை அதனிடம்காட்டி இருக்கிறான்; சும்மா விடுவாரா? மரியாதையாக வாங்கிய ரூபாயோடு இரண்டு ரூபாய் அபராதம் சேர்த்துக் கொண்டு வந்து கட்டி விடுகிறேன் என்று பிரார்த்தனை செய்து கொள். இல்லை உன் குடும்பமே அழிந்து போகும் என்றார்.

ஐயா அப்படியே செய்கிறேன் என்று பிரார்த்தனை செய்து கொண்டார் ஆசாரி.

மறுநாளே புறப்பட்டு அம்பலவாணனேந்தல் வந்து கோவிலை விசாரித்துக் கொண்டு கோவிலுக்கு வந்தார்; வண்டியில் வந்த சுப்பையா உடையார்—வாங்கய்யா ஆசாரி என்று வரவேற்றார்; ஐயா இந்த ஆண்டவனின் மகிமையறியாமல் தவறு செய்து விட்டேன்; என்னை மன்னித்து விடுங்கள் என்றார்.

அப்போது கோவிலில் வேலை பார்த்தவர்கள் ஆசாரியைப் பார்த்து என்னையா தவறு செய்தீர்கள்? எங்களுக்கு புரியவில்லை என்றார்கள்.

முத்துவேல் ஆசாரி நடந்த விபரத்தை முழுதும் சொன்னார்; கூடி இருந்த எல்லோரும் ஆச்சரியப் பட்டார்கள்.

ஆசாரி வாங்கிய ரூபாயோடு இரண்டு ரூபாய் அபராதமும் சேர்த்துக் கோவில் படியில் வைத்து வீழ்ந்து வணங்கி, ஆண்டவனே! நான் தெரியாமல் செய்து விட்டேன்; இனி

மேல் இந்தக் கோவில் வேலை முடியும் வரை வண்டிகள் வரும்போது எந்தப் பழுது ஏற்பட்டாலும் கூலி வாங்காமல் செய்து தருகிறேன்; என்னை மன்னித்து விடு என்று சொல்லிச் சாமியைத் தரிசனம் செய்து முத்தப்ப உடையாரிடம் விபூதி வாங்கி அணிந்து கொண்டார். அவரைச் சாப்பிடச் செய்து அனுப்பி வைத்தார்கள்.

அதன் படி வண்டிகள் கல் ஏற்றப் போகும் போதும் திரும்பி வரும் போதும், பட்டறையிலிருந்து ஓடி வந்து வண்டிகளில் ஏதேனும் வேலை இருக்கிறதா என்று கேட்டு— வேலை இருந்தால் கூலி வாங்காமல் வேலை பார்த்துக் கொடுத்து வந்தார்,

கோவில் வேலைதொடர்ந்து நடந்து கொண்டிருந்தது. வேலை தொடங்கி ஆறாவது ஆண்டுக் கடைசியில் கல் வேலை கபோதகவரி சேர்மானத்தின்போது ஸ்தபதியார் நோய் வாய்ப்பட்டு ஊருக்குப்போனவர் நோய் கடுமையாகி —ஸ்தபதியார் வீரமனை ஆசாரி இறைவனடி சேர்ந்தார்.

பாக்கி வேலையைப் பார்க்க—ஸ்தபதியாருக்காகப் பல இடங்களுக்குத் தேடி அலைந்து ஓராண்டிற்கு—பட்டுக் கோட்டை வீராச்சாமி ஸ்தபதியாரைப் பார்த்துப் பேசி முடிவு செய்து—அழைத்து வந்தார்கள்.

அவர் கோவில் வேலையை ஒப்புக் கொண்டு ஆட்களை வைத்து வேலையை ஆரம்பித்தார். வேலையின் விபரத்திற்காக முன்னால் ஸ்தபதி வீரமனை ஆசாரி போட்டிருந்த கோவிலின் வரைபடத்தைப் பார்த்தார் - கர்ப்பக்கிரகம் அர்த்த மண்டபம் இரண்டையும் கல்லால் செய்து முடித்து மேலே கோபுரத்தை கட்டுவதாகவும்—முன்னால் நான்கு தூண்களை நிறுத்தி ஓர் கொட்டகை போடுவதாகப் படம் போட்டிருந்தார், முந்திய ஸ்தபதியார் வீரமனை ஆசாரி.

படத்தை நன்கு பரிசீலனை செய்து பார்த்த வீராச்சாமி ஸ்தபதியார் திருப்பணி கணக்கப்பிள்ளை முத்துச்சாமி உடையாரை அழைத்து விபரம் கேட்டார்.

ஐயா இந்தப் படத்தில் உள்ளபடி கர்ப்பக்கிரகம் அர்த்த மண்டபத்தோடு மூலஸ்தானத்தில் ஓர் கோபுரத்தைக் கட்டி விடுவது, முன்னால் ஓர் கொட்டகை போட்டுக் கொள்வ தாகத்தான் முடிவு செய்து வேலை பார்த்தோம் என்றார்.

ஸ்தபதியார்—ஐயா, நீங்கள் உங்களுடைய பொருளா தார நிலையைச் சொல்லி இருக்கிறீர்கள். அதை அனு சரித்து இப்படிக் கட்ட யோசனை சொல்லி இருக்கிறார்— இது முருகன் ஆலயம் அதிலும் சேத்திரங்களில் உள்ள சகல விசேடங்களும் செய்வதாகச் சொல்லுகிறீர்கள். இப்படியே செய்தால் உற்சவ மூர்த்தியை எந்த இடத்தில் வைப்பது என்றார்.

உற்சவமூர்த்தியை அர்த்தமண்டபத்தில் வைப்பதாக யோசித்திருக்கிறோம் என்றார் முத்துச்சாமி உடையார்.

ஐயா, இங்கு வருடம் இருமுறை திருவிழா, வைரத்தேர், காவடி, கடைசி நாள் குளத்தில் சாமி தீர்த்தம் கொடுப்பது சகல வைபவங்களும் செய்வதாகச் சொல்லுகிறீர்கள். இது இருப்பது கிராமமாக இருந்தாலும் பெரிய சேத்திரத் தோடு ஒப்பிடக் கூடியதாகத் தெரிகிறது.

உன்னதமான உற்சவமூர்த்தி இரு அம்பாளோடு செய்திருக்கிறீர்கள். அந்த உர்சவ மூர்த்தியை, அர்த்த மண்டபத்தில் வைப்பதாக யோசித்திருக்கிறீர்கள். அது சாஸ்திரத்திற்கு முற்றிலும் புறம்பானது. அர்த்தமண்ட பத்தில், எந்த விக்கிரகமும் வைக்கக் கூடாது என்று தான் சாஸ்திரம் கூறுகிறது. ஆகையால் நீங்கள் மகாமண்ட பத்தையும் சேர்த்துக் கட்ட ஏற்பாடு செய்வதுதான் நல்லது என்றார் வீராச்சாமி ஸ்பதியார்.

அதைக் கேட்ட முத்துச்சாமி உடையார் ''ஐயா மகா மண்டபம் என்றால் என்ன? அதை எப்படி அமைக்க வேண்டும் என்று கேட்டார்.

ம்காமண்டபம் என்றால் அர்த்த மண்டபத்திற்கு முன்னால் நான்கு தூண்கள் விட்டு சுற்றிலும் சுவர் எடுத்து—இந்த வியாழமட்டத்தில் நாலு புறமும் பாவுகள் போட்டு— மூலஸ்தானத்தில் ஒரு கோபுரமும்—பிரகாரத்தில் உற்சவ மூர்த்திக்கு ஓர் சிறிய கோவிலும்—முன்னால் நுழைவாயிலில் மேலே சிறிய கோபுரமும் கட்டவேண்டும். அப்படிக் கட்டி விட்டால் இந்தக் கோவில் முழுமையடையும்.

நீங்கள் யோசித்திருக்கிறபடி கட்டினால் சாஸ்திரத் திற்குச் சற்று வித்தியாசப்படும். நீங்கள் இவ்வளவு சிரமப் பட்டு இந்தக் கோவிலைக் கட்டியும் இங்கு மூர்த்திகரம் சரியாக இருக்காது என்றார் ஸ்தபதியார்.

அதைக் கேட்ட முத்துச்சாமி உடையார் மறுநாள் கோவில் பொறுப்பார்கள் எல்லோரையும் கோவிலுக்கு அழைத்து—ஸ்தபதியாரை "ஐயா; என்னிடம் சொன்ன விபரத்தை—எல்லோரிடமும் சொல்லுங்கள்" என்றார்.

ஸ்தபதியார் எல்லோர் மத்தியிலும் மகாமண்டபம் கட்ட வேண்டிய அவசியத்தை விபரமாகவும் எல்லோருக் கும் புரியும் படியும் தெளிவாகவும் சொன்னார்.

முத்தப்ப உடையார் "ஐயா ஸ்தபதியாரே! நாங்கள் இந்தக் கோவிலை கட்ட ஆரம்பித்து ஏழு வருஷங்களா கின்றன, எங்களிடம் பொருள் பலம் இல்லாததால்-சிறுகச் சிறுக இதைச் செய்து கொண்டிருக்கிறோம். நீங்கள் இப்படிச் சொல்லுகிறீர்கள். இதற்கு மேல் நாங்கள் என்ன செய்ய முடியும்" என்றார்.

ஸ்தபதியார்—"ஐயா, நானும் இங்குள்ள நிலைமையை நன்கு புரிந்து கொண்டேன்—உங்களுடைய நிலைமைக்கும். இங்கு நடந்திருக்கும் வேலைக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை.

உங்களுடைய தெய்வ நம்பிக்கையையும் இந்தப் பெரும் முயற்சியையும் எப்படிப் பாராட்டுவது என்றே புரியவில்லை —ஆனால் இவ்வளவு பெரிய வேலை முடித்து விட்டீர்கள்.

இனிச் செய்ய வேண்டிய வேலை அவ்வளவு பெரிதல்ல... இன்னும் சுணங்கினாலும் சிரமப்பட்டாவது அதையும் செய்து விட்டால் கோவில் முழுமை அடையும்—நீங்கள் பட்ட சிரமத்திற்கு நல்ல பலன் கிடைக்கும் என்றுதான் சொல்லுகிறேன்—நான் இந்த ஊர்க்காரன் அல்ல—கோவில் சரியாக இருந்தாலும்—குறையாக இருந்தாலும் எனக்கு எந்த லாப நட்டமும் இல்லை; நான் செய்யும்வேலைக்குள்ள கூலியைப் பெற்றுக் கொண்டு என் ஊருக்குப் போய் விடுவேன்.

நீங்கள் என்னை பார்க்க முதலில் பட்டுக்கோட்டைக்கு வந்து எங்கள் வீட்டில் ஓர் இரவு தங்கி இந்தக் கோவிலின் உற்பத்தி முதல் இன்று வரை விபரமாகச் சொன்னீர்கள்—முன்னால் நடந்தவைகள் இருக்க, இப்போது, கேட்டில்—வண்டியை நிறுத்தியவுடன்—புதுக்கோட்டை மன்னர் பட்ட பாடும் குளவாய்ப்பட்டி ஆசாரி அதிகக் கூலி வாங்கியதற் காகப் பட்ட பாட்டையும், இருவரும் அந்த ஆண்டவனுக்குக் கட்டுப்பட்டு நடப்பதையும் கேட்டவுடன் என் உடம்பே நடுங்கிவிட்டது—இந்தக் கலியுகத்தில் இப்படி ஒரு கண் கண்ட தெய்வம் இருக்கிறதென்றால்—நாமும் நம்முடைய பங்கை அந்த ஆண்டவனுக்குச் செய்ய வேண்டுமென்று உறுதி எடுத்துக் கொண்டுதான்—

அங்கே நான் ஒப்புக் கொள்ள இருந்த இரண்டு வேலை யைத் தவிர்த்து விட்டு இங்கு வந்திருக்கிறேன். சாஸ்திர முறைப்படி என் கடமையைச் சொல்லிவிட்டேன். இதற்கு மேல் நீங்கள் தீர்க்கமாக ஆலோசித்து முடிவு செய்யுங்கள்.

ஒன்றும் அவசரமில்லை தற்போது உள்ள கருங்கல் வேலையை நான் பார்க்கிறேன்; எவ்வளவு காலம் சுணங் கினாலும் இருந்து வேலையை முடித்து விட்டுப் போகிறேன். என்னைப்பற்றி கவலை வேண்டாம் என்றார் ஸ்தபதியார்.

முத்தப்ப உடையார், "சரியய்யா இப்போதுள்ள வேலையைப் பாருங்கள்; நாங்கள் ஊரில் எல்லோரையும்

கலந்து யோசிக்கிறோம்" என்றார். மறு நாள், பர்மாவி லிருந்து கடிதம் வந்தது; சுப்பையா உடையார் எழுதி இருந் தார். கோவில் வேலை எந்த அளவு நடந்திருக்கிறது என்பதைத் தெரிவிக்குமாறும்; தான் இன்னும் ஒருமாதத் திற்குள் ஊருக்கு வருகிறேன் என்றும் எழுதி இருந்தார்.

முத்துச்சாமி உடையார், கோவில் பொறுப்பாளர் களிடம் கடிதத்தின் விபரத்தைச் சொன்னார்.

முத்தப்ப உடையார், "சுப்பையாவும் வரட்டும். பிறகு ஸ்தபதியார் சொன்ன விபரத்தைக் கலந்து முடிவு செய் வோம்-இப்போது அவர் சொன்ன விபரத்தை எழுதிச் சுணங்காமல் வரும்படி தபால் எழுதுங்கள்" என்றார்.

அதன்படி முத்துச்சாமி உடையார் விபரமாகத் தபால் எழுதினார்.

தபாலை பார்த்த-சுப்பையா உடையார் உடன் புறப் பட்டு ஊர் வந்து சேர்ந்தார்; வந்த மறு நாளே கோவி லுக்கு வந்து, நடந்திருக்கும் வேலைகளைப் பார்த்து-கணக்கப்பிள்ளையிடம் விபரம் கேட்டார்.

புது ஸ்தபதியார்-சொன்னவைகளை விபரமாக சொன் னார். அதற்கு என்ன யோசித்திருக்கிறார்கள் என்று கேட்டார் சுப்பையா உடையார்.

இதில் எங்களுக்கு ஒன்றும் புரியவில்லை, நீங்களும் வந்த பிறகு யோசித்து முடிவு செய்வோம் என்று பேசி இருக்கிறோம் என்றார் கணக்கப்பிள்ளை.

அப்படியானால் ஊரில் எல்லோரையும் அழைத்து யோசிப்போமென்று மறுநாள் ஊரில் அனைவரையும் அழைத்துக் கோவிலில் கூடி புது ஸ்தபதியாரையும் அழைத்து-விபரம் கேட்டார்கள்.

ஸ்தபதியார் எல்லோர் மத்தியிலும் தான் முன்னால் சொன்னதை, விபரமாகச் சொன்னார்.

சுப்பையா உடையார்-கோவிலின் தலைமைப் பொறுப்பாளர்; முத்தப்ப உடையாரைப் பார்த்து-என்ன ஸ்தபதியார் இப்படிச் சொல்லுகிறரே இதற்கு என்ன சொல்லுகிறீர்கள் என்றார். முத்தப்ப உடையார், ஸ்தபதியார் சொல்லுவது நல்லயோசனை தான்; செய்யச் செய்ய நன்றாகத் தான் இருக்கும். அதற்குள்ள பொருள் வேண்டுமே.

இது வரையிலும் ஊரில் மூன்று முறை வரிப் போட்டும், சரியாக வசூல் ஆகவில்லை, இனி எப்படிப் பணம் சேர்ப்பது; நன்றாக இருக்கும் என்று வளர்த்திக் கொண்டே போனால் எப்படி முடிக்கிறது என்பதை யோசிக்காமல் பேசுகிறீர்களே என்றார்.

அதைக் கேட்ட மெய்யப்ப உடையார் "ஆரம்பம் முதல் நீங்கள் இப்படித்தான் சொல்லுகிறீர்கள். நம்முடைய பலத்தாலா இந்த கோவில் நடக்கிறது? ஆரம்பத்தில் கருங்கல்லால் கட்டுவோம் என்ற போது, இப்படித் தான் சொன்னீர்கள். கருங்கல்லால் கட்ட நம்மிடம் என்ன தகுதி இருக்கிறது என்று. இப்போது எப்படி முடிந்தது! அப்போது ஆறுவண்டிகள் ஊரில் இருந்தது, இப்போது ஒன்பது வண்டிகள் இருக்கின்றன. இதற்குத் தேவையான கற்கள் பூராவும் வந்து விட்டன. கோபுரத்திற்கு வேண்டிய செங்கல் குத்துக்கல் சதுரக்கல் வகையறா பூராவும் நாமே அறுத்து கால்வாய் போட்டு விட்டோம், இனி மேல் நமக்கு என்ன வேலை இருக்கிறது.

மகா மண்டபம் கட்டினால்தான் கோவில் முழுமை அடையும். சுவாமிக்கும் சரியான மூர்த்திகரம் உண்டு என்கிறார் ஸ்தபதியார். ஆகையால் அப்படித்தான் கட்ட வேண்டும். இன்னும் எத்தனை வருஷமானாலும் ஆகட்டும் என்று சற்று இரைச்சலான குரலில் சொன்னார் மெய்யப்ப உடையார்.

எல்வோரும் அமைதியாக இருந்தார்கள், சுப்பையா உடையார், "மெய்யப்பா — அமைதியாக இரு; இந்தக் கோவில் கட்ட ஆரம்பித்த போது ஓர் நாள் உன்னோடு பேசினேன். அன்று நான் தெரிந்து கொண்டேன் இந்த ஆண்டவனுக்கு-நீ யொரு முக்கியமான தொண்டனென்று, நான் இவ்வருஷம் இங்கு வருவதாக உத்தேசம் இல்லை; இங்கு தபால் எழுதிய முதல் இரவு இந்தக் காட்சியை பர்மாவில் நான் உறங்கும் போது கண்டேன். இப்போது நாம் கூடி இருந்து என்ன பேசுகிறோமோ, இதை அப்படியே பார்த்தபின் நீயும்-முத்தப்ப உடையாரும், ஒருவர்க் கொருவர் வாக்குவாதம் செய்து-நீ கடுமையாகப் பேசும் போது ஒரு வயது முதிர்ந்த சாமியார்-என்ன சுப்பையா வேடிக்கை பார்க்கிறாயா— மெய்யப்பன் சொல்லுகிறபடி கோவிலைக் கட்டுங்கள்; நானும் கூட இருந்து ஒத்தாசை செய்கிறேன். கட்டி முடித்து விடுவோம் என்றார்; நான் விழித்துக் கொண்டேன்.

இப்படிக் கனவு கண்டிருக்கிறோமே என்று தான் தபால் எழுதி விட்டு உடனே புறப்பட்டேன்-இப்போது இங்கு நடப்பதில் ஓர் அணுக்கூட மாற்றமில்லாமல் என் கனவில் தெரிந்தது. இதெல்லாம் என்ன அதிசயமோ தெரியவில்லையப்பா-சுப்பையா வேடிக்கை பார்க்கிறாயா; மெய்யப்பன் சொல்லுகிறபடி கோவிலைக் கட்டுங்கள்; நானும் உங்களுக்கு ஒத்தாசை செய்கிறேன்; வேலையை முடித்து விடுவோம் என்று சொன்னவர் யார் என்பதை யோசனை செய்யுங்கள் என்றார் சுப்பையா உடையார்.

அதைக் கேட்ட எல்லோரும் அமைதியாக இருந்தார்கள்.

இராமசாமி உடையார்-இதில் என்ன யோசிக்க வேண்டியதிருக்கிறது. அப்படிச் சொன்னவர் இந்த ஆண்டவன் தான்-நான் உதவி செய்கிறேன். அப்படியே செய்யுங்கள் என்று அவரே சொன்ன பிறகு-நாம் ஒன்றும் தயங்க வேண்டாம்.

இப்போது ஸ்தபதியார் சொன்னபடி கட்டி முடிப்பதற்கு எவ்வளவு செலவு வரும் என்பதை, அவர் கணக்குப் போட்டுச் சொல்லட்டும்-பணத்திற்கு எப்படி ஏற்பாடு செய்வது என்பதை யோசியுங்கள் என்றார் ராமசாமி உடையார்; சுப்பையா உடையார், நாம் இது வரையிலும் சராசரி வரியாகப் போட்டு வசூல் செய்கிறோம். அப்படிச் செய்வதால், எல்லோரும் சமமாகக் கொடுக்க முடியாமல் இன்னும் அதிகப் பணம், பாக்கி இருக்கிறது. இனி மேல் அப்படி-வரிப்போடாமல் ஒவ்வொருவருக்கும், இருக்கும் சகல ஆஸ்தியையும் கணக்கெடுத்துச் சொத்து மதிப்பில் வரிப் போடவேண்டும். அதில் சேரும் பணம் போகப் பாக்கித் தொகைக்கு முன் போல் வெளி இடங்களுக்குச் சென்று வசூல் செய்து வேலையைப் பார்ப்போம் என்றார்.

இருந்த அனைவரும் இந்தக் கோவில் கட்ட மூல காரணமாக இருந்த சுப்பையா உடையார் அவர்கள்-சொல்லுகிறபடியே செய்வோம் என்று ஸ்தபதியாரிடம், ஐயா மகாமண்டபத்திற்குத் தேவையான சாமான்களையும் கணக்குப் போட்டு அதற்கு எவ்வளவு ரூபாய் வேண்டும் என்றார் சுப்பையா உடையார்.

மறு நாள் எல்லோருடைய சொத்துக்களையும் கணக்கெடுக்க ஆரம்பித்தார்கள்; கணக்கெடுத்து அதற்கேற்ப வரி நிர்ணயம் செய்து வசூலை ஆரம்பித்தார்கள்;

ஸ்தபதியார் மகாமண்டபத்திற்குத் தேவையான கற்களை அந்தந்த அளவுப்படி-கணக்குப் போட்டுக் கொடுத்தார்.

கருங்கல்லைத் திருக்கோவிகரணத்தில் இருந்தும் செம்பரங்கல்லை-குரும்பூரிலிருந்தும் கொண்டு வந்து வேலையை ஆரம்பித்தார்கள்.

சுப்பையா உடையார், பர்மாவுக்குப் புறப்பட்டார்; அப்போது, மெய்யப்ப உடையாரையும் சின்னப்

பொன்னையா உடையாரையும் கூட அழைத்துக் கொண்டு போனார்.

பர்மாவுக்கு போய்ச் சேர்ந்து, சில தினங்களுக்கு பிறகு பல கடைகளுக்கும் போய், கோவில் கட்டுவதற்கென நன்கொடை வசூல் செய்து சேரும் பணத்தை ஊரில் கோவில் பொறுப்பாளர்; முத்தப்ப உடையாருக்கு அனுப்பி வேலையை 'துரிதமாக பார்க்கும்படி தபாலும் எழுதினார். ஊரில் வசூலாகும் பணத்துடன் அங்கிருந்து வரும் பணத்தையும் வைத்துக் கொண்டு வேலையைத் துரிதமாக பார்த்தார்கள்.

ஸ்தபதியார்-முன்னால் நுழைவாயிலுக்குள்ள பெரிய நிலைக்கு அறுகால் படி இதரகற்களையும் முதலில் கொண்டுவரும்படி சாப்தா கொடுத்தார்.

திருக்கோகரணம் போய் சாப்தாப்படி கற்களைஏற்றிக் கொண்டு, அறந்தாங்கி நெடுஞ் சாலையில் இரவில் வண்டிகள் வந்து கொண்டிருந்தன. அதிகமான கல்லுப் பாரம் ஏற்றி இருந்ததால் வண்டிகளை மாட்டின் நடைக்கு விட்டு விட்டு மாட்டின் கயிறுகளைக் கையில் பிடித்தபடி வண்டியின் முன் பாகத்தில் உறங்கினார்கள்; கடையத்துப் பட்டி என்னும் ஊரின் அருகே வரும்போது பொழுது புலர்ந்து அருணோதய நேரம்.

முன்னால் வந்த வண்டிக்குப் பக்கத்தில் ஓர் ஆள் என்னப்பா வண்டிச் சக்கரத்தில் பட்டாவைக் காணோம் நீ உறங்குகிறாய் என்று பெரும் குரலில் சொன்னாராம்; மாட்டின் கயிற்றைக் கையில் பிடித்தபடி உறங்கி அண்ணாமலை உடையார் கயிற்றை இழுத்து பிடித்தபடி, விழித்துப் பார்க்கும் போது எந்த ஆளும் அங்கு இல்லை. யாரையும் காணாமல் இருக்கவே: பக்கத்தில் சக்கரத்தைப் பார்த்தார்; இடது சக்கரத்தில் பட்டா இல்லாமல் இருந்தது.

முன் வண்டி நின்றவுடன் எல்லோரும் விழித்துக் கொண்டு ஏனப்பா வண்டியை நிறுத்துகிறீர்கள் என்ற உடன்,

சக்கரத்தில் பட்டா இல்லாததைப் பார்த்த அண்ணாமலை உடையார் திடுக்கிட்டு எல்லோரும் ஓடி வாருங்களென சத்தமிட பின் வண்டியில் உள்ளவர்கள் ஓடி வந்தார்கள்; சக்கரத்தில் பட்டா இல்லாததைப் பார்த்த வுடன் பதறிப் போய்; அப்படியே வண்டியை அவிழ்த்து விட்டு-என்ன ஆச்சரியமாக இருக்கிறது. பட்டா கழன்று எங்கோ விழுந்து விட்டது. பட்டா இல்லாமல் வண்டி எப்படி வந்தது என்று வண்டி வந்த பாதையை நோக்கிச் சென்றார்கள். ஐந்து பர்லாங்கு தூரத்திற்கு அப்பால் சாலைக்கு அருகாமையில் ஓர் செடியின் மேல் பட்டா கிடக்கவே; அதை எடுத்துக் கொண்டு அவர்கள் வண்டிக்கு வந்து சேரும் போது, அந்த ஊர் மக்களெல்லாம் திரளாகக் கூடி ''என்னய்யா ஆச்சரியமாக இருக்கிறது: வண்டியில் இருப்பதோ கடுமையான கல்லுப்பாரம், இந்த பாரத் தோடு ஐந்து பர்லாங்கு தூரம் எப்படி இந்த வண்டி வந்தது'' என்று பேசினார்கள்.

அப்போது அங்கு வந்த பெரியவர், முத்துக் கருப்பன் ஏண்டா முட்டாள்களே; அவர்கள் யாருக்குக் கல் கொண்டு போகிறார்கள்; அங்குள்ள முருகப் பெருமானுக்குக் கோவில் கட்ட அல்லவா கொண்டு போகிறார்ள்,

அந்த முருகக் கடவுள் ஒரு காலத்தில் பச்சைத் தண்ணீரில் 22 வருஷம் விளக்கு எரித்தார் என்று சொல்லி இருக்கிறார்கள். அவர் ஐந்து பர்லாங்கு என்ன ஐந்து மைல் கூட பட்டா இல்லாமல் ஓட்டுவார்? அப்படிப் பெரிய சக்தி உள்ள தெய்வம் அது. இன்றைக்கும், அந்த சக்தியை நம் போன்ற முட்டாள்களுக்கு; புரியவைக்கத்தான், ஐந்து பர்லாங்கு தூரம் வண்டியை விட்டு; சக்கரத்தில் பட்டாவை காணோம், தூங்குகிறாய் என்றவர் என் பட்டா கழலும் போதே சொல்லி இருக்கலாமே.

இந்த வண்டியிலிருக்கும்; கடுமையான பாரத்திற்கு; பட்டா இல்லாமல்; ஒரு பாகம் உருளுமா; பட்டா கழன்று உடன் சக்கரம் சடசட வென்று நொறுங்கி அல்லவா போயிருக்கவேண்டும்; ஐந்து பர்லாங்கு தூரம் பட்டா இல்லாமல் பாரத் தோடு வண்டி வந்திருக்கிறது; சக்கரத் தைப் பார்த்தால் பட்டாவோடு உள்ள வண்டியைப் போல் இருக்கிறது; இதைப் பார்த்தாவது, நம்பியவர்களுக்கு தெய்வம் கூட இருந்து உதவி செய்யும் என்பதைத் தெரிந்து கொள்ளுங்கடா என்றார் பெரியவர் முத்துக் கருப்பன். பிறகு பெரியவர் முத்துக் கருப்பன்; ஐயா நீங்கள் ஒன்றும் பயப்படவேண்டாம்; அந்த வண்டி அப்படியே நிறகட்டும்; பாக்கி வண்டிகளை சாலை ஓரத்தில் தள்ளி வைத்து விட்டு, மாடுகளுக்கு எங்கள் வைக்கோலில் நிறையக் கொண்டு வந்துபோடுங்கள்.

இருவர் போய் இந்த எரிச்சியில் விபரமான கொல்லு ஆசாரி இருக்கிறான். அவனை அழைத்து வாருங்கள்; அவன் தகுந்த யோசனை செய்து கல்லை இறக்காமல் சக்கரத்தைக் கழற்றிப் பட்டா போட்டு விடுவான்.

நாங்கள் அரிசி காய்கறி விறகு எல்லாம் தருகிறோம்; பாக்கி உள்ளவர்கள் சமையல் செய்யுங்கள்; எல்லோரும் சாப்பிட்டுச் சக்கரம் சீரான உடன் வண்டியைப் பூட்டிக் கொண்டு போகலாம் என்றார்.

அதன்படி இருவர் போய் ஆசாரியை அழைத்து வந்து சக்கரத்தைக் கொண்டு போய்ச் சீர் செய்தார்கள்; பாக்கி உவ்ளவர்கள் கைவசம் இருந்த உணவைக் காலையில் சாப்பிட்டு சமையல் செய்தார்கள்; சக்கரம் பட்டா போட்டுக் கொண்டு வந்து வண்டியில் சேர்த்து விட்டு ஆசாரி போனார், மதியம் எல்லோரும் சாப்பிட்டு இரு வேளைக்குள்ள உணவைப் பாத்திரங்களில் எடுத்துச் கொண்டு மாலையில் வண்டியைப் பூட்டி ஊருக்கு புறப்

பட்டார்கள்; மறுநாள் காலை வந்து பத்து நாழிகைக்கு வண்டிகள் ஊர் வந்து சேர்ந்தன.

மாலையில் வண்டியில் இருந்த கற்களை இறக்கி விட்டு ஊர்ப் பெரியவர்கள், வண்டி நேற்றைய தினம் வர வேண்டியதாயிற்றே, ஏன் சுணக்கம் என்றார்கள்; வண்டியில் வந்த சுப்பையா உடையார் நடந்ததை விபரமாகச் சொன்னார்; எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள்; முத்தப்ப உடையார் "என்னப்பா ஆச்சரியப்படுகிறீர்கள்; நானும் உங்கள் கூட இருந்து ஒத்தாசை செய்கிறேன்" என்று சொன்னதை நாமெல்லாம் புரிந்து கொள்ள இடை இடையே நமக்குக் காட்டுகிறார் என்றார்; இதை எல்லாம் கேட்டுக் கொண்டிருந்த ஸ்தபதியார், ஐயா முதலில் ஒரு முறை இந்தக் கோவிலின் உற்பத்தியை நீங்கள் சொன்ன உடனே இந்த முருகப் பெருமானின் சக்தி பூராவையும் நான் தெரிந்து கொண்டேன்.

அதனால் தான் துணிந்து மகாமண்டபம் கட்டித்தான் ஆகவேண்டுமென்று வற்புறுத்திச் சொன்னேன், அது உங்களுடைய பொருளாதார பலத்தைக் கொண்டு அல்ல.

இந்தக் கலியுக வரதனின், அருள் கடாட்சம் இந்த ஊருக்கு உண்டு. இந்த கோவில் உற்பத்தி முதல் இன்றைய வரைக்கும் நடந்திருக்கும் ஒவ்வொரு வேலையும் அவனுடைய அருளாலும் துணையாலும் தான் நடந்திருக்கிறதே தவிர இவர்களுடைய பொருளாதார பலத்தைக் கொண்டு அல்ல, அவனை நம்பித் தான் சொன்னேன்;

ஐயா; இங்கு ஒரு சிலர் தவிர மற்றவர்களுக்கு வரும் வருமானம் வருஷம் பூராவிற்கும் மூன்று வேளையும் வயிறார உண்டு உடை உடுத்த முடியாத நிலையில் நீங்கள் இருக்கிறீர்கள்; இந்தக் கிராமத்தில் செல்வந்தர் என்று சொல்ல ஒருவர் கூட இல்லை; இப்படி இருக்கும்; ஏழைக் குடிகள் ஒரு கற்கோவில் கட்டுகிறார்கள் என்றால்.

இது பெயரளவிற்கு முருகன் கோவிலே தவிர இதனு டைய உண்மை இங்குள்ள மக்களின் ஒற்றுமையும் தெய்வ நம்பிக்கையும் உலக மக்களுக்கு எடுத்துக் காட்டும் ஓர் அற்புதச் சின்னம் இந்தக் கோவில். முன்னாள் மன்னர்களும், பெரிய ஜமீன்தாரர்களும் தற்போது; நகரத்துச் செட்டியார்களும்மிகப் பெரிய உன்னதமான கற்கோவில்களைக் கட்டி இருக்கிறார்கள்; இங்கு நடப்ப தெல்லாம் தெய்வசக்தியால் நடக்கிறது.

நம் தமிழ் நாட்டில் ஆயிரக்கணக்கான பெரிய தேர்கள் இருக்கின்றன. அதில் திருவாரூர்த் தேர் மிக பெரியதும் உன்னதமானதும் என்பார்கள். அதனால் தான் திருவாரூர்த் தேர் அழகு; திருவிடை மருதூர்த் தெருவழகு என்று ஒரு பழமொழி உண்டு அதைச் செய்தது யார்? சோழ மன்னன்.

நான் சொல்லுகிறேன்; நமது நாட்டில் உள்ள அத்தனை தேர்களையும்விட மிகப் பெரியதும் உன்னத மானதும் இந்த அம்பலவாணனேந்தல் தேர்தான். உலகம் உள்ள அளவும் இப்படியே விளங்கும் தெய்வம் இது என்று நான் நம்புகிறேன், நீங்களும் முழுமையாக நம்பி நடந்தால் உங்களையும் காப்பாற்றி; மேலும் இந்தக் கோவில் வளரும் என்று வீராச்சாமி ஸ்தபதியார் சொன்னார்.

ஸ்தபதியாரின் விளக்க உரையைக் கேட்ட எல்லோரும் முருகப் பெருமானின் அருளையும் பெருமையையும் நன்கு தெரிந்து ஆனந்தமடைந்தார்கள்.

முத்தப்ப உடையார்; ஐயா சொல்லியதை எல்லோரும் கவனமாய் கேட்டீர்களா? இப்படி அருள் வழங்கும் தெய் வத்தை இங்கு கொண்டு வந்து நிறுத்தி நாமெல்லாம் தெய்வத் தொண்டு செய்ய வழி வகுத்துப் போன அருணாசல உடையாரையும் நம் மனதில் தெய்வமாக நினைத்து நாம் எந்த வேலையையும் செய்யவேண்டும்.

சரி, நமது ஊரில் இருக்கும் இந்த ஒன்பது வண்டிகளைக் கொண்டு பாக்கியுள்ள கற்களை கொண்டு வந்து சேர்ப்பது அதிக நாளாகும். ஆகையால், நம் இனத்தவர்கள் பக்கத்து ஊர்களில் இருப்பவர்களிடம்; வண்டி கேட்டால் தரு வார்கள்; அந்த வண்டிகளையும் கொண்டு இந்தக் கோடை யில், தேவையான கருங்கல் செம்பருங்கல் இவைகளைக் கொண்டு வந்து விட்டால் சீக்கிரம் வேலையை முடிக்கலாம் என்றார் முத்தப்ப உடையார்.

அந்த யோசனையை, எல்லோரும் ஏற்றுக் கொண்டு மறு நாளே கோவில் பொறுப்பாளர்கள் பக்கத்துக் கிராமங்களுக்குப் போய் விபரத்தைச் சொல்லிக் கோவி லுக்குக் கல் ஏற்றி வண்டி விடும்படி கேட்டார்கள்.

அவர்கள் எவ்விதத்தடையுமின்றி, ''ஐயா, நீங்களெல் லாம் கொடுத்து வைத்தவர்கள். அதனால்தான் அந்தப் புண்ணியவான், அருணாசல உடையார் அந்தக் கோவிலை உங்களுக்கு உண்டாக்கி வைத்தார். எங்கள் கிராமங்களி லெல்லாம் காலை மாலை கும்பிட ஒரு பிள்ளையார் கோவில் கூட இல்லை. உங்கள் கோவிலையாவது நல்லபடி யாகக் கட்டி முடியுங்கள்; மாதம் ஒரு முறை கார்த்திகைக் காவது வந்து அந்த பகவானைத் தரிசனம் செய்கிறோம்; அந்தக்கோவிலுக்காக கல் ஏற்றிவர மறுப்போம்;இப்போது கோடையில் வண்டிமாடுகளெல்லாம் சும்மா தானிருக் கின்றன. எப்போது வேண்டுமானாலும் வண்டி ஓட்டி வருகிறோம் என்றார்கள்.

அதன்படி ஒவ்வொரு நடையும் ஒவ்வொரு ஊர் வண்டிகளை ஓட்டி வந்து, கோடையில் தேவையான கற்களைக் கொண்டு வந்து சேர்த்தார்கள்.

ஆரம்பத்தில், ஒரு நாள், ஸ்தபதியார் கோவில் பொறுப்பாளர்கள் எல்லோரையும் அழைத்து நமக்குத் தேவைப்பட்ட கற்கள் பூராவும் வந்து விட்டன; சில்லறை யாகப் பாக்கிப்படும் கற்களை அப்போதைக்கப்போது

எடுத்துக் கொள்வோம்; செங்கல் வகையறாக்கள் பூராவும் கால்வாய் போட்டுத் தயாராக இருக்கிறது. ஒரு முக்கிய தகவல் சொல்லத்தான் உங்களை எல்லாம் அழைத்தேன்.

நமது கோவில் கட்ட முகூர்த்தம் செய்து; பத்து வருஷம் முடிந்து விட்டது. கோவில்கள் முகூர்த்தம் செய்தது முதல் பன்னிரண்டு ஆண்டுக்குள் வேலை முடித்துக் கும்பாபிஷேகம் நடக்க வேண்டும்-அப்படிப் பன்னிரண்டு ஆண்டுக்குள் முடியா விட்டால் மறுபன்னிரண்டு ஆண்டு வரை வேலையில் சுணக்கம் ஏற்படும் என்று சாஸ்திரத்தில் சொல்லப்படுகிறது:

அதனால்-கோவில் பொறுப்பாளர்களும் பாக்கி உள்ளவர்களும் உங்கள் சிரமத்தைப் பொருட்படுத்தாமல் இது வரைக்கும் செய்த முயற்சியை விடக் கொஞ்சம் கூடுதலாக முயற்சி செய்து பணம் சேகரித்தால்; நான் கூடுதலாக ஆட்களை அழைத்து வந்து வேலையைப் பார்த்துச் சீக்கிரம் கும்பாபிஷேகத்தைச் செய்து விடலாம்; இந்த விபரத்தைச் சொல்ல வேண்டியது என்னுடைய கடமை; ஆகையால் இதை எல்லோரும் கலந்து ஆவன செய்யுங்கள் என்றார் ஸ்தபதியார்.

அதைக் கேட்ட கோவில் பொறுப்பாளர்கள், "ஐயா, இப்போது நீங்கள் சொல்லிய விபரம் எங்களுக்குத் தெரியாது. இதை நீங்கள் சொல்லியது மிகவும் நல்லது, அதற்கான ஏற்பாட்டை நாங்கள் செய்கிறோம்" என்றார் முத்தப்ப உடையார்.

மறு நாள் ஊரில் உள்ள எல்லோரையும் அழைத்துக் கோவிலில் கூடி-ஸ்தபதியார் சொன்ன விபரங்களை எல்லோர் மத்தியிலும் சொன்னார் கணக்கப் பிள்ளை முத்துசாமி உடையார். எல்லோரும் கலந்து பேசினார்கள்; தலைமைப் பொறுப்பாளர், முத்தப்ப உடையார், மெய்யப்பா; நீ தான் நமது காலஞ் சென்ற அருணாசல உடையாருக்கு அடுத்த ஆள்; எப்படிச் செய்வோம் என்பதை உன் வாயால் சொல்லு என்றார்.

மெய்யப்ப உடையார்-கோவில் கணக்கப்பிள்ளையைப் பார்த்து, இது வரையிலும் ஊரில் போட்டு வசூல் செய்து வரிகளில் வந்தது போகப்பாக்கி உள்ளதை நபர் வாரி யாகக் கணக்கெடுத்து ஒரு வாரத்திற்குள் கொடுங்கள், இங்கு இருக்கும் எல்லோரும் தயவு செய்து, அவரவர் களுக்குள்ளபாக்கியை ஒரு மாதக் கெடுவுக்குள் கொடுத்து விடுங்கள்.

பர்மாவுக்கு; ஸ்தபதியார் சொன்ன விபரத்தை அப்படியே ஒரு தபால் எழுதுவோம் இங்குள்ள முக்கியப் பட்டவர்கள், நம் நாட்டில் பல இடங்களுக்குப் போய் வசூல் செய்வோம். நாம் இது வரையிலும் பட்ட பாடு பாதிதான் இனி மேல் தான், கடுமையாக அவரவர்களும் பாடுபடவேண்டும்.

அப்படி நாம் எல்லோரும் முழு மனத்தோடு பாடு பட்டால்தான் கோவில் வேலையை முடித்து இந்தக் கெடு விற்குள், கும்பாபிஷேகம் செய்து நம் கண்ணால் பார்க்க லாம்; இல்லையேல் மேலும் பன்னிரண்டு ஆண்டுகள் ஆகும் என்கிறார் ஸ்தபதியார்.

அப்படிச் சுணங்கினால் நம் போன்ற வயதானவர்கள் அந்த வைபவத்தைப் பார்க்க முடியாமல் போனாலும் போகலாம்'' என்றார் மெய்யப்ப உடையார்.

முத்தப்ப உடையார்—, ''மெய்யப்பன் சொல்லுவது தான் உண்மை, நாமெல்லாம் இந்தக் கோவிலை அழியாப் பொருளாக, கருங்கல்லால் கட்டி முடித்து கும்பாபிஷேகம் செய்து பார்க்கவேண்டுமென்று தான் இத்தனை ஆண்டுகாலமாக இந்த முருகப் பெருமானே கதி என்று இரவு பகலாக உழைத்துக் கோவிலை உருவாக்கி விட்டோம். இன்னும் கொஞ்ச வேலை தான் பாக்கி இருக்கிறது. அதையும் முடித்துக் கும்பாபிஷேகக் காட்சி யையும் நாம் பார்த்து விட்டால், நம்முடைய ஆத்மா சந்தோசமாகச் சாந்தி அடையும்.

இவ்வருஷம் பருவத்தில் மழை பெய்து நல்ல முறையில் விளைந்திருக்கிறது. அதனால் எல்லோரும், நம்முடைய கோவில் கும்பாபிஷேகத்தைப் பார்த்தே ஆகவேண்டு மென்று உறுதி எடுத்துக் கொண்டு சாணக்காமல் வரிப் பாக்கியைக் கொடுங்கள்.

பர்மாவுக்கு இந்த விபரத்தைக் குறித்துப் பெருமாள் உடையாருக்குத் தபால் எழுதி விட்டு இங்கு நம்மால் முடிந்த மட்டும், வசூல் செய்வோம் அதற்கு மேல் ஆண்டவன் உதவி செய்வார்.

பாக்கி உள்ள வேலைக்கும்-கும்பாபிஷேகச் செல விற்கும், எவ்வளவு பணம் தேவைப்படும் என்பதை ஸ்தபதியார் கணக்குப் போட்டுச் சொல்லட்டும். நம்மிடம் சேரும் பணம் போகப் பாக்கி உள்ளதற்கு என்ன செய்ய லாம் என்பதைப் பிறகு யோசிப்போம் என்றார் முத்தப்ப உடையார்.

கூடி இருந்த ஊர் மக்கள் அனைவரும்; மெய்யப்ப உடையாரும் தலைமைப் பொறுப்பாளரும் சொல்லிய படியே செய்வோமென்று ஒப்புக் கொண்டார்கள்.

அதன்படி ஊரில் பாக்கி இருந்த வரிகள் வசூல் நடந்தது. கோவில் பொறுப்பாளர்களும் ஊர்ப் பெரியவர் களும் தமிழகத்தில் பல இடங்களுக்குச் சென்று நன்கொடை வசூல் செய்து வேலையை வெகு துரிதமாக இரவு பகலாக பார்த்து, 1936 ம் வருஷம் தைமாதத்திற்குள் கோபுரம் முதல் சகல வேலைகளையும் முடித்தார்கள் வர்ணம் தீட்ட வேண்டியது தான் பாக்கி இருந்தது.

# 13. கும்பாபிஷேகம்

ஸ்தபதியார் கணக்கபிள்ளை முத்துச்சாமி உடையார் மேலும், கோவில் பொருப்பாளர்கள் எல்லோரையும் அழைத்து, ஐயா, கோபுர வேலை முடிந்து விட்டது. வர்ணம் தீட்ட வேண்டியதும், கோவில் உள் தளம் கல் சேர்க்க வேண்டியதும் தான், பாக்கி இருக்கிறது. இந்த வேலைகள் சுமார் மூன்றுமாதத்திற்குள் முடித்து விடலாம் ஆகையால் கும்பாபிஷேகத்திற்கு ஆகவேண்டிய ஏற்பாட்டைச் செய்யுங்கள், முதலில் ஐயரிடம் போய் சித்திரையி லிருந்து ஆடிக்குள் கும்பாபிஷேகத் தேதியைக் குறிப்பிட்டு அதற்கு ஆகவேண்டிய வேலைகளை இப்போதிருந்தே செய்க;

உங்களிடம் பணபலம் இல்லாததால் சகல வேலைகளையும் உங்கள் உழைப்பால் செய்கிறீர்கள் அதனால் முன் கூட்டியே ஆரம்பித்தால் வேலை செய்யச் சுலபமாக இருக்கும் என்றார் ஸ்தபதியார்.

எல்லோரும், ''சரி அப்படியே செய்கிறோம்'' என்று, ஒரு நல்ல நாளன்று ஆவுடையார் கோவில் போய் ஐயரிடம் கும்பாபிஷேகத்திற்கு நாள் குறிப்பிடுவதென்று முடிவு செய்தார்கள்.

1936 ஆம் வருஷம் மாசி மாதம்17ம்தேதி முத்தப்ப உடையார், கணக்கப்பிள்ளை முத்துச்சாமி உடையார். மெய்யப்ப உடையார், ரெங்கசாமி உடையார் பொன்னையா உடையார் இவர்கள் ஐவரும் கோவிலுக்கு வந்து சாமி தரிசனம் செய்து ஆவுடையார் கோவிலுக்குப் போய் செல்லையா ஜோஸ்யரிடம் விபரத்தைச் சொல்லி கும்பாபிஷேகத்திற்கு நாள் வைக்கும்படி சொன்னார்கள்.

ஐயர் பஞ்சாங்கத்தை நன்கு பார்த்து வைகாசி 26 ந் தேதி ஒரு நல்ல நாள் அமைப்பாக இருக்கிறது. ஆனியில் நாள் அவ்வளவு, சரியாக இல்லை, இந்தத் தேதிக்குக் கோவில் வேலை முடித்துக் கும்பாபிஷேகத்திற்குத் தேவை யான பொருள்கள் தயார் செய்து விடமுடியுமா என்பதை யோசியுங்கள்.

முத்தப்ப, உடையார், "ஆவணியில் பாருங்களேன்" என்றார், ஐயர் ஆவணியில் தட்சணாயணம் வந்து விடு கிறது. கும்பாபிஷேகம் உத்தராயணத்தில் செய்வது தான் விசேடம், அதற்குத் தான் இவ்வளவு நேரம் யோசனை செய்தேன் என்றார். மெய்யப்ப உடையார், "சாமி எங்கள் முருகப் பெருமான் கடைசி வரையிலும் எங்களைக் கடுமையாகச் சோதிப்பது அவருடைய வேலை.

அந்தச் சோதனைகளை சந்தோஷமாக ஏற்று நடப்பது எங்கள் கடமை, ஆகையால், உத்தராபணத்தில் செய்வது தான் விஷேடமென்றால் அதற்கேற்ப நாளை குறிப் பிடுங்கள் எங்கள் கஷ்டத்தைப் பார்க்க வேண்டாம்" என்றார்.

வைகாசி 26 ஆம் தேதி தான் நல்ல பொருத்த மாக இருக்கிறது; அதிலே கும்பாபிஷேகம் செய்யுங்கள் என்றார் ஜோசியர்.

முத்துச்சாமி உடையார் "சரி. அந்த நாளையே வைத்துப் பத்திரிகை அடிக்க வேண்டிய முறைப்படி வாச கங்களை எழுதிக் கொடுங்கள்" என்றார்.

1936 தாது வருஷம் வைகாசி 26 ஆம் தேதி ஞாயிற்றுக் கிழமை நாள் வைத்து பத்திரிகைக்குத் தேவையான வாசகங்களை முறைப்படி எழுதிக் கொடுத்தார். செல்லையா ஜோசியர்.

அதைப் பெற்றுக் கொண்டு ஊருக்கு வந்து ஊரில் அனைவரையும் அழைத்துக் கும்பாபிஷேகத்திற்கு நாள்

வைத்திருப்பதைப் படித்துக் காண்பித்தார், கணக்கப் பிள்ளை முத்துசாமி உடையார்.

எல்லோரும் சந்தோசப்பட்டு அதன்படியே செய்வோம் என்றார்கள்-ஸ்தபதியாரை அழைத்து. நாள் வைத்திருப் பதைக் காண்பித்து; பாக்கி உள்ள வேலையைத் துரிதமாக பாருங்கள் என்றார் முத்தப்ப உடையார்.

ஸ்தபதியார், சாமான்கள் தயாராக இருப்பதால் என் வேலையை 15 தினங்கள் முன்னதாக முடித்துத் தருகிறேன் என்றார்.

கும்பாபிஷேகத்திற்கு வேண்டிய பணத்தை எப்படி வசூலிப்பது என்பதைக் கலந்து பேசி-குடி ஒன்றுக்கு இருபத்து ஐந்து ரூபாய் ரொக்கமும் 15 மரக்கால் நெல்லும் ஒரு மரக்கால் துவரம் பருப்பும்-பக்கா ஒருபடி உளுந்தம் பருப்பும் வரி நிர்ணயம் செய்து முதலில் ரொக்கத்தை சித்திரை மாதம் 15 க்குள் கண்டிப்பாகக் கொடுத்து விடுவ தென்று-பாக்கிப் பொருள்களை வைகாசி மாதம் 10 ம் நாள் ஒரே தடவையில் கொடுக்க வேண்டுமென்றும் முடிவு செய்து இதிலிருந்து நமது கும்பாபிஷேகம் முடியும் வரை நம் ஊரில் உள்ள ஆண் பெண் அனைவரும் எந்தக் கணக்கும் பார்க்காமல் இரவு பகலாக வேலைபார்த் தால்தான், கும்பாபிஷேகத்தை முறையோடு செய்து முடிக்கலாம் என்றும் சொன்னார், மெய்யப்ப உடையார்.

எல்வோரும் சரி என்று சம்மதித்துப் பணம் வசூல் செய்து வேலைகளைத் துரிதமாகப் பார்த்து வந்தார்கள்.

கோவில் பொறுப்பாளர்கள்; கும்பாபிஷேக பத்திரிகை யையும் நன்கொடை வசூல் ரசீது புத்தகமும் அச்சடித்து கொண்டு, பல ஊர்களுக்கும் போய் பத்திரிகை கொடுத்து நன்கொடை வசூல் செய்து வந்தார்கள்.

சித்திரை 15 ஆம் தேதி கோயில் பொறுப்பாளர்கள் கூடி கோவில் வேலை முடிவடைந்து விட்டது. இனிமேல்

கும்பாபிஷேகத்திற்கு வேண்டிய சாமான்கள் தயார் செய்ய வேண்டும். ஆகையால்; அதற்கு வேண்டிய சாமான்கள் சிட்டை எழுதிக் கொடுக்கவும் பொறுப்புடன் இருந்து கும்பாபிஷேகத்தை நடத்தவும் விபரம் தெரிந்து ஓர் ஆள்வேண்டும், அதற்கு யாரை அழைப்பது என்பதை யோசியுங்கள் என்றார் மெய்யப்ப உடையார்.

கோவில் கணக்கப்பிள்ளை, முத்துச்சாமி உடையார் சொன்னார். நம் ஊருக்கு வரும் வெண்மணி கணேசக் குருக்களை இப்போதே கடிதம் எழுதி வரவழைத்து, கும்பாபிஷேகம் முடியும் வரை இங்கு தங்கி; முறைப்படி நடத்தி வைக்கும்படி ஏற்பாடு செய்யலாம் என்று நினைக்கிறேன். அவர். 80 வயதுக்கு மேற்பட்ட முதியவர். வேத ஆகமங்கள் நன்கு கற்றுணர்ந்தவர். அனேக கும்பாபிஷேகங்கள் செய்து அனுபவம் உள்ளவர். அவர் முன்னொரு சமயம் இங்கு வந்த போது. என்னிடம் இந்த முருகப் பெருமான் கிருபையால் கோவில் வேலை முடிந்து கும்பாபிஷேகம் வரை நான் இருந்தால் முன்னதாகவே நான் வந்திருந்து ஆகம முறைப்படி சிறப்பாகக் கும்பாபிஷேசத்தை நடத்த வேண்டுமென்று நினைக்கிறேன் அந்தப் பாக்கியம் எனக்கு கொடுத்து வைத்திருக்குமோ என்னவோ? உங்களுக்கு அவன் அருள் பாலிப்பது போல் என் மீதும் அவன் அருள் இருந்தால் கிடைக்கும் என்று சொன்னார்.

இடை இடையே தபால் எழுதிக் கோவில் வேலை எப்படி நடக்கிறது. எந்த அளவு வேலை நடந்திருக்கிறது என்று கேட்டிருந்தார். இவர் தபாலுக்கு நானும் அவ்வப் போது பதில் எழுதி இருக்கிறேன் என்றார் கணக்கப் பிள்ளை.

அதைக் கேட்டவுடன், மெய்யப்ப உடையார் நீங்கள் சொல்லுவதுதான் சரி, அவர் நம் ஊருக்கு அடிக்கடி வருபவர், நம்மைப் பற்றியும் நமது கோவிலைப் பற்றியும்

நன்கு தெரிந்தவர், அதிலும் நமது முருகப் பெருமான் மீது அதிக பக்தியும் நம்பிக்கையும் உள்ளவர். முன்பு வந்திருந்த போது நமது உற்சவ மூர்த்தி அமைப்பைப் பார்த்து ரொம்பப் பெருமைப் பட்டார். நானும் அனேக சிவாலயங் களுக்குப் போயிருக்கிறேன். இப்படி அமைப்புள்ள விக்கிர கத்தை நான் பார்த்ததில்லை என்று சொல்லி உங்களிடம் சொன்னது போல்-என்னிடமும் மெய்யப்பா கோவிலைச் சீக்கிரம் கட்டி முடியுங்கள், உங்கள் கோவிலுக்கும் நானிருந்து கும்பாபிஷேகம் செய்து வைக்கலாமென்று நினைக்கிறேன். பகவான் தயவிருந்தால் கிடைக்கும் என்றார்.

ஆகையால் இப்போதே தபால் எழுதி நீங்கள் வந்திருந்து தான் வேண்டிய சாமான்களுக்குச் சிட்டை எழுதிச் சாமான்கள் வாங்கவேண்டும். ஆகவே சுணங் காமல் உடனே புறப்பட்டு வரவும் என்று எழுதிக் கொஞ்சம் பத்திரிக்கையும் அனுப்பி விடுங்கள் என்றார் மெய்யப்ப உடையார்.

அதன்படி விபரமாகத் தபாலும் பத்திரிகையும் வெண் மணிக்கு அனுப்பி வைத்தார் கணக்கப் பிள்ளை.

தபாலையும் பத்திரிகையும் பார்த்த குருக்கள் தன் மகன் சுப்பிரமணியனையும் கூட அழைத்துக் கொண்டு சித்திரை மாதம் 27 ஆம் தேதி அம்பலவாணனேந்தல் வந்து சேர்ந்தார்.

எல்லோரும் அவரை அன்புடன் வரவேற்றார்கள், அவரும் எல்லோரையும் ஆசீர்வதித்து. சாமி தரிசனம் செய்து கோவிலைச் சுற்றிப்பார்த்து அமர்ந்தார்.

மறு நாள் எல்லோரும் இருந்து, கும்பாபிஷேகத் திற்குத் தேவையான சாமான்களுக்குச் சிட்டை எழுதும்படி சொன்னார்கள்-அப்போது கணேசக் குருக்கள் "அப்பா இந்த ஊரில் உள்ள ஆண் பெண் அனைவரும் ஒரே

மனதாக இந்த முருகக் கடவுள் தான் நம்முடைய உடலும் உயிரும் என்று முழு நம்பிக்கையோடு 16 ஆம் ஆண்டு காலம் இடை விடாது இரவு பகலாக உழைத்து, இந்த பெருமானின் உதவியோடு பார்த்தவர்கள் அதிசயிக்கும்படி கருங்கல்லால் இந்த கோவிலை கட்டி முடித்து கும்பாபி பிஷேகத்திற்குச் சிட்டை எழுதப் பேர்கிறோம்.

நேற்றைய தினம் நான் இங்கு வந்து சேர்ந்தேன். இந்தக் கோவிலின் அமைப்பையும் அழகையும் பார்த்து அசந்து போய் விட்டேன். எனக்கு வயது 81 முடியப் போகிறது. என்னுடைய 31 வது வயது முதல் அனேக புதுக் கோவில்களுக்கு நான் முன்னின்று கும்பாபிஷேகம் செய்திருக்கிறேன். அவைகளில் எல்லாம் காணாத அருள் பொலிவு இங்கே என் மனக்கண்ணிற்குத் தெரிகிறது என்றார் குருக்கள் எத்தனையோ பெரிய கற்கோவில்கள் இருக்க, எங்களது சுவாமி சிறிய-சுமார் 1700 சது அடி விஸ்தீரணத்தில் உள்ள கோவிலை இப்படிப் புகழ்ந்து பாராட்டுகிறீர்களே'' என்று சொன்னார் மெய்யப்பப்ப உடையார்.

''கும்பாபிஷேகம் மிக முக்கியம் அதனால் வேத ஆக மங்கள் நன்கு கற்றுணர்ந்த வயது முதிர்ந்த-21 பிரா மணர்களை அழைத்து வந்து; யாக சாலையில் நம்முடைய முழு உழைப்பையும் செலுத்தி வேத ஆகமங்களை விடாமல் முறைப்படி ஜெபித்து திருக்குட நீராட்டுச் செய்யவேண்டு மென்று நான் கருதுகிறேன் என்றார் கணேச குருக்கள்.

அதைக் கேட்ட எல்லோரும் சந்தோசப்பட்டு ''சாமி இதற்காகத் தானே முன் கூட்டியே தங்களை வரவழைத் தோம். எங்களுக்கு இதைப் பற்றி எதுவும் தெரியாது. எப்படிச் செய்வது நல்லதோ அதன்படி செய்யுங்கள். செலவைப் பற்றியும் உழைப்பைப் பற்றியும் யோசிக்க வேண்டாம். உங்கள் சொற்படி நடக்க நாங்கள் தயாராக இருக்கிறோம்'' என்றார் கணக்கப்பிள்ளை முத்துச்சாமி உடையார்.

குருக்கள்-கும்பாபிஷேகத்திற்குத் தேவையான-சகல சாமான்களுக்கும் சிட்டை எழுதிக் கொடுத்தார்; சிட்டைப் படி சாமான்கள் தயார் செய்து முடித்து, நெல் அரிசி பருப்பு புளி மிளகாய் இவைகளை ஊரில் வசூல் செய்து அவைகளை முறைப்படி பக்குவப்படுத்தினார்கள்.

கோவிலின் பின்புறம் பந்தல் அமைத்து அலங்காரம் செய்து-வடபுறம் மிக உன்னதமாக யாக சாலையும்கொட்டகையும் அமைத்தார்கள். அடுத்து பந்தி ஒன்றுக்கு சுமார் ஆயிரம் ஆள் சாப்பிடக் கூடிய கொட்டகையும் சமையல் கொட்டகையும் கட்டி முடித்தார்கள். வைகாசி மாதம் 16 ஆம் தேதி மாலையில் பக்கத்து ஊரில் உள்ள ஒருவர் கோவிலுக்கு வந்து-கணக்கப்பிள்ளையைத் தனிமையில் அழைத்து; ஐயா உங்கள் மேல் பொறாமை கொண்ட ஒரு துரோகி பெரும் ஆபத்தை உண்டாக்கத்திட்டம் போட்டு விட்டான் என்று உளறினார். கணக்கப்பிள்ளை, "என்னப்பா செய்தியே சொல்ல முடியாமல் உளறுகிறாய்,பயப்படாமல் சொல்லு" என்றார். "ஐயா எனக்குச் சொல்லவே நாக் கூசுகிறது: நீங்கள் கோவில் கட்டிக்கும்பாபிஷேகம் செய்வது ஒருவனுக்குப் பொறுக்கவில்லை. உங்கள் கும்பாபிஷேகத்தை நடக்க விடாமல். அன்றைய கூட்டத்தில் பெரும் கலகத்தைச் செய்யத் திட்ட மிட்டு அதற்கான ஏற்பாடுகள் செய்து முடித்து விட்டான். இந்த விபரம் இன்று மதியம் தான் என் காதுக்கு எட்டியது—சாப்பிடக் கூட இல்லாமல் உடனே புறப்பட்டு வந்தேன் என்றார். அதைக் கேட்ட கணக்கப்பிள்ளை அப்படியே மயக்கம் போட்டு விழுந்து விட்டார். எல்லோரும் ஓடி வந்து முகத்தில் தண்ணீர் தெளித்து விசிறியால் வீசினார்கள்; மயக்கம் தெளிந்து எழுந்தார், எல்லாம் பதறிப் போய் என்ன—என்ன என்று கேட்டார்கள்.

ஒன்றுமில்லை எனக்குச் சில சமயம் இப்படி மயக்கம் வருவது பழக்கம் தான் இன்று கொஞ்சம் கூடுதல் வேறு ஒன்றுமில்லை என்று சொல்லி விட்டு;

இரவு; முத்தப்ப உடையார்; மெய்யப்ப உடையார் அழகப்ப உடையார் பொன்னையா உடையார்—ரெங்க சாமி உடையார் இவர்கள் ஐவரையும் அழைத்து மாலையில் தான் அறிந்த தகவலைச் சொன்னார் கணக்கப்பிள்ளை, அதைக் கேட்ட எல்லோரும் பெரும் அதிர்ச்சிக் குள்ளாகி நெடு நோத்திற்குப் புறகு ஒன்றும் புரியாமல் வீட்டுக்குப் போனார்கள்.

கணக்கப்பிள்ளை முத்துச்சாமி உடையார் வீட்டுக்குப் போயும் தூக்கம் வரவில்லை—என்னப்பா முருகா; எங்களை இந்தக் கடைசி நோத்தில் இப்படிச் சோதிக் கிறாய், என்று அழுதார்; முருகனை எண்ணியவாறு உறங்கினார். அப்போது பெருமான் அவர் கனவில் தோன்றி: நானிருக்கும் போது நீ ஏன் அழுது புலம்பு கிறாய். அவனை என்ன செய்கிறேன் என்பதை வெகு விரைவில் காண்பிக்கிறேன். நீங்கள் பயப்படவேண்டாம். அவனை நான் பார்த்துக் கொள்கிறேன்.

உங்கள் பயம் தெளிய தெற்கே இராமனாதபுரம் ஜில்லாவில் இருக்கும்—உங்கள் குலத்தலைவனை அழைத்து வந்து காரியத்தை நடத்துங்கள் என்று சொல்லி மறைந் தார்.

திடீரென்று விழித்து எழுந்து உடம்பெல்லாம் நடுங்க விரைந்து போய், மெய்யப்ப உடையாரையும் முத்தப்ப உடையாரையும் எழுப்பித் தான் கண்ட கனவைச் சொன் னார் அவர்கள் யோசித்து—தெற்கே ராமனாதபுரம் ஜில்லாவில் இருக்கும், நம் குலத்தலைவன் அதங்குடி முதலாளிதான், பொருத்தமான ஆளைத்தான் சொல்லி இருக்கிறார். இனி ஒன்றும் பயப்படவேண்டாம், என்று எண்ணி அதங்குடி சென்று முதலாளியைக் கும்பாபிஷேகத் திற்கு அழைத்தார்கள்.

கும்பாபிஷேகத்திற்கு ஏழு தினங்கள் முன்னதாக யாக சாலையை ஆரம்பித்துக் காலை மாலை ஆகம

முறைப்படி மந்திரங்கள் ஜெபித்து நெய்வேத்திய ஆரா தனைகள் செய்து நடந்து கொண்டு இருந்தது. கும்பாபி ஷேகத்திற்கு. இரண்டு தினங்கள் முன்னதாக அதங்குடி முதலாளி சாமினாத உடையார் வந்தார். அவர் வருவதை முன்னதாக அறிந்த பெரியவர்கள், ஊர் ஆண் பெண் அனைவரும்—மேளதாளம் முழங்க ஒரு மைலுக்கு அப்பால் போய் வரவேற்று அழைத்து வந்தார்கள். முதலாளி வந்த உடன் குளத்தில் கால் கை சுத்தம் செய்து கோவிலில் சாமி தரிசனம் செய்து முன் கொட்டகையில் அமர்ந்தார்.

1936—தாது வருஷ வைகாசி மாதம் 26 ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை காலை உதயாதி நாழிகை 12½ க்கு மேல் 16 நாழிகைக்குள் திருக்குட நீராட்டுச் செய்தார்கள்.

நாட்டு மக்கள் பெருந்திரளாக வந்து கூடிபகவான் முருகப் பெருமானின் ஆலய கோபுர உச்சியில் நடந்த திருக்குட நீராட்டைப் பார்த்துத் தரிசனம் செய்து ஆனந்த மடைந்தார்கள். மாலை-6 மணிக்குத் திருவிடை மருதூரர் வயது முதிர்ந்த பெரியவர், மணிவாசக் குருக்கள். கந்த புராணக் கதையை மிக அருமையாக; எல்லோரும் புரிந்து கொள்ளும் முறையில் தெளிவாக உபன்யாசம் செய்தார். இரவு 9½ மணி வரை சொற் பொழிவு நடை பெற்றது.

வெண் மணிப் பெரியவர் கணேசக் குருக்கள் ஏராளா மான புஷ்பங்களைக் கொண்டு-வெகு உன்னதமாக முருகக் கடவுள் மக்களுக்கு நேரில் காட்சி கொடுப்பது போல் அலங்காரம் செய்து இரவு 10½ மணிக்கு சாமி வீதி உலா புறப்பட்டு உயர்ந்த இரண்டு சதை மேளவாத்தியம்—பியாண்டு வாத்தியம் முழங்க வீதி உலா வந்தது.

மக்கள் பார்த்து ரசிக்கவும் மக்கள் கூட்டத்தைத் தனித் தனியே பிரிக்கவும் மயிலாட்டம் கரகாட்டம் இரண்டு இடங்களில் நடந்து காலை 6½ மணிக்கு சுவாமி கோவிலில் சேர்க்கையானது.

அப்பொழுது ஒரு செய்தி வந்தது. கும்பாபிஷேகத்தில் கலகத்தை மூட்ட முயன்றவனை முருகன் அழித்து விட்டான் என்பதே அச் செய்தி. நேற்றுக் காலை சுமார் 10 மணிக்கு எவ்வித உடல் கோளாறும் இல்லாமல் இருந்தவன் திடீரென்று வயிற்றை வலித்து நெஞ்சை அடைத்துக் கொண்டு இறந்து விட்டான் என்ற செய்தி கேட்டு அனைவரும் வியந்தனர்.

## அதங்குடி முதலாளி பேசலானார்:

கோவிலைக் கல்லால் கட்டி விட்டோம்-இனி கோவிலைப் பற்றிய கவலை தீர்ந்து விட்டது. கோவில் நடை முறைகள் குறையாமலும் மேலும் பொலிவுடன் வளர வேண்டும்.

# 14. மண்டலாபிஷேகம் லெட்சார்ச்சனை

நான் புறப்பட்டு நான்கு தினங்கள்ாகிளறன. இது வரை எத்தனை பேர் அங்கு வந்து காத்திருக்கிறார்களோ, ஆகையால் நான் காலையில் புறப்படுகிறேன்.

48 வது நாள் மண்டலாபிஷேகம் வரை வெண்மணி பெரிய குருக்களையும் அவர் பையனையும் இங்கே தங்க வைத்து—நடக்க வேண்டியவைகளை முறைப்படி விசேஷமாகக் செய்யவேண்டும். மேலும் எனக்கு ஓர் ஆசை; மண்டலாபிஷேகத்திற்கு முன் ஆரம்பித்து அன்று முடிகிறார்போல ஒரு லெட்சார்ச்சனை செய்யவேண்டுமென்று அப்படிச் செய்யலாமா என்று நாளை பெரிய குருக்களைக் கலப்போம். சரி-நேரம் ஆகிவிட்டது படுங்கள் காலையில் பேசுவோம் என்றார் முதலாளி முதலாளியை ஜமுக் காலத்தில் படுக்கவைத்து பாக்கி. எல்லோரும் துண்டை விரித்துக் கொண்டு படுத்தார்கள்,

மறு நாள் காலையில் பெரியவர்களெல்லாம் கோவிலுக்கு வந்து குருக்கள் ஐவரை அழைத்து விபரம் கேட்டார் முதலாளி.

மண்டலாபிஷேகத்திற்கு உள்ள முறைகளைச் சொன்னார் குருக்கள்.

சரி அதன்படி சாமான்களை வாங்கி வரச் சொல்லுகிறேன். தாங்களும் பையனும் இருந்து முறைப்படி மண்டலாபிஷேகத்தை முடித்து பின் ஊருக்குப் போகலாம் என்றார் முதலாளி.

''உங்கள் சொற்படி நான் இங்கே இருந்து சாஸ் திரப்படி விசேஷமாக மண்டலாபிஷேகத்தை முடித்துப் பின் ஊருக்கு போகிறேன். என்றார் குருக்கள்.

''சாமி; மண்டலாபிஷேகத்திற்கு முன் ஆரம்பித்து அன்று முடிக்கிறார்ப் போல—ஓர் லெட்சார்ச்சனை செய்யலாமா!'' என்று கேட்டார் முதலாளி.

அப்படிச் செய்வது பெரிய விசேடம், நானும் அதை நினைத்தேன்-அதிகம் இவர்களுக்குத் தொல்லை கொடுக்கக் கூடாது. என்று தான், நான் சொல்லவில்லை தாராள மாகச் செய்யலாம். சாப்பிடும் போது நிறைய நெய் சேர்த்துக் கொள்வது போலத்தான் 15 தினங்கள் முன்ன தாக ஆரம்பித்து அவசரமில்லாமல் அமைதியாகச் செய் வோம் என்றார் குருக்கள்.

சரி அதற்குள்ள பணத்தைக் கொடுத்துப் போகிறேன். சாமான்களை வாங்கி வந்து செய்யுங்கள்.

முடிந்தால் கடைசி நாளன்று வந்து விடுகிறேன் என்றார் முதலாளி.

முடிந்தால் என்று சொல்லாமல் அவசியம் இரண்டு தினங்களாவது முன்னால் வாருங்கள் என்றார் குருக்கள்.

எல்லோரும் மதியசாப்பாட்டிற்குச் சென்றார்கள். சாப்பாடு முடிந்து கோவிலுக்கு வந்து சாமி தரிசனம் செய்து முதலாளி சாமினாத உடையார் வில் வண்டியில் ஊருக்குப் புறப்பட்டார். ஊர்ப் பெரியவர்களெல்லாம் ஊர் தெற்கு எல்லை வரை சென்று வழியனுப்பி வைத்தார்கள்.

தினம் கோவிலில்-விசேட அபிஷேக ஆராதனை நடந்து ஊர் மக்களும் பக்கத்துக் கிராமமக்களும் வந்து தரிசனம் செய்தார்கள்.

கும்பாபிஷேகம் நடந்த 30 ஆது நாள் வேத ஆகமங்கள் நன்கு தெரிந்து நாலு பிராமணர்களை அழைத்து வந்து லெட்சார்ச்சனையை ஆரம்பித்து தினம் காலை மாலை முறைப்படி அமைதியாக நடத்தினார்கள். 47 ஆது நாள் மாலையில் முதலாளிசாமி ஐாத உடையார் வந்தார்.

48 ஆது நாள் காலையில் லெட்சார்சனையை முடித்து-மிக சிறப்பாக அபிஷேகங்கள் நடத்தி கும்பாபிஷேகம் போல் ஏராளமான மக்கள் பெருந் திரளாக வந்து பகவான் முருகக் கடவுளுக்குத் தேங்காய் பழம் பூமாலையுடன் அர்ச்சனை செய்து தரிசனம் செய்தார்கள்.

சுபம்